# சங்க இலக்கியச் சொல்லாக்க நெறிமுறைகள்

(பத்துப்பாட்டு)

முனைவர்(பிஎச்.டி.)பட்டத்திற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**தி.அ. இரமேஷ்**

நெறியாளர்
முனைவர் **ஜே.ஆர். இலட்சுமி**
தமிழ் இணைப்பேராசிரியர்



**தமிழ்த்துறை**
*மாநிலக் கல்லூரி(தன்னாட்சி)*
*சென்னை 600 005*
*ஏப்ரல் 2013*

முனைவர் **ஜே.ஆர். இலட்சுமி**
தமிழ் இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி(தன்னாட்சி)
சென்னை 600 005

## நெறியாளர் சான்றிதழ்

"**சங்க இலக்கியச் சொல்லாக்க நெறிமுறைகள்**(பத்துப்பாட்டு)" என்னும் தலைப்பில் உள்ள இந்த ஆய்வேடு சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு முழுநேர முனைவர் பட்டம் பெறுவதற்காக எனது மேற்பார்வையில் திரு தி.அ. இரமேஷ் என்பவர் தம் ஆய்வுக் காலத்தில் (2010 - 2013) ஆய்வு நிகழ்த்தி வழங்கியதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப்பெறவில்லை என்றும் இவ்வாய்வேடு அவர் தம் சொந்த முயற்சியில் உருவானது என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : சென்னை
நாள் : 16-4-2013

நெறியாளர்
ஜே. ஆர். இலட்சுமி
**(ஜே.ஆர். இலட்சுமி)**

**Dr. J.R. LETCHUMI**
M.A., M.Phil., M.Ed., Ph.D., (Tamil), M.A., (History & Tourism)
Ph.D., (Education), PGDJMC, PGDFL, PGDCE, PGDCH, PGDTA
Associate Professor
Advanced Centre For Tamilology
Presidency College (Autonomous), Chennai - 600 005

**தி.அ. இரமேஷ்**
முனைவர்பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி(தன்னாட்சி)
சென்னை 600 005

# ஆய்வாளர் உறுதிமொழி

"**சங்க இலக்கியச் சொல்லாக்க நெறிமுறைகள்**(பத்துப்பாட்டு)" என்னும் தலைப்பில் உள்ள இந்த ஆய்வேடு சென்னைப் பல்கலைக்கழகத்தில் முழுநேர முனைவர் பட்டம் பெறுவதற்காக மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறையில் எனது ஆய்வுக் காலத்தில் (2010 - 2013) ஆய்வு நிகழ்த்தி எழுதப்பட்டதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப்பெறவில்லை என்றும் இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம் : சென்னை
நாள் : 16/04/2013

ஆய்வாளர்
(தி.அ. இரமேஷ்)

# நன்றியுரை

சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறையில் முனைவர்பட்ட ஆய்வினை நிகழ்த்த அனுமதி வழங்கிய சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும் ஆய்வை நல்ல முறையில் நிகழ்த்த இடமளித்த மாநிலக் கல்லூரிக்கும் முதற்கண் என் நன்றி. மாநிலக் கல்லூரியின் முதல்வர் அவர்களுக்கும் தமிழ்த்துறைத் தலைவர் அவர்களுக்கும் என் மரியாதைக்குரிய நன்றியைச் சமர்ப்பிக்கிறேன்.

என்னை ஆய்வு மாணவனாக ஏற்றுக் கொண்டு தலைப்பைத் தெரிவு செய்தது முதல் ஆய்வை நிறைவு செய்யும் வரை நான் சுதந்திரமாகச் செயல்படவும் ஆய்வை நன்முறையில் செய்யவும் ஆக்கமும் ஊக்கமும் தந்து இன்முகம் மாறாது நெறிப்படுத்திய நெறியாளர் முனைவர் ஜே.ஆர். இலட்சுமி அம்மா அவர்களுக்கு என் இதயம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுக் காலங்களில் அன்புடன் அறிவுரைகள் வழங்கிய மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறை பேராசிரியர்களுக்கும் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறை உதவிப் பேராசிரியர்கள் முனைவர் ய. மணிகண்டன், முனைவர் ஆ. ஏகாம்பரம் ஆகியோருக்கும் ஆய்வின் பொருட்டு ஆலோசனை வழங்கிய பேராசிரியர் வ.ஜெயதேவன் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். தமிழ்த்துறை அலுவலகப் பணியாளர் திரு. சக்தி அவர்களுக்கும் மாநிலக் கல்லூரி பொது அலுவலகப் பணியாளர்களுக்கும் என் நன்றி.

முனைவர்பட்ட ஆய்வு நிகழ்த்திய காலங்களில் உதவித்தொகை வழங்கிய செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்திற்கும் அந்நிறுவனத்தின் பணியாளர்களுக்கும் முனைவர் அன்னிதாமசு அவர்களுக்கும் என் நன்றியைக் கூறிக்கொள்கிறேன்.

என்னுடைய வளர்ச்சியின் அனைத்து நிலைகளிலும் உறுதுணையாக இருந்து வளர்த்தெடுக்கும் முனைவர் மு.சு. புனிதவதி அம்மையாருக்கும் விஷ்ணுராஜ் அய்யா அவர்களுக்கும் வழிகாட்டியாக விளங்கும் முனைவர் பெ. பெரியசாமி மாமா அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகிறேன்.

நான் இந்த நிலையை அடைய பாடுபட்டுத் தெய்வநிலை எய்திய என் தந்தைக்கும் அத்தை கண்ணம்மாவிற்கும் என்னை வாழவைத்துக்

கொண்டிருக்கும் வாழும் தெய்வமான என் தாய்க்கும் என் நலனில் தந்தையின் பொறுப்புணர்வோடு அக்கறை காட்டும் மாமா கோ. தங்கராஜூ அவர்களுக்கும் என் சகோதரிகள் சுமதி, சாந்தி ஆகியோருக்கும் என் வாழ்க்கைத் துணைவி அன்புலட்சுமி அவர்களுக்கும் மற்றும் என் குடும்பத்தார் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

முதுகலை பயின்ற காலம் முதல் இன்று வரை என்னை அனைத்து நிலைகளிலும் செம்மைப்படுத்திய சகோதரிகள் ஜா. கிரிஜாஸ்ரீகுமார், ஜா. கீதா ஆகியோருக்கும் ஆய்வு காலத்தில் ஊக்கம் அளித்த முனைவர் ந. ஆனந்தி, சதீஷ்பாபு, வசந்தகுமாரி, செ. மார்கண்டன், உஷா ஆகியோர்க்கும் என் நன்றியைக் கூறிக்கொள்கிறேன்.

ஆய்வு நிகழ்த்திய காலம் முழுவதும் என்னுடன் இணைபிரியாது இருந்து பல அறிவுரைகள் வழங்கிய அன்பு நண்பர் ச. பார்த்திபன் அவர்களுக்கும் எப்போதும் இன்முகம் மாறாது உதவிகள் புரிந்த அன்புச் சகோதரர் சேம்புசீனி அவர்களுக்கும் முனைவர் சா. திருவாசகம் அவர்களுக்கும் அன்புத்தம்பி சுபாஷ் சந்திரபோஸ் அவர்களுக்கும் 'நாங்க நாலு பேர்' நட்பு வட்டத்திற்கும் தோழி இரேவதிசதீஷ் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவிக்கிறேன்.

ஆய்வு காலங்களில் தேவையான நூல்களை வழங்கி உதவிய சென்னைப் பல்கலைகழகப் பரிதிமாற் கலைஞர் வளாக நூலகம், கன்னிமாரா பொது நூலகம், மறைமலையடிகள் நூலகம், ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், உ.வே.சா நூல்நிலையம், அண்ணாமலைப் பல்கலைக்கழக நூலகம், கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை நூலகம் ஆகியவற்றிற்கும் அவற்றின் பணியாளர்களுக்கும் என் நன்றியைக் கூறிக்கொள்கிறேன்.

ஆய்வேட்டை நல்ல முறையில் வடிவமைத்துக் கொடுத்த அச்சகத்தார்க்கும் மற்றும் இவ்வாய்வு நிகழ்த்திய காலம் முதல் இன்று வரை உதவிய அனைத்து நெஞ்சங்களுக்கும் என் நன்றியை மீண்டும் தெரிவித்துக் கொள்கிறேன்.

தி.அ. இரமேஷ்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| எழுத்து. | - | எழுத்ததிகாரம் |
| குறி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| சொல். | - | சொல்லதிகாரம் |
| திரு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நன். | - | நன்னூல் |
| நூ. | - | நூற்பா |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பட். | - | பட்டினப்பாலை |
| பெ. | - | பெயர் |
| பெ.அ. | - | பெயரடை |
| பெரு. | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொரு. | - | பொருநராற்றுப்படை |
| மது. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| முல். | - | முல்லைப்பாட்டு |
| வி. | - | வினை |

# பொருளடக்கம்

மொழியின் வளர்ச்சியை மூன்று நிலைகளில் காணமுடிகிறது. அவை சைகை, ஒலி, சொல் என்பனவாகும். தொடக்க நிலையில் சைகையும் அடுத்த நிலையில் ஒலியும் முதிர்ந்த நிலையில் சொல்லும் மொழியின் வளர்ச்சி நிலைகளாகும். "*செய்திகளையும், உணர்வுகளையும், கட்டளைகளையும் ஒலிகளாலும் சைகைகளாலும் ஓரளவு புலப்படுத்தி விடலாம்; ஆனால் முதிர்ந்த சிந்தனையைச் சொற்களின் மூலம் தான் புலப்படுத்த முடியும்*"[1] என்று இ. மறைமலை குறிப்பிடுகின்றார்.

மொழியைப் பயன்படுத்துவோரின் அறிவுச் செயல்பாட்டால் சிறந்த சொற்கள் பொருள் தரும் தன்மையில் உருவாகின்றன. தேவைக்கு ஏற்ப சொற்களைப் புதிதாக ஆக்கிக் கொள்ளலாம். கால மாற்றத்திற்கு ஏற்ப மொழியின் தன்மையிலும் மாற்றம் நிகழ்கின்றன. அம்மாற்றம் புதிய கண்டுபிடிப்புகளின் காரணமாகத் தேவையை நிறைவு செய்துகொள்ளும் வகையில் புதிய சொற்களை ஆக்கிக் கொள்வதாலும் பிறமொழிச் சொற்களைக் கடன்பெறுவதாலும் நிகழ்வதாகும். சொற்களில் ஏற்படும் மாற்றங்களால் பொருள் நிலையிலும் மாற்றம் நிகழ்கின்றன. அதுவே சொல்லாக்கம் என வழங்கப்படுகிறது. "*மொழியின் உயிரோட்டமான பண்புகளில் தலைசிறந்து அமைவது சொல்லாக்கம்*"[2] என்னும் வசுமதியின் கூற்று குறிப்பிடத்தக்கது.

சொற்கள் ஆக்கம் பெறுவதைச் சொல்லாக்கம், கலைச்சொல்லாக்கம் எனப் பகுத்து வழங்குகின்றனர். ஆனால் சீதாலட்சுமி "*எல்லா சொற்களும் ஏதேனும் ஒரு துறை சார்ந்தே ஆக்கம் பெறுகின்றன. எனவே சொல்லாக்கமும் கலைச்சொல்லாக்கமும் ஒன்றே*"[3] என்பார். இச்சொல்லாக்கம் தனித்துறையாக வளர்ச்சி பெற்று வந்துள்ளது. தனித்துறையாக வளர்ந்து வரும் சொல்லாக்க மரபு பற்றியும் சொற்களின் வளர்ச்சி நிலையை அறிந்துகொள்ளும் தன்மையிலும் இலக்கியங்களில் சொல்லாக்கச் சிந்தனைகளை ஒப்பீட்டு ஆய்வு செய்தல் அவசியமான ஒன்றாகும். அந்த அடிப்படையில் இவ்வாய்வு அமைந்துள்ளது.

**ஆய்வுப்பொருள்**

சங்க இலக்கியச் சொல்லாக்க நெறிமுறைகள்(பத்துப்பாட்டு) என்பது ஆய்வுப்பொருளாக அமைந்துள்ளது.

## ஆய்வு நோக்கம்

மொழியின் வளர்ச்சியில் சொல்லாக்கம் முக்கிய இடம்பெறுகின்றது. இச்சொல்லாக்க மரபு சங்க இலக்கியம் தொடங்கி இன்றுவரை பல நிலைகளில் வளர்ந்து வந்துள்ளதைக் காணமுடிகின்றது. சமகாலத்தில் தேவைக்கு ஏற்ப துறைகள்தோறும் சொல்லாக்கம் நிகழ்ந்து வருகின்றன. இவ்வளர்ச்சி நிலைக்குச் சங்க இலக்கியங்களில் ஒன்றான பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள சில சொல்லாக்க நெறிமுறைகள் அடிப்படையாக அமைகின்றன. ஆனால், பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள சொல்லாக்கச் சிந்தனைகள் பற்றிக் குறிப்பிடும்படியான தனித்த ஆய்வுகள் வெளிவந்துள்ளதாக அறியமுடியவில்லை. எனவே பத்துப்பாட்டில் காணப்படும் சொல்லாக்கங்கள் பற்றி ஆராய்வதே இவ்வாய்வின் நோக்கம்.

## கருதுகோள்

மொழிவளர்ச்சியில் தேவைக்கேற்ப தற்போது துறைகள்தோறும் நிகழ்ந்துவரும் சொல்லாக்கச் சிந்தனைகளுக்கு அடிப்படையாகப் பத்துப்பாட்டில் காணப்படும் சொல்லாக்க முறைமைகள் அமையக்கூடும் என்பதைக் கருதுகோளாகக் கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப்பெறுகிறது.

## ஆய்வு மூலங்கள்

சங்க இலக்கியத்தின் ஒருபகுதியாக விளங்கும் பத்துப்பாட்டு முழுதும் முதன்மை மூலமாகவும் ஆய்வு தொடர்பாக வெளிவந்துள்ள முனைவர்பட்ட ஆய்வேடுகள், இளமுனைவர்பட்ட ஆய்வேடுகள், ஆய்வு நூல்கள், கருத்தரங்க கட்டுரைகள், இதழ்களில் வெளிவந்துள்ள கட்டுரைகள் ஆகியவை துணைமை மூலங்களாக அமைகின்றன.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியத்தில் பத்துப்பாட்டு முழுதும் ஆய்வு எல்லையாக அமைந்துள்ளது.

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வில் தொகுப்புமுறை, பகுப்புமுறை, ஒப்பீட்டுமுறை, விளக்கமுறை முதலிய ஆய்வு அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன.

## ஆய்வு முன்முயற்சிகள்

பழந்தமிழில் சொல்லாக்க நெறிகள், க. பாலசுப்பிரமணியன்(1980)
திருவள்ளுவரின் சொல்லாக்க நெறிகள், இரா. வசுமதி(1986)
வ.சுப. மாணிக்கனாரின் சொல்லாக்கம், பழ. முத்துவீரப்பன்(1988)
சொல்லாக்கம் அமைப்பும் ஆய்வும், இ.மறைமலை(2001)

*தமிழில் சொல்லாக்கம், ச. இராசேந்திரன்(2004)*
*சங்க இலக்கிய ஒருபொருட் பல சொல்லாக்கத்தில் விகுதிகள், க. அன்பழகன்(2006)*
*சங்க இலக்கிய நடை, பா. வீரப்பன்(1986)*
*சங்க இலக்கியத்தில் கூட்டுச்சொற்கள், அ. லெட்சுமணன்(2011)*

**ஆய்வுத்திட்டம்**

சங்க இலக்கியச் சொல்லாக்க நெறிமுறைகள்(பத்துப்பாட்டு) என்னும் இந்த ஆய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பின்வரும் நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

இயல் 1 : சொல்லாக்கம் பொது அறிமுகம்
இயல் 2 : பத்துப்பாட்டில் கூட்டுச் சொல்லாக்கம்
இயல் 3 : பத்துப்பாட்டில் விகுதிவழிச் சொல்லாக்கம்
இயல் 4 : பத்துப்பாட்டில் பிற சொல்லாக்கங்கள்

ஒவ்வொரு இயலிலும் நிகழ்த்தப்பெறுகின்ற ஆய்வுமுறை பின்வருமாறு.

**முன்னுரை**

இப்பகுதியில் ஆய்வுப்பொருள், ஆய்வு நோக்கம், கருதுகோள், ஆய்வுமூலங்கள், ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறை, ஆய்வு முன்முயற்சிகள், ஆய்வுத்திட்டம் ஆகியவை குறித்து விளக்கப்பட்டுள்ளன.

**இயல் ஒன்று : சொல்லாக்கம் பொது அறிமுகம்**

இவ்வியலில் சொல்லாக்கத்தின் வரையறை, இலக்கண நூல்களில் இடம்பெற்றுள்ள கருத்துகள், உரையாசிரியர்களின் கருத்துகள், மொழியியல் அறிஞர்களின் கருத்துகள், சொல்லாக்கத்தின் வகைகள், சொல்லாக்கம் நிகழும் அடிப்படைகள் ஆகியவை குறித்து ஆராயப்பட்டுள்ளன. இயலின் இறுதியில் தொகுப்புரை இடம்பெற்றுள்ளது.

**இயல் இரண்டு : பத்துப்பாட்டில் கூட்டுச் சொல்லாக்கம்**

தொல்காப்பியம் கூறும் 'எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய' என்ற கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டும் சமகாலத்தில் சொல்லாக்கச் சிந்தனையில் ஈடுபட்டுவரும் அறிஞர்களின் கருத்துப்படியும் பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள சொல்லாக்கங்களில் கூட்டுச் சொல்லாக்கங்கள் தொகுத்துப் பகுத்து ஆராயப்படுகின்றன. அவை இருபெயர் இணைந்தும் வினையும் பெயரும் இணைந்தும் பெயரடையும் பெயரும் இணைந்தும் உரிச்சொல்லும் பெயரும் இணைந்தும் பெயர்ச்சொல்லாக்கங்கள் நடந்துள்ளன. இதைப்

போன்று பெயரும் வினையும் இணைந்தும் இருவினைகள் இணைந்தும் பெயரடையும் வினையும் இணைந்தும் வினைச்சொல்லாக்கங்கள் நடைபெற்றுள்ளன. மேலும் பிறமொழிச் சொற்களும் தமிழ்ச்சொற்களும் இணைந்து சொல்லாக்கம் நடைபெற்றுள்ளன. இவ்வாறு பத்துப்பாட்டில் கூட்டுச் சொல்லாக்கம் குறித்து இவ்வியலில் ஆராய்ந்து விவரிக்கப்பட்டுள்ளது. இயலின் முடிவில் தொகுப்புரை வழங்கப்பட்டுள்ளது.

**இயல் மூன்று : பத்துப்பாட்டில் விகுதிவழிச் சொல்லாக்கம்**

தமிழில் சொற்களின் வளர்ச்சிக்கு விகுதிகளின் பங்களிப்பு முக்கிய இடம்பெறுகின்றன. அந்த அடிப்படையில் பத்துப்பாட்டை அணுகும் பொழுது பெயர், பெயரடை, வினையடி, வினையடை ஆகியவற்றுடன் விகுதிகள் சேர்ந்து சொல்லாக்கங்கள் நடைபெற்றுள்ளன. அவை விகுதிவழிச் சொல்லாக்கம் என்ற தன்மையில் ஆய்வு செய்து முடிவுகள் இவ்வியலின் இறுதியில் தொகுப்புரையாகக் கூறப்பட்டுள்ளன.

**இயல் நான்கு : பத்துப்பாட்டில் பிற சொல்லாக்கங்கள்**

கூட்டுச் சொல்லாக்கம், விகுதிவழிச் சொல்லாக்கம் தவிர்த்த பிற சொல்லாக்கங்களும் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ளன. அவை இரட்டிப்பாக்கம், கடனாக்கம், பதிலீட்டாக்கம், ஒப்புமையாக்கம், திரிபாக்கம், தமிழ்ப்படுத்தம், கலப்பாக்கம், பகுதியாக்கம் போன்ற வகைகளில் அமைவது குறித்து இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன. இயலின் முடிவில் தொகுப்புரை இடம்பெற்றுள்ளது.

**முடிவுரை**

ஆய்வில் கண்டறிந்த உண்மைகள் இங்குத் தொகுத்து வழங்கப் பட்டுள்ளன. ஆய்வு தொடர்பான மேலாய்வுக் களங்களும் தொடர்ந்து துணைநூற்பட்டியலும் இடம்பெற்றுள்ளன. பின்னிணைப்பில் பத்துப்பாட்டில் தொகுக்கப்பட்ட சொல்லாக்கச் சொற்கள் வகைப்படுத்தப்பட்டு அகரநிரலில் ஆய்வேட்டின் இறுதியாக வழங்கப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. இ. மறைமலை, *சொல்லாக்கம்*, ப.1.
2. இரா. வசுமதி, *திருவள்ளுவரின் சொல்லாக்க முறைகள்*, ப.43.
3. சீதாலட்சுமி, *சிங்கப்பூர் மக்கள் தொடர்புச் சாதனங்கள் தமிழ்மொழி, இலக்கிய வளர்ச்சிக்கு ஆற்றிய பங்களிப்பு*, ப.74.

மனித இனம் தோன்றிய காலம் தொடங்கி இன்றுவரை மொழி பல்வேறு பரிமாணங்களைக் கண்டு வந்துள்ளது. மொழியின் தோற்றம் பற்றி அறிஞர்களிடையே பல்வேறு கருத்துகள் இன்றும் நிலவி வருகின்றன. எனினும் ஓர் ஒருமித்த நிலையான வரையறை கூறப்படவில்லை எனலாம். "*திட்ட வட்டமாக நாம் மொழி தோன்றியதின் காரணத்தைச் சொன்னாலும் அவை பெரும்பாலும் ஊகங்களாகவே இருக்கும்*"[1] என்று மா.சு. திருமலை, கி.கருணாகரன் ஆகியோர் குறிப்பிடுகின்றனர்.

தொடக்க காலத்தில் மனிதன் தன் உள்ளத்தில் எழும் கருத்துகளை மற்றவர்களுக்குத் தெரிவிக்கச் சைகையைப் பயன்படுத்தினான். பின்னர்ப் படிப்படியாகப் பேச்சுமொழி வளர்ந்தது. இம்மொழி குறிப்பிட்ட சமூகத் தினரிடம் தோற்றம் பெற்றுப் பின்னர், காலப்போக்கில் பல்வேறு வடிவங்களாகக் கிளைத்து வளர்ந்தது. மொழியின் பங்கு பற்றி, த. சரவண முத்துப்பிள்ளை கூறுவதாவது,

> *ஒருவன் தன் மனக்குறிப்பை மற்றோர்க்கறிவிப்பதற்குப் பாஷை முக்கிய கருவியாகின்றது. ஆகவே நமது மனக்குறிப்பை மற்றோர்க்கு எப்பாஷையிற் சுலபமாயும், தெளிவாகவும், மதுரமாயும் பலவிதமாக வற்புறுத்திக் கூற முடியுமோ அப்பாஷையே மிகவுஞ் சிறந்த பாஷை யென்றுரைக்க வேண்டும்*[2]

என்பார்.

ஒரு மொழிக்கண் சொற்கள் தோன்றியிருத்தல் என்பது அளவிடற் கரிதாகும். சொற்கள்தான் மொழியின் அச்சாணி. அப்படிப்பட்ட நிலையில் சொற்களைக் கொண்டும் வரலாற்றைக் கட்டமைக்கலாம். "*ஒரு நாட்டின் பண்டை வரலாற்றை யறியப் புத்தகமுஞ் செய்யுளுந்தான் வேண்டுமென்பதில்லை. அந்நாட்டு மொழி அல்லது சொற்கள் கூட வரலாறுரைப்பனவாகும்*"[3] என்று பாவாணர் கூறும் கருத்திலிருந்து மொழியில் சொற்கள் எத்தகைய முக்கியத்துவம் பெற்றுள்ளன என்பது விளங்கும். இது போன்று பல்வேறு அறிஞர்கள் தம் கருத்துகளைத் தெரிவித்துள்ளனர் என்பதைக் கவனத்தில் கொள்ளவேண்டும்.

சொல்லாக்கம் பற்றிய பொது அறிமுகத்திற்கு முன் சொல் பற்றி இலக்கணிகள், உரையாசிரியர்கள், அறிஞர்களின் கருத்துக்களை அறிந்து நோக்குதல் பொருத்தமுடையதாகும்.

சொல் என்பதற்கான விளக்கம் நேரடியாகக் கூறவில்லை எனினும் சொல்லின் தன்மையினை,

ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி
யிரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே.
(தொல்.எழுத்து.45)

என்று கூறுவதன் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது. ஆனால் தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் சொல் இன்னது என்று வரையறை செய்துள்ளனர். இளம்பூரணர், "சொல் என்பது, எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுத்தும் ஓசை" என்றும் நச்சினார்க்கினியர், "'சொல்' என்றது, எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப் பொருட்டன்மையும் ஒருவன் உணர்தற்குக் கருவியாம் ஓசையை" என்றும் சேனாவரையர், "சொல்லாவது எழுத்தொடு ஒருபுடையான் ஒற்றுமையுடைத்தாய்ப் பொருள் குறித்து வருவது" என்றும் கல்லாடர், "மற்றுச் சொல்லென்றதற்குப் பொருண்மை என்னையெனின் ஓசையென்றவாறு" என்றும் வரையறை செய்துள்ளனர் (தொல்.சொல்.நூ.1 உரை). இவ்விடம் இளம்பூரணர் 'எழுத்தொடு புணர்ந்து' என்று கூறும் கருத்திற்கு மாறுபட்டுச் சேனாவரையர் சொல்லுக்கான வரைவிலக்கணம் தருகிறார். எழுத்தொடு புணர்ந்து என்று கூறுவதால் தனிமொழியில் ஓரெழுத்து ஒருமொழி சொற்களில் பூ, கோ, தீ போன்ற சொற்கள் எவ்வாறு புணரும் என்ற வினாவை முன் வைக்கிறார். நச்சினார்க்கினியர் இளம்பூரணருடன் ஒத்துபோகும் தன்மையிலும் கல்லாடர் 'ஓசையென்றவாறு' பொதுப்படவும் கூறியுள்ளனர்.

நன்னூலார் சொல்லென்பதற்கு எழுத்து தனித்தும் தொடர்ந்தும் வந்து பொருள்தரின் சொல் என்பார். அதாவது,

எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருள்டரிற்
பதமா மதுபாகப் பதம்பகு பதமென
இருபா லாகி யியலு மென்ப. (நன்.128)

என்றும்

ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி யென்றா
இருதிணை யைம்பாற் பொருளையுந் தன்னையும்
மூவகை யிடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படைக் குறிப்பின் விரிப்பது சொல்லே (நன்.259)

என்றும் கூறுகின்றார். இங்கு நன்னூலார் சொல்லை வரையறை செய்யவில்லை எனினும் சொல்லின் தன்மையை விளக்கியுள்ளார். சொல் என்பது பிரிக்க முடியாத ஒரு கூறு என்பதும் வேறுவகைச் சொற்களைச் சேர்த்தல் இயலாது என்றும் நிலைபேறு உடையது என்றும் அறிஞர்கள் பலரும் ஒருமித்த கருத்து கொண்டிருக்கின்றனர். "*சொல்லிலக்கணத்தை உணர்த்த வந்த இலக்கண நூலார், 'சொல் என்பது என்ன?' எனச் சொல்லை வரையறை செய்து விளக்குவதைக் காட்டிலும் இலக்கண முறைமை பொருந்த வகைப்படுத்து வதையே முதன்மையான பணியெனக் கொண்டனர்*"[4] என்று இ.மறைமலை குறிப்பிடுகின்றார். இவர் கருத்தின் மூலம் சொல்லானது அறிஞர்களால் வரையறுக்கப்படவில்லை என்பது தெளிவாகிறது.

> *தனித்து இயங்கும் ஆற்றல் பெற்ற உருபன் பொருள் தருமாயின் அது 'தனிச்சொல்' எ.கா. தேர், பார், குடி. தனிச்சொல் ஒன்றோ அதற்கு மேற்பட்ட விகுதிகளோ ஒன்றோ அல்லது அதற்கு மேற்பட்ட முன்னொட்டுகளோ, விகுதியும் முன்னொட்டுகளும் சேர்ந்தோ இலக்கணத் தன்மை ஏற்புத்தன்மை இரண்டும் பெற்று வரின் 'ஒட்டுவழிச்சொல்' எ.கா. குடிமை, குடித்தனம், குடித்தனக்காரன், முற்போக்காளர். இரண்டு தனிச்சொற்கள் தொகையிலக்கண மரபுக்கேற்ப இணைந்து பொருள் தருமாயின் 'தொகைச்சொல்' எ.கா. மின்கலம், மீனெண்ணெய். மேற்கூறியவற்றில் அடங்காத ஒரு சொல் நீர்மைத்தாய் வரும் சொற்களைக் 'கூட்டுச்சொல்' என்பர் எ.கா. மண்வெட்டி, பற்றாக்குறை*[5]

என்பன போன்ற பிரிவுகளைப் பகுத்துச் சொல்லுக்குரிய இலக்கணத்தைத் தற்காலிகமாக வரையறை செய்கிறார் இ. மறைமலை.

ஒரு பொருளைக் குறிக்கவும் பண்பை உணர்ந்து கொள்ளவும் 'சொல்' சமுதாயத்தில் பயன்பட்டது. புதிய புதிய பொருள்கள் தோன்றும் பொழுது அந்தந்தக் காலகட்டத்திற்கேற்ப புதிய சொற்கள் ஆக்கம் பெறுதல் இயல்பு. இவ்வகையான சொற்களே சொல்லாக்கச் சொற்களாகும்.

### சொல்லாக்கம் சொல் விளக்கம்

சொல்லாக்கம் என்ற சொல்லிற்கு அகராதிகள் தரும் விளக்கங்களை நோக்கலாம். "*சொற்செய்து கொள்ளுகை ;Formation of words, word-building*"[6] என்று சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியும் "*(புதிய கருத்துக்களை உணர்த்த ஒரு மொழியில்)* புதிய *சொற்களை உருவாக்குதல் ;*

*Coining new eords and terms*"[7] என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதியும் பொருள் கூறுகின்றன.

சொல்லாக்கச் சிந்தனைகளும் சொல்லாக்க முறைகள் பற்றிய அறிஞர்களின் கருத்துகளும் பின்வருமாறு:

**சொல்லாக்கத்தின் தொடக்க காலம்**

உலகமெங்கும் புதிய கருவிகளும் புதிய கோட்பாடுகளும் தொடர்ந்து உருவாகிக் கொண்டே இருக்கின்றன. அவற்றைக் குறிக்கும் சொற்களும் புதிதாய்த் தேவைப்படுகின்றன. தேவையை நிறைவு செய்யும் தன்மையில் சொற்களை ஆக்கும் முயற்சி தொடங்குகிறது. முதன்முதலில் கி.பி. 1832 ஆம் ஆண்டு பூமி சாஸ்திரம் என்ற அறிவியல் நூல், இரேனியஸ் ஐயரால் தமிழில் வெளியிடப்பட்டது. இந்நூலில் புவியியல் தொடர்பாக ஐம்பத்தொரு கலைச்சொற்கள் உருவாக்கப்பட்டுள்ளன. சொல்லாக்க முயற்சியில் தமிழில் இதுவே முதன்முதலில் வெளியான நூல் ஆகும்.

கி.பி. 1847 ஆம் ஆண்டு இலங்கை நாட்டிற்கு வந்த மருத்துவத்துறைப் பேராசிரியரான ஃபிஷ் கிரீன், முதன்முதலாகத் தமிழில் மருத்துவத்தினைப் போதிக்கும் முயற்சியில் ஈடுபட்டார். இதனால் மருத்துவத் துறையில் ஆங்கிலக் கலைச் சொற்களுக்கு நிகரான தமிழ்ச் சொற்களை உருவாக்க வேண்டிய நிலையேற்பட்டது. தமிழ்ச் சொல்லாக்கத்தில் இவர் பின்பற்றிய நெறிமுறைகள் பின்வருமாறு :

(1) தமிழிலேயே கலைச் சொற்களை உருவாக்குதல்.

(2) தமிழில் கலைச் சொற்கள் கிடைக்கவில்லை எனில் அதற்கு நிகரான சமஸ்கிருதச் சொற்களைப் பயன்படுத்துதல்.

(3) தமிழ் அல்லது சமஸ்கிருதத்தில் சொல்லாக்கம் உருவாக்க இயலாவிடில், ஆங்கிலச் சொல்லை ஒலிபெயர்ப்பில் பயன்படுத்துதல்.

ஃபிஷ் கிரீன், 1875 ஆம் ஆண்டு எஸ். சுவாமிநாதன், சாப்மன் ஆகியோரின் துணையுடன் மருத்துவம் தொடர்பான கலைச் சொற்களைத் தொகுத்து நான்கு தொகுதிகளாக வெளியிட்டுள்ளார். சொல்லாக்கத்தின் காரணமாக உருவாக்கப்பட்ட சொற்களைத் தொகுத்து வெளியிடுவது, தமிழில் வெளியிடுவது இதுவே முதன்முறை ஆகும். இதனால் அறிவியல் நூல்களைத் தமிழாக்கியவர்கள் பெரிதும் பயன் அடைந்தனர்.

பாடப் புத்தகம் எழுதுவோரும் அதைப் பயிலும் மாணவரும் பயன் அடையும் வகையில் சென்னை மாகாணக் கல்வி இயக்குநர், 1932 ஆம் ஆண்டில் கலைச் சொல்லாக்கத்திற்காக அறிஞர் குழு ஒன்றினை நியமித்தார். இக்குழுவினர் உருவாக்கிய சொற்களஞ்சியம் கிடைக்கவில்லை. 1932 ஆம் ஆண்டு சென்னை மாகாண அரசு நிறுவிய குழு தயாரித்த சொற்களஞ்சியத்தில் சமஸ்கிருதச் சொற்களுக்கு முக்கியத்துவம் தரப்பட்டிருந்தது. சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் 1936 இல் வெளியிட்ட கலைச் சொல் தொகுதி, சொல்லாக்க முயற்சியில் ஈடுபடுவோருக்கு முன்னோடியாக விளங்கியது.

1955 ஆம் ஆண்டு இலங்கையில் வெளியிடப்பட்ட கலைச் சொற்களின் தொகுப்பில் சமஸ்கிருதச் சொற்கள் நீக்கப்பட்டிருந்தன. 1957 ஆம் ஆண்டிலும் 1962 ஆம் ஆண்டிலும் 1971 ஆம் ஆண்டிலும் தமிழக அரசின் முயற்சி காரணமாகக் கலைச் சொல் தொகுதிகள் வெளியாயின. இத்தொகுதிகளில் இடம் பெற்ற சொல்லாக்கங்கள் தரமானவையாக விளங்கின. 1971 ஆம் ஆண்டிலிருந்து தமிழக அரசினால் வெளியிடப்பட்டு வரும் ஆட்சிச் சொல்லகராதிகளும் சிறப்புச் சொற்களின் துணையகராதிகளும் சொல்லாக்கத்தினை மூலமாகக் கொண்டனவாகும்.

சொல்லாக்கம் பற்றி அறிஞர்கள் குறிப்பிடும் கருத்துகள் பின்வருமாறு :

தமிழ்மொழி வளர்ச்சிக்குச் சொற்களின் பங்களிப்பு மிக முக்கியம். அவை பற்றிப் பேச விளைந்த வையாபுரிப்பிள்ளை அவர்கள் ஒரு மொழியில் புத்தம் புதிய சொற்கள் ஆக்கப்படுவதில்லை என்று திட்டவட்டமாகக் குறிப்பிடுகின்றார். அவ்வாறு கூறக் காரணம், அம்மொழியில் உள்ள பதக் கூறுகளின் சேர்க்கையாலே பல சொற்கள் ஆக்கம் பெறுகின்றன என்கிறார். இது பற்றிக் கூறும்பொழுது,

> *தற்காலத்தில் நூலாசிரியர்கள், முக்கியமாக விஞ்ஞான சாத்திரம் முதலியவற்றை மொழிபெயர்க்கும் முயற்சியில் ஈடுபட்டவர்கள், பத்திராதிபர்கள் முதலியோர் புதுப் புதுப் பதங்களை இயற்றுகின்றனர் என்று பலரும் நினைக்கிறார்கள். ஆனால், உண்மையை ஆராய்ந்து பார்ப்போமானால் அவர்கள் புதிய பதங்களைப் புத்தம் புதியவாய் இயற்றுகின்றார்கள் என்று சொல்ல முடியாது*[8]

என்று எஸ். வையாபுரிப்பிள்ளை குறிப்பிடுகின்றார்.

மேலும் புதிய சொற்கள் உருவாக்கப்படுகின்றன எனில் அவை ஒலிக்குறிப்புச் சொற்களாக மட்டுமே காணப்படும் என்கிறார். அது ஓசை பற்றி வரும் இரட்டைக்கிளவிகள் ஆகும். 'டபார் டபார் என்று அடித்தான்'

என்ற வாக்கியத்தில் 'டபார் டபார்' என்பது ஓசை பற்றி ஆக்கம் பெற்ற சொல் என எடுத்துக்காட்டி, இது போன்ற சொற்கள் கம்பராமாயணம், பரிபாடல் ஆகியவற்றில் ஆக்கம் பெற்றுள்ளதையும் சான்றுகளுடன் விளக்கிச் செல்கிறார்[9]

இவ்வாறு கூறும் வையாபுரிப்பிள்ளை, இரு சொற்களின் சேர்க்கையாலோ, அல்லது சொற்கள் விகாரப்பட்டோ, வினையடிகள் தாமாக நின்று அல்லது நீட்டல் முதலிய விகாரங்கள் பெற்றுப் புதிய விகுதிகள் சேர்க்கப்பெற்றோ சொல்லாக்கம் நடைபெறுகின்றது என்கிறார். சொல்லாக்கம் பற்றி முழுமையாக வகைதொகைபடுத்தி விளக்கவில்லை எனினும் பொதுவான அறிமுகத்தினை விவரித்துள்ளார்.

தமிழ்மொழியில் சொற்கள் உருவாகும் தன்மையைச் ச. அகத்தியலிங்கம் இருநிலைகளில் பகுத்துக் குறிப்பிடுகின்றார். அவை ஆக்கப்பாடு, திரிவு ஆகும். இதில் ஆக்கப்பாடு என்பது சொல்லாக்க நெறிமுறையில் அமைந்துள்ளது. இந்த ஆக்கப்பாடு இவ்விடம் ஒட்டுக்களை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது என்பதை விளக்குகின்றார். சொல்லாக்கத்திற்கான விளக்கமாக,

> *ஆக்கவொட்டுகள் பொதுவாக அடிச்சொற்களுடன்(stem) இணைந்து வேறுவகையான சொற்களை உருவாக்கும். இத்தகைய மாற்றங்களையே ஆக்கப்பாடு(derivation) எனக் கூறுவர். ஒருவகைச் சொல்லிலிருந்து இன்னொரு வகைச் சொல்லை உருவாக்கும் மாற்றத்தையே இப்பெயரால் அழைக்கின்றனர்*[10]

என்று ச. அகத்தியலிங்கம் வரையறுத்துக் கூறுகின்றார்.

அவரே மற்றொரு இடத்தில் சொல்லாக்கம் இருநிலைகளில் அமைகின்றது என்றும் அவற்றை ஆக்கப்பாடு, இணைப்பாக்கம் என்றும் குறிப்பிடுகின்றார். சில சொற்களுடன் சில ஒட்டுக்கள் இணைப்பதால் உருவாக்கப்படுவது ஆக்கப்பாடு என்றும் ஒரு சில சொற்களை இணைப்பதால் உண்டாவது இணைப்பாக்கம் என்றும் இவ்வாசிரியர் குறிப்பிடுகின்றார்.[11]

மொழி வளர்ச்சியால் கால மாற்றத்திற்கு ஏற்ப ஒரு மொழியில் உள்ள சொற்கள் சில புதிதாகத் தோற்றம் பெற்றும் சில வழக்கிறந்தும் காணப்படுகின்றன. தமிழ்மொழியில் நிகழ்ந்துள்ள இச்செயல்பாடுகளைப் பற்றி,

> *இன்றைய தமிழ் மொழியில் காணப்படும் சொற்கள் அனைத்துமே தமிழ்மொழியின் ஆரம்பகால முதலே இருந்தன எனக் கூறமுடியாது. மூவாயிரம் ஆண்டுகால வளர்ச்சியில் எத்தனையோ சொற்கள் உருவாவதும் இதைப்போன்றே பல சொற்கள் வழக்கறுவதும் இயற்கை*[12]

என்று ச. அகத்தியலிங்கம் மொழிகின்றார். இச்செயல்பாடுகளுக்கான உதார ணங்களையும் எடுத்துக்காட்டி விளக்கிச் சென்றுள்ளார்.[13]

சொல்லாக்கமானது ஆக்கப்பாடு, இணைப்பாக்கம் ஆகிய இரு நிலைகளில் நிகழ்கின்றன என்று கூறிய இவரே 'வினையியல்' என்னும் தம் நூலில் பிறமொழிகளில் இருந்து சொற்கள் தமிழ்மொழியில் கலப்பதை ஒருவகைச் சொல்லாக்கம் எனவும் தமிழ் மொழிக்குள்ளே சில சொற்கள் இணைதல், சில சொற்களுடன் ஒட்டுக்கள் இணைதல் என்ற இரு நிலைகளில் சொல்லாக்கம் நடைபெறுகின்றது எனவும் பகுத்துக் கூறுகின்றார்.[14] இவ்விடம் கடனாக்கம் என்ற ஒரு வகையைப் புதிதாகக் குறிப்பிடுவது கவனத்திற்குரிய தாகும்.

தமிழ் மொழியில் பிறமொழிகளின் ஆதிக்கம் மேலோங்கும் பொழுது அம்மொழிக் கருத்துகளைத் தமிழில் வழங்கவும் பிறமொழிச் சொற்களுக்கு ஏற்ப தமிழ்மொழியில் உருவாக்கவும் முனைவோர் எவ்வாறு செயல்பட வேண்டும் என்பதை,

> *பிறமொழிக் கருத்துகள் மக்கள் தம் மொழி வாயிலாக அறிந்து கொள்ளுவதற்காகவே சொல்லாக்கம் நிகழ்கின்றது... தமிழ் மொழியின் மரபிற்கேற்பச் சொல்லாக்கம் செய்தல் வேண்டும். சொல்லாக்கம் செய்வோர் இருமொழிகளையும் செவ்வனே அறிந்துகொண்டு மரபு வழுவாத வகையிற் பணியாற்றுதலைத் தமது குறிக்கோளாகக் கொள்ளுதல் வேண்டும்.*[15]

என்று மு. கணபதிபிள்ளை விளக்கம் தந்துள்ளார்.

தமிழ் மொழியில் சொல்லாக்கத்தில் நாட்டம் உள்ளவர்கள் எவ்வாறு சொற்களை ஆக்க வேண்டும் என்பதும் ஆக்கம் பெறும் சொற்கள் தமிழ்மொழியின் இயல்புத் தன்மைக்கு ஏற்ப அமைதல் பற்றியும்,

> *புதிதாய் ஆக்கியும் இரவலாய் வாங்கியும் தமிழில் கூட்டுச் சொற்களைப் பெயர், வினை, இடை, உரி வகைகளாகப் பிரிக்கவும், திரிக்கவும், பெருக்கி விரிக்கவும் ஏற்ற முறையில் அமைத்தல் வேண்டும். ஆக்கச் சொற்பொருட் போக்கில், அதன் தொடர்புடைய புதிய கருத்து எழுமேயானால், அச்சொல்லடியாய் அப்புதுக்கருத்தைச் சுட்டுதற்கான சொல்லும் விளக்கத்தக்கவாறு அதனைச் சிந்தித்து அமையச் செய்வது நல்லது. எவ்வகையானும் தமிழ்மொழி இயலின் தகவிகவாமல், புதிய சொற்களைப் புகுத்துதல் வேண்டும்.*[16]

எனச் ச. சோமசுந்தர பாரதியார் குறிப்பிடுகின்றார்.

தம் சூழ்நிலைக்கு ஏற்ப ஒவ்வொரு பகுதியில் வாழும் மக்கள் கருத்துகளின் வெளிப்பாட்டிற்கு ஏற்ற வகையில் சொற்களை ஆக்கிக் கொள்ளுதல் பற்றி,

> *மண்பதையில் ஆக்கப் பொருளாகிய பாஷையின் கண்ணே, தனித்தனி மக்கள் கருத்துகளின் போக்குக்கியைந்தபடியெல்லாம் சொற்கள் அகப்படுமென்றெதிர்பார்த்தல் செவ்விதன்று. அவர்கள் கஷ்டப்பட்டுச் சொற்கள் படைத்தல் வேண்டும்*[17]

என்பதாக வி. கோ. சூரியநாராயண சாஸ்திரிகள் சுட்டியுள்ளார்.

அவரே இலக்கண மரபுக்கு ஏற்ப புதிய சொற்கள் ஆக்குதல் பற்றியும் தமிழில் உள்ள சொற்களைத் திரித்துப் புதிய கருத்துகளுக்குப் பயன்படுத்தும் தன்மைக்கு, ''*தமிழ்ப்பகுதிகளினின்று புதுச்சொற்கள் படைத்துக் கருத்தை வெளிப்படுத்தலாம். உள்ள சொற்களைத் திரித்தும் சில புதுக் கருத்திற்கு இடஞ்செய்யலாம்*''[18] என்று கருத்துரைக்கிறார்.

தற்கால மொழியியல் சார்ந்தும் மொழிஅமைப்பு சார்ந்தும் சிந்தித்து வரும் பொற்கோ அவர்கள் தேவைக்கு ஏற்ப சொற்கள் ஆக்கப்படுவது குறித்துப் பின்வருமாறு கூறியுள்ளார்,

> *வேர்ச்சொற்களோடு விகுதிகளைச் சேர்த்தும் ஒன்றுக்கு மேற்பட்ட சொற்களைச் சேர்த்துத் தொகைகளை அமைத்தும் எல்லா மொழிகளிலும் சொற்கள் மேலும் மேலும் ஆக்கப்படுகின்றன. சொற்களை ஆக்குவதில் காலந்தோறும் மக்கள் பல்வேறு உத்திகளைக் கையாண்டிருக்கிறார்கள். காலப்போக்கில் சில சொல்லாக்க உத்திகள் அறவே மறக்கப்பட்டிருந் தாலும் வியப்பில்லை.*[19]

இவ்வாறு கூறப்பட்டிருக்கும் இவர் கருத்தின் மூலம் காலமாற்றத்திற்கு ஏற்ப சொல்லாக்கத்தில் மாற்றம் ஏற்பட்டுவருவதை உணர்ந்துகொள்ள முடிகின்றது.

சொற்கள் ஆக்கப்படுவது குறித்துப் பேசும் இவர், சொல்லாக்கம் ஒரு தனிக்கலை என்றும் ஒரு தனி ஆராய்ச்சி என்றும் குறிப்பிடுகின்றார். மேலும், 'சொல்லாக்க ஆராய்ச்சி இலக்கண ஆராய்ச்சியினின்று வேறுபட்டதென்பதும் வரலாற்றுப் போக்கில் அமைவது என்பதும் இங்கு மனதில் கொள்ள வேண்டிய செய்தி' என்று சொல்லாக்க ஆராய்ச்சியின் தன்மை குறித்து விளக்கம் தருகிறார்.

சொல்லாக்கம் குறித்து இ. இரத்தினம் கூறும் கருத்தை இரா. வசுமதி பின்வருமாறு,

*சொல்லாக்கம் என்பது எடுத்த ஒரு மொழிச் சொல்லுக்கு எல்லா வகையிலும் ஒத்த பிறமொழிச் சொல்லொன்றை அமைத்தலாகும். அமைத்தல் என்பது ஏலவே வழக்கிலுள்ள சொல்லொன்றைத் தேரல் அல்லது புதிதாய் ஆக்குதலாம்(கலைச்சொல்லாக்கம், பக்.21-22).*

என்றும்

*சொல்லாக்கப் பணியில் ஈடுபடுவோர் மற்றை விஞ்ஞான மொழிகள் எவ்வாறு தாமே முதன்மையாகச் சொல்லாக்கம் செய்துள்ளன? எவ்வாறு பிறமொழிகளிருந்து படைத்துள்ளன என்பதை அறிந்து கொள்ள வேண்டும்(கலைச்சொல்லாக்கம்,பக்.21-22)*[20]

என்றும் தம் ஆய்வில் எடுத்துக்காட்டுகிறார்.

புதிய கண்டுபிடிப்புகளின் காரணமாக அவற்றைக் குறிக்க சொற்களின் தேவை அதிகரிக்கிறது. அப்படிப்பட்ட நிலையில் எவ்வாறு செயல்பட வேண்டும் என்பதை,

*புதிய புதிய பொருள்கள் அம்மொழியாளர்களிடையே தோன்றும் போது, அவற்றைக் குறிக்கப் பெயர்கள் வேண்டும். அவற்றை அம்மொழிகள் உருவாக்குதல் வேண்டும். இதுபோன்ற புதிய பொருள்கள் பிற நாடுகளிலிருந்து வரும்போது அவற்றுக்கான தாய்மொழிப் பெயர்கள் வேண்டும். மொழியாளர்களிடையே அறிவு வளரவளரத் தோன்றும் புதிய எண்ணங்களுக்கு மொழி உருக்கொடுத்தல் வேண்டும்*[21]

எனச் ச. அகத்தியலிங்கம் மற்றும் செ.வை. சண்முகம் ஆகிய இருவரும் கூறுகின்ற கருத்தை இரா. வசுமதி பயன்படுத்தியுள்ளார்.

மொழியியல் சார்ந்து பல ஆய்வுகளை நிகழ்த்திய சூ. இன்னாசி அவர்கள் சொல்லாக்கம் குறித்தும் சிந்தித்துள்ளார். அவர் பெயர்ச்சொல்லுடன் சில விகுதிகளை இணைத்தும், வினைச்சொல்லுடன் சில விகுதிகளை இணைத்தும் புதிய சொற்களை உருவாக்கலாம் என்றும் இரு சொற்கள் இணைந்து கூட்டுச்சொற்கள் ஆக்கப்படுவது குறித்தும் ஒப்புமையாக்கத்தால் சொற்கள் ஆக்கம் பெறுவது பற்றியும் விவாதித்துள்ளார்.[22]

சொல்லாக்கத்திற்கான அடிப்படைக் கூறுகள், தமிழ்மொழியில் அடிச்சொற்களைச் சிறிய மாற்றத்திற்கு உண்டாக்கும் பொழுது அமைகின்றன என்கிறார் இரா. சண்முகம். பின்வருமாறு அவர்,

*தமிழ்மொழியின் வேர்ச்சொற்கள் பெரும்பாலும் ஓரசைச் சொற்களே. அடிச்சொற்களில் இரு வகைகளில் பகுதிகள் உண்டாகின்றன. ஓரே*

*அடிச்சொல்லில் சில சிறிய மாற்றங்கள் நிகழ்வதால் பல புதிய சொற்கள் தோன்றுகின்றன*[23]

என்று கூறுகின்றார்.

சிங்கப்பூரில் மக்கள் தொடர்புச் சாதனங்கள் தமிழ்மொழி மற்றும் இலக்கிய வளர்ச்சிக்கு ஆற்றிய பங்களிப்பு பற்றித் தம் ஆய்வை நிகழ்த்திய சீதாலட்சுமி அவர்கள் "*சொல்லாக்கம் என்பது ஒரு மொழியில் பல புதிய கருத்துகளை எடுத்துக்கூறும் வகையில் புதுச் சொற்களை ஆக்குவது*"[24] என்று குறிப்பிடுகின்றார்.

மேலும் சொல்லாக்கம் பற்றிய சிந்தனையில், இவர் இராமலிங்க முதலியாரின் சொல்லாக்கச் சிந்தனைகளை அடிப்படையாகக் கொண்டு ஈடுபடுகின்றார். இராமலிங்க முதலியாரின் கருத்துகளைப் பின்வருமாறு எடுத்தாண்டுள்ளார்.

உலகெங்கும் புதிய கருத்துகளை எடுத்துச் செல்லும் ஆங்கிலச் சொற்களுக்குத் தமிழில் சொல்லாக்கம் செய்யும் போது, பழைய தமிழ் இலக்கியச் சொற்களை அடிப்படையாக வைத்தும் புதுச்சொற்களை ஆக்கலாம் என்று இராமலிங்க முதலியார் (1977) கூறுகின்றார். அவ்வாறு ஆக்கப்படும் தமிழ்ச் சொற்கள் அவற்றிற்கான ஆங்கிலச் சொற்களைவிடக் குறைந்த எழுத்துகளில் சுருக்கமாக, வாசிக்க எளிதாக அமைவது அவசியம் என்கிறார், அவர். இவ்வாறு செய்வதால் தமிழ்ச் சொற்களை எளிதாகவும் வசதியுடனும் பயன்படுத்திக் காலவிரயத்தைத் தடுக்கலாம். அவர், கடன் சொல்லாக ஒரு பிறமொழிச் சொல்லை ஒலிபெயர்ப்புச் செய்வதால், தமிழ் வளராது என்று கடுமையாகக் கூறுகின்றார். ஒலிபெயர்ப்புச் செய்வதால், தமிழ் தமிழாக இல்லாமல் காலப்போக்கில் ஒரு புதுமொழியாகிவிடும் என்கிறார். அதற்கு மாற்று வழியாக ஒன்றையும் கூறுகிறார். ஆங்கில மொழிச் சொல்லிலுள்ள ஆங்கில ஓசையைத் தமிழ் வடிவமாக்கி, அதற்குத் தமிழில் வேர்ச்சொல் என்பதே அவ்வழி. இதுவே, "அப்பிறமொழிச் சொல்லைத் தமிழில் ஏற்றுக் கொள்வதாகும்... அப்படிச் செய்தால்தான் தமிழ்மொழி கெடாது; தமிழ் வளரும்"(1977:50) என்கிறார்.

இதனால் புதிய வேர்ச்சொல்லை அடிப்படையாகக் கொண்டு மேலும் பல புதிய தமிழ்ச் சொற்கள் வளரும், தமிழின் சொற்களஞ்சியம் அதிகரிக்கும் என்பது அவரது கருத்தாகும்.

சொல்லாக்கம் பற்றிப் பேச விளைந்த இவ்விடம் கலைச்சொல்லாக்கம் குறித்து நோக்குதலும் பொருத்தமுடையதாகும்.

**கலைச்சொல்லாக்கம்**

சொல்லாக்கம் என்பது பொதுப்படச் சொற்களை ஆக்குவதைக் குறிக்கும் சொல்லாகும். கலைச்சொல்லாக்கம் என்பது ஒவ்வொரு துறைக்குரிய சொற்கள் ஆக்கம் பெறுவதைச் சுட்டுவதாகும். அதாவது, கல்வித்துறை, இந்து அறநிலையத்துறை, கூட்டுறவுத்துறை, புவியியல் துறை, அறிவியல் துறை, ஆட்சித்துறை போன்று துறைகள் வாரியாகத் தேவைக்கேற்ப சொற்களை ஆக்குதலாகும்.

கலைச்சொல்லாக்கம் குறித்து டாக்டர் கி. கருணாகரன் பின்வருமாறு சுட்டுகிறார்.

*ஒரு மொழியில் ஏற்படும் புதுமையாக்கத்தில் கலைச்சொற்கள் புதுக்கருத்துக்கள் மற்றும் அவற்றின் விளக்கங்கள் சிறப்பாக அமையப் பெரிதும் உதவுகின்றன என்பதில் இரண்டு கருத்துகள் இருக்க முடியாது. வளர்ந்து வரும் இன்றைய அறிவியல் உலகில் கலைச்சொல்லாக்கத்திற்கு ஒரு தனியிடம் இருந்து வருகிறது. கலைச்சொல் சொல்லாக்கம் எந்த முறையில் செய்யப்பட்டுப் பயன்படுத்தப்படுகிறது என்பதைவிட, அம்மொழி பேசும் சமுதாயத்தினருக்கு எந்த அளவில் பயன்படுகிறது என்பதே மிகவும் முக்கியமாகும்.*[25]

சொல்லாக்கம் பற்றி முன்னர்ப் பேசிய ச. சோமசுந்தர பாரதியார் இங்குக் கலைச்சொல்லாக்கம் பற்றியும் தம் கருத்துகளைத் தெரிவித்துள்ளார். அதைக் கீழே காணுதல் பொருத்தமுடையதாகும்.

*கலைச்சொல் ஆக்கம் முன் அறியாத பொருள்களும் கருத்தும் எழுங்கால், பழைய நம் மொழிகளில் அதுவதற்குரிய புதிய சொற்களைப் படைத்தல் வேண்டும். இதுவரை இல்லாப் புதுக்கருத்தும், கலைகளும் உலகில் நிலவுகின்றன.*[26]

கலைச்சொற்கள் புதியதாகப் படைக்கப்படல் வேண்டும் என்பதில் பலரும் ஆர்வங்காட்டி வருகின்றனர். அப்படிப்பட்ட சூழலை தா. ஏ. ஞானமூர்த்தி,

தமிழில் புதிதாகப் பல கலைச்சொற்களை ஆக்கிக்கொள்ள முடியும். உட்கருத்தை அறிந்து புதிதாகப் படைத்துக் கொள்வது புதுச்சொற் படைப்பாகும். Radio என்பது தமிழில் வானொலி என்று வழங்கப்பெறுகிறது. இது புதுச்சொற்படைப்பாகும்[27] என்று குறிப்பிடுகின்றார். இவர் கூறும்

சான்றுபடி தமிழில் கலைச்சொல்லாக்கம் கால மாற்றத்திற்கும் தேவைக்கும் ஏற்ப நிகழ்ந்துள்ளதைக் காணமுடிகின்றது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கலைச்சொற்கள் என்ற பெயரில் ஆங்கிலம்-தமிழ் என்ற வரிசைப்படி சொற்கள் உருவாக்கப்பட்டன. இதற்குச் சான்றாக, "*1938 ஆம் ஆண்டில் திருநெல்வேலியில் உள்ள சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தார் 'கலைச்சொற்கள்' என்னும் நூலினை வெளியிட்டனர். இது ஆங்கில-தமிழ் சிறப்பு அகராதி(ப.91)*"[28] என்று வை. முத்துக்குமாரசாமி குறிப்பிடுவதை இரா. வசுமதி கையாண்டுள்ளது குறிப்பிடத்தக்கது. அதன் பின்னர் **1952**இல் ஆங்கிலம்-தமிழ் அகராதியும் **1961** இல் சிங்கள-தமிழ் அகராதியும் உருவாக்கம் பெற்றுள்ளதையும் சுட்டிச்சென்றுள்ளார்.

இந்த ஆங்கில - தமிழ்க் கலைச்சொற்களுக்குப் பின்பு, அறிவியல் துறையில் கலைச்சொல்லாக்கம் தலையெடுக்கத் தொடங்கியது. அறிவியல் கண்டுபிடிப்பின் காரணமாக அறிவியல் தமிழ்ச்சொற்கள் ஆக்குவதில் மிகுந்த ஆர்வமும் அக்கறையும் காட்டி வந்தனர். தெ. பொ. மீனாட்சிசுந்தரம் அவர்கள், அறிவியல் துறையில் கலைச்சொற்கள் ஆக்குவதில் ஈடுபாடு உடையவர் என்பதையும் முதன் முதலில் கலைச்சொல்லாக்கம் நடைபெற்றது குறித்தும் அறிவியல் தமிழாக்க நெறிமுறைகள் என்ற தம் கட்டுரையில் பேரா. கே.வி. இராஜாராம் வெளியிட்டுள்ளார்.

கலைச்சொல்லாக்கம் குறித்துப் பல அறிஞர்கள் கட்டுரைகளைப் பல்வேறு இதழ்களில் எழுதியும் மாநாடுகளில் சொற்பொழிவாற்றியும் உள்ளனர். மேலும் பலர் நூல்கள் வெளியிட்டுள்ளனர். பல கல்லூரிகளும் மாணவர்களும் சொல்லாக்க முயற்சியில் ஈடுபட்டிருந்ததைப் பின்வரும் சான்றால் அறியலாம்.

> *'கலைச்சொல்லாக்கம்' ஓர் இயக்கமாக மேற்கொள்ளப்பட்டும் 'கலைக்கதிர்' 'தமிழ்ப்பொழில்' 'தென்மொழி' 'குறள்நெறி' போன்ற இதழ்களாலும், கோவை பூ. சா. கோ. கலைக்கல்லூரி, காரைக்குடி அழகப்பர் கல்லூரி, மதுரைத் தியாகராசர் பொறியியற் கல்லூரி போன்ற கல்லூரி மாணவர்களின் சொல்லாக்க முயற்சிகளாலும் கலைச் சொற்கள் மிகுதியாக உருவாக்கப்பட்டன*[29]

என்று இ. மறைமலை குறிப்பிடுகின்றார். ஒரு சொல்லைக் கொண்டு கலைச்சொல்லாக்கம் நிகழும் தன்மையை இ. இரத்தினம் விளக்குவதை இரா. வசுமதி பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

*பல சொற்களால் குறிக்க வேண்டிய ஓர் எண்ணக் கருவினைச் செட்டாகச் சொற்சிக்கனத்துடன் எடுத்துக் கூறுவதே கலைச்சொல். 'அன்பு' என்பது 'உள்ள நெகிழ்ச்சி' என்று வரைவிலக்கணம் கூறும் பொழுது அன்பு கலைச்சொல்லாகிவிடுகிறது.*[30]

பா. சீதாராமன் கலைச்சொல்லுக்குரிய சிறப்பை வகைப்படுத்திக் கூறியுள்ளதைப் பின்வருமாறு இரா. வசுமதி எடுத்துக்காட்டியுள்ளார்.

*ஒரு கலைக்குரிய சொல் கலைச்சொல்லாகும். இவ்வாறு கூறியதால் ஒரு கலையில் அமையும் எல்லாச் சொற்களும் கலைச்சொற்கள் என்பது பொருளன்று. அவற்றிற்கெனச் சில தனித்தன்மைகள் உண்டு.*

*1. கலைப்பொருளை உணர்த்தும் சொல் கலைச்சொல்.*

*2. ஒரு துறையில் வழங்கும் சொற்கள் பொது வழக்கிலிருந்தாலும் அவை துறை வல்லார்க்குத் துறைப்பொருளை மட்டுமே உணர்த்தும்.*

*3. கலைச்சொற்கள் வட்டாரத்திற்கு வட்டாரம் பேச்சு வழக்கை அடிப்படையாகக் கொண்டு அமைவன.*

*கலைச்சொல்லாக்க முறையும் ஓர் அறிவியல் முறையாகிச் சட்டதிட்டங் களுக்குட்பட்டு இலக்கண வரம்புடைத்தாகும் என்ற சாமி. வேலாயுதம் பிள்ளை அவர்களின் கூற்று கலைச்சொற்களுக்கு ஒரு வரன்முறை உண்டென்பதை உணர்த்தும் என்ற கருத்தையும் பொருத்தமான முறையில் கையாண்டுள்ளது குறிப்பிடத்தக்கது.*[31]

மேலும் யாப்பு உறுப்புகளாக விளங்கும் தளை, தொடை அமைப்பு அடிப்படையிலும் சொல்லாக்கங்கள் நிகழ்ந்துள்ளதைத் திருவள்ளுவரின் சொல்லாக்கங்களை ஆராய்ந்தவிடத்து எடுத்துக்காட்டுகளுடன் விளக்கியுள்ளார். குறிப்பாகத் தளை அமைப்பு கருதி 'நிலத்துக்கு' என்ற சொல்லை 'நிலக்கு' எனக் குறுக்கம் செய்து வழங்கியுள்ளதை எடுத்துக்காட்டியுள்ளார். அதே போன்று தொடை அமைப்பு கருதி 'அரும்பு' என்ற சொல்லை 'அருப்பு' எனப் பயன்படுத்தியுள்ளார். ஏனெனில் 'விருப்பு' என்ற சொல்லின் தொடை நயத்திற்கு ஏற்ப அவ்வாறு மாற்றி அமைத்துள்ளார். இவ்வாறு ஆக்கம் பெற்ற சொற்களைத் தொகுத்துத் தளை அமைப்பில் சொல்லாக்கம், தொடை அமைப்பில் சொல்லாக்கம் என இரு பிரிவுகளை யாப்புறுப்புகளை அடிப்படையாகக் கொண்டு கூறியுள்ளதையும் நினைவில் கொள்ளவேண்டும்.

சொல்லாக்கம் எவ்வாறு உருவாகின்றன என்பது பற்றியும் அதற்கான ஆக்க முறைகளையும் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

*சொல்லாக்க நிலையில் பெயரிலும் வினையிலும் மாற்று வடிவங்களை உருவாக்கலாம். பெயர் மாற்று வடிவங்கள் புணர்ச்சி நிலையிலும்; வேற்றுமை உருபுகள் இணையும் போதும் வேறு சொற்களின் முன்வரும் போதும் பல வகையாக அமைகின்றன. வினைமாற்று வடிவங்கள் கால இடைநிலைகள் முதலிய ஒட்டுக்கள் மூலம் அமைகின்றன. இவ்வினை மாற்று வடிவங்களைச் சேர்க்கை, மாற்றம் என்ற இரண்டு பிரிவுக்குள் அடக்கலாம். சாரியை இணைத்தல், அடிச்சொல்லுடன் விகுதி முதலியன சேர்த்தல், இரட்டித்தல் ஆகிய கூறுகள் சேர்க்கையின் மூலமும் சொல்லடியில் நீட்சி அமைதல், மெய்யெழுத்துக்கள் மாறி அமைதல் முதலிய மாற்றம் காரணமாகவும் அமைகின்றன.*[32]

இக்கருத்தை உற்றுநோக்குகையில் சொல்லாக்கத்தில் சில இலக்கண விதிகளும் பயன்படுகின்றன என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

கலைச்சொல்லாக்கச் சிந்தனையில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு நன்னூலாரின் கலைச்சொல்லாக்கத்தை ஆய்ந்த வே. சீதாலட்சுமி அவர்கள் கலைச்சொல்லாக்கத்திற்கான காரணத்தைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்,

*கலைச்சொற்கள் ஆக்கப்படுவதற்கு இரண்டு இன்றியமையாத காரணங்கள் உள்ளன. ஒரு மொழியில் முன்பே காணப்படும் கலையை முன்புள்ளதை விட எளிமையுடனும் தெளிவுடனும் பொருள் விளங்குமாறு அமைக்க வேண்டும் என்ற எண்ணம் ஒரு காரணம். ஒரு மொழியின் இல்லாத பல கலைகளைப் புதிதாய்க் கொண்டு வரவும் கலைச் சொல்லாக்கம் தேவைப்படுகிறது*[33]

என்று கலைச்சொல்லாக்கத்தின் இன்றியமையாத தேவையைக் கூறும் இவரே, கலைச்சொற்களின் ஆக்கம் மிகுதியாகும் பொழுது ஏற்படும் பின்னடைவு களையும் சுட்டிக்காட்டுவது குறிப்பிடத்தக்கது. அதை இவ்விடம் நோக்குதல் பொருத்தமுடையதாகும்,

*கலைச்சொற்களின் பயன் பலவாக இருப்பினும், அவை அளவாக ஆக்கப்பட வேண்டுமேயன்றி, அளவிற்கதிகமாக ஆக்கப்படுதல் கூடாது. மிகுதியாக இருக்கும் கலைச்செய்திகளைச் சுருக்கி எளிதாக உணரச் செய்வனவே கலைச்சொற்கள். அக்கலைச்சொற்களே அளவிற்கு மிகுதியாக அமைந்தால் அக்கலைச் சொற்கள் கலையை எளிமையாகவும், தெளிவாகவும் விளக்குவதற்கு மாறாக, கலை பற்றிய அறிவில் தளர்ச்சியையும், குழப்பத்தையும் உண்டு பண்ணும். எனவே, கலைச் சொற்களும் ஓர் அளவிற்குட்பட்டனவாக அமைதல் இன்றியமையாத தாகும்*[34]

என்று விளக்கம் தந்துள்ளார்.

சொல்லாக்கத்தையும் கலைச்சொல்லாக்கத்தையும் வேறுவேறாகப் பிரித்துப் பாக்கும் நிலையில் சீதாலட்சுமி அவர்கள் மட்டும் இரண்டையும் ஒன்றாகப் பார்க்கிறார். அதைப் பின்வரும் இருநிலைகளில் கூறுகிறார். "*மனித வாழ்வில் பயன்படுத்தப்படும் அனைத்துச் சொற்களும் ஏதேனும் ஒரு துறை சார்ந்துதானே அமைகின்றன என்ற நிலையில் சொல்லாக்கமும் கலைச் சொல்லாக்கமும் ஒன்றே எனக் கொள்ளலாம்*"என்றும் "*சொல்லாக்கம் என்பதன் கீழ் ஒரு பொருளைக் குறிக்கும் சொல்லுக்கு மொழியின் வளம் கருதிப் பல சொற்களை ஆக்குவதிலும் இரண்டும் ஒன்றே எனப் பொருள் கொள்ளலாம்*"[35] என்றும் குறிப்பிடுகின்றார். இக்கருத்து ஒருவகையில் பொருத்தம் உடையதாகக் காணப்படுகிறது.

**சொல்லாக்க வகைப்பாடுகள்**

சொல்லாக்கம் குறித்துப் பல்வேறு அறிஞர்கள் தங்களது கருத்துகளைத் தெரிவித்துள்ளதைப் போன்று சொல்லாக்க வகைப்பாடுகள் பற்றியும் அறிஞர்களிடையே பல கருத்துக்கள் நிலவின. அவை பின்வருமாறு:

**ச. இராசேந்திரன்**

தமிழில் சொல்லாக்கத்தைப் பின்வரும் ஒன்பது வகைகளாகப் பகுத்துக் கூறுகின்றார்.

1. கூட்டாக்கம்
2. முன்னொட்டாக்கம்
3. பின்னொட்டாக்கம்
4. மாற்றம்
5. பின்வடிவாக்கம்
6. கத்தரிப்பாக்கம்
7. கலப்பாக்கம்
8. தலைப்பெழுத்தாக்கம்
9. சொல் உருவாக்கம்

**1. கூட்டாக்கம்**

கூட்டாக்கங்களை மரபிலக்கணப்படி தொகையாக்கம் என்ற வகையில் அடங்கும். பொதுவாகக் கூட்டாக்கங்களை அவை வாக்கியத்தில் பங்குபெறும் செயற்பாடு அடிப்படையில் பெயர்கள், பெயரடைகள், வினைகள், வினையடைகள் என்ற நான்கு வகைகளில் காணமுடிகிறது.

கூட்டுப்பெயர்கள் அமையும் தன்மையினைப் (பெயர் +பெயர்) என்று பிரித்து இருப் பொதுப்பெயர்கள் சேர்ந்தும் சிறப்புப்பெயரும் பொதுப்பெயரும் சேர்ந்தும் சொல்லாக்கம் நடைபெறுவதை உள்வட்டக் கூட்டுகள் என்று குறிப்பிடுகின்றார். மேலும் நேரியைபுக் கூட்டுகள், உம்மைத் தொகைக் கூட்டுகள், வெளிவட்டக் கூட்டுகள் (வினை+பெயர், பெயர்+வினை, வினை+வினை, பெயரடை+பெயர், இடைச்சொல்+பெயர், வினையடை +பெயர், தொடர்க்கூட்டுகள், இரட்டிப்புக் கூட்டுகள்) என வகைப்படுத்து கிறார் (எ.கா. பயணச்சீட்டு, அண்ணாநடை, செடிகொடிகள், பின்னுரை, பாறாங்கல், புலிகிலி).

கூட்டுவினைகள் ஆக்கப்படும் முறைகளாகப் பெயரும் வினையும், இருவினைகள், பெயரடையும் வினையும், வினையடையும் வினையும், இடைச்சொல்லும் வினையும் சேர்ந்து உருவாக்கம் பெறுகின்றன எனக் கூறுகின்றார் (எ.கா. பரிசளி, ஊக்கமூட்டு, தட்டிக்கேள்).

அடுத்துக் கூட்டுப்பெயரடைகள் (பெயர்+பெயரடை, பெயரடை+ பெயரடை, பெயர்+பெயர், வினை என்ற வாய்ப்பாடு அமைப்பு), கூட்டுவினையடைகள் ஆகிய பகுப்புகளில் கூட்டாக்கம் நடைபெறுவதாகக் குறிப்பிடுகின்றார் (எ.கா. இரத்தச்சிவப்பான, பெருவாரியான, இலைபச்சை, பசும்பொன்).

### 2. முன்னொட்டாக்கம்

தமிழில் முன்னொட்டுகள் இல்லை என்றும் சமஸ்கிருத மொழியில் இருந்து கடன் பெற்ற சில சொற்களில் முன்னொட்டுகள் காணப்படும் என்றும் எதிர்மறைப் பொருளாக்கம் தரும் முன்னொட்டுகள் தமிழில் விளைவாக்க ஒட்டாகப் பயன்படுத்தப்படவில்லை என்றும் சுட்டுகிறார்.

(எ.கா.அ+சுத்தம்>அசுத்தம்)

### 3. பின்னொட்டாக்கம்

பெயராக்கம் (பெயரிலிருந்து பெயர்கள், உயர்திணைப் பெயராக்கம், வினையிலிருந்து பெயர்கள், வினையடிகளிலிருந்து பெயர்கள், பெயரெச்சப் பகுதிகளிலிருந்து பெயர்கள், அது - தொழிற்பெயர்கள், வினையாலணையும் பெயராக்கம், பெயரடையிலிருந்து பெயர்கள், இடைச்சொற்களிலிருந்து பெயர்கள்), வினையாக்கம் (பெயரிலிருந்து வினை, வினையிலிருந்து வினை), பெயரடையாக்கம்(வேர்ச்சொற்களிலிருந்து பெயரடைகள், பெயர்களிலிருந்து

பெயரடைகள், வினைகளிலிருந்து பெயரடைகள்), வினையடையாக்கம் (பெயர்களிலிருந்து வினையடை, வினைகளிலிருந்து வினையடை) என்ற தன்மைகளில் பின்னொட்டாக்கம் அதிக விளைவாக்கம் பெற்றுள்ளதாகக் கூறுகிறார் (எ.கா. விவசாயம்>விவசாயி, ஆபரணம்>ஆபரணி).

**4. மாற்றம்**

ஒரு சொல் வடிவ வகுப்பு எந்தவித வடிவ மாற்றமும் அடையாமல் வேறு ஒரு சொல் வடிவ வகுப்பாக ஆக்கம் அடைவது மாற்றமாகும் (எ.கா. பின், முன், பிந்தி, முந்தி).

**5. பின்னாக்கம்**

தமிழில் பின்னாக்கம் இல்லையென்றாலும் சமஸ்கிருதத்திலிருந்து கடன் வாங்கப்பட்ட சில பெயர்களிலிருந்து வினைகள் ஆக்கப் பெறுவதை ஒருவித பின்னாக்கம் என்கிறார். மேலும் மரபிலக்கணத்தார் கருத்தை ஏற்றுக்கொண்டால் ஓர், இரு என்பன ஒன்று, இரண்டு என்பதிலிருந்து பின்னாக்கத்தால் விளைந்ததாயும் சான்று காட்டி விளக்கியுள்ளார் (எ.கா. விசாரணை - விசாரி).

**6. கத்தரிப்பாக்கம்**

ஒரு அகராதிச் சொல் (தனி அல்லது கலப்பு) குறுகி அதே சமயம் அதன் பொருண்மையும் வடிவ வகுப்பும் மாறாது வருவது கத்தரிப்பாக்கம் என்கிறார். மேலும் பின்னாக்கத்தையும் ஒருவித கத்தரிப்பாக்கமாகக் கொள்ளலாம் எனச் சுட்டுகிறார்(எ.கா. முதல்வர், கோவை).

**7. கலப்பாக்கம்**

தமிழில் இத்தகைய சொல்லாக்கம் இல்லை. ஆனால் ஆங்கிலம் அல்லது சமஸ்கிருதச் சொல்லுடன் தமிழ்ச் சொல்லோ விகுதியோ சேர்ந்து ஆக்கம் பெறும் கடன் கலப்புகள் தமிழில் காணப்படுகின்றன என்று குறிப்பிட்டுள்ளார் (எ.கா. ரயில் நிலையம், போலீசார்).

**8. தலைப்பெழுத்தாக்கம்**

ஒரு தலைப்பு அல்லது தொடரில் வரும் சொற்களின் முதல் எழுத்துக்களைக் கொண்டு ஆக்கம் பெறுவதைத் தலைப்பெழுத்தாக்கம் என்று விளக்குகிறார் (எ.கா. தி.மு.க., டி.வி.).

**9. சொல் உருவாக்கம்**

எந்தவித உருபனியல், ஒலியனியல் அல்லது எழுத்தியல் காரணமும் இல்லாமல் சொற்களை உருவாக்குதல் சொல் உருவாக்கம் என்பார். இந்த வகை ஆக்கம் தமிழில் இல்லை என்றும் குறிப்பிடுகின்றார்.(எ.கா. kodak)

மேற்கூறப்பட்ட சொல்லாக்க வகைப்பாடுகள் குறித்து 'சொற்கள்' என்னும் நூலில் சு. சக்திவேல் மற்றும் ச. இராசேந்திரன் ஆகிய இருவரும் ஆய்வு செய்துள்ளனர்.

**இ. மறைமலை**

இவர் ஆட்சித்துறை சொற்கோவையில் உள்ள சொற்கள் எவ்வாறு ஆக்கம் பெற்றுள்ளன என்பதைப் பற்றித் தன்னுடைய சொல்லாக்கச் சிந்தனைகள் மூலம் விரிவாக ஆய்வை நிகழ்த்தியவர். ஆட்சித்துறை சொற்கோவையில் உள்ள சொற்களில் சில ஆக்கச்சொற்களாக உள்ளதை ஆராய்ந்து, ஆக்க நெறிமுறைகளை விளக்கியுள்ளார். அச்சொல்லாக்க நெறிமுறைகளைப் பின்வருமாறு கூறியுள்ளார்.

1. ஒட்டுவழிச் சொல்லாக்கம்
2. தொகைச் சொல்லாக்கம்
3. பல்பெயர்த் தொகைச்சொல்லாக்கம்
4. கூட்டுச் சொல்லாக்கம்

இந்த நான்கு வகைப்பாடுகளின் விளக்கத்தின் சுருக்கம் பின்வருமாறு:

**1. ஒட்டுவழிச் சொல்லாக்கம்**

இரண்டு நிலைகளில் ஒட்டுவழிச் சொல்லாக்கம் நடைபெறுகின்றது. அவை முன்னொட்டுகள், பின்னொட்டுகள் இணைந்து சொற்கள் ஆக்கப்படுவதாகும். முன்னொட்டுகள் சேர்ந்து சொற்கள் ஆக்கப்படுவது முன்னொட்டுவழிச் சொல்லாக்கம் என்று குறிப்பிடுகின்றார். தமிழ் மரபில் முன்னொட்டு இல்லை எனச் சில அறிஞர்கள் கூறினும், இவர் நச்செள்ளை, நப்பின்னை ஆகிய சொற்களில் உள்ள 'ந' முன்னொட்டு எனத் திட்ட வட்டமாகக் குறிப்பிடுவதைக் காணமுடிகின்றது. இதைப் போன்று 'திரு' என்ற சொல்லையும் முன்னொட்டு எனக் குறிப்பிடுகின்றார். மேலும் சிறப்பு பொருள் பயக்கும் சொற்கள் முன்னொட்டாகத் திகழ்கின்றன என்பார்.

முன்னொட்டு போல் அல்லாமல் பின்னொட்டுகள் தமிழில் அதிகம் காணப்படுகின்றன என்றும் அவற்றின் மூலம் சொற்கள் ஆக்கப்படுவது தமிழில்

அதிக விளைவாக்கம் பெற்றுள்ளது என்றும் சுட்டுகின்றார். சான்றாக 'நடத்து > நடத்துநர்' என்பது போன்ற சொற்களை எடுத்துக்காட்டியுள்ளார். இந்த 'நர்' போன்ற பின்னொட்டுகளாகச் செயல்படும் விகுதிகள் சேர்ந்து சொற்கள் ஆக்கப்படுவது பின்னொட்டுவழிச் சொல்லாக்கம் என்பார். பின்னொட்டாக்கம் நடைபெறும் தன்மையைப் பெயருடன் விகுதிகள், வினையுடன் விகுதிகள், பெயருடனும் வினையுடனும் விகுதிகள், தொழில்பெயருடன் விகுதிகள் எனப் பகுத்து விகுதிகள் சேர்ந்து பின்னொட்டுவழிச் சொல்லாக்கம் நடைபெறுவதை விளக்கியுள்ளார்.

### 2. தொகைச் சொல்லாக்கம்

தொகைச் சொல்லாக்கம் எனும் இப்பகுதியில் இருபெயர்கள் இணைந்து சொற்கள் ஆக்கப்படுவதையும் அவ்வாறு ஆக்கப்பெறும் தொகைச் சொற்களுடன் விகுதிகள் சேர்வதையும் குறிப்பிடுகின்றார். மேலும் இப்பகுதியில் தொகைச் சொல்லின் உறுப்புச் சொற்கள், புதிய பின்னொட்டுகள், புதிய சொல்லுருபு, வினைத்தொகை, பண்புத்தொகை ஆகிய வகைகளில் சொற்கள் ஆக்கம் பெறுகின்றன என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

*எ.கா. இருபெயர்த் தொகைச் சொல்லாக்கம் (கண்ணன் பாட்டு)*

*தொகைச் சொல்லின் உறுப்புச் சொற்கள் (பாசனத்திட்டம்)*

*புதிய பின்னொட்டுகள் (குத்தகை வழக்கு)*

*புதிய சொல்லுருபு (அடிப்படைக் கல்வி)*

*வினைத்தொகை (சாய்தளம்)*

*பண்புத்தொகை (மருத்துவக் கல்லூரி)*

### 3. பல்பெயர்த் தொகைச் சொல்லாக்கம்

பல்பெயர்த் தொகைச் சொல்லாக்கம் பற்றி விளக்க முற்பட்ட இ. மறைமலை அவர்கள், தே. ஆண்டியப்பன் குறிப்பிடும் நான்கு வகைத் தொகைச் சொல்லாக்க வாய்பாடுகளை எடுத்துக்காட்டுகின்றார். அதில் முதல்வகை (பெயர்+பெயரெச்ச மூலம்+பெயர்) மட்டும் ஏற்புடையது என்றும் மற்றவை (பெயர்+பெயரெச்ச மூலம்[பெயரடை]+பெயர், பெயர்+பெயரெச்ச மூலம்+பெயரெச்ச மூலம்+பெயர், X+பெயரெச்ச மூலம்+பெயர்) பொருந்தா என்றும் விளக்கம் தருகின்றார். இதை அடுத்துப் பல்பெயர் வேற்றுமைத் தொகை, பல்பெயர் பண்புத்தொகை, பல்பெயர் வினைத்தொகை, பல்பெயர்

உம்மைத்தொகை ஆகிய அமைப்பு நிலைகளில் பல்பெயர்த் தொகைச் சொல்லாக்கம் பற்றி விரிவாக விளக்கம் தந்துள்ளார்.[36]

எ.கா. நடுத்தர வருவாய் வகுப்பு, தற்காலிக இருப்புப்பாதை, மிதி காற்றாடி, வரவுசெலவுதிட்டம்.

**4. கூட்டுச் சொல்லாக்கம்**

இந்த வகைச் சொல்லாக்கத்தைப் 'பற்றாக்குறை, கூட்டுச் சேராக் கொள்கை, வட்டியில்லா கடன், தொலைநோக்கி' ஆகிய சொற்களை அடிப்படைச் சான்றாகக் கொண்டு விளக்க முயற்சி செய்துள்ளார். இந்த சொற்கள் ஒவ்வொன்றையும் கொண்டு வாய்ப்பாடு அமைப்புகளில் விளக்கம் தந்துள்ளது குறிப்பிடத்தக்கது. எ.கா. ஈட்டா விடுப்பு, குடிசைமாற்று வாரியம், சுங்கவரியிலா வணிகம், மீன்கொத்தி.

**க. பாலசுப்பிரமணியன்**

பழந்தமிழில் சொல்லாக்க நெறிகள் என்னும் பொருளில் ஆய்வு செய்த இவர் தொல்காப்பியத்தில் நிகழ்ந்துள்ள சொல்லாக்கங்களை ஆராய்ந்துள்ளார். ஆய்வில் சில சொல்லாக்க வகைகளைக் கையாண்டுள்ளார். அவை பின்வருமாறு:

வினையிலிருந்து வினை மற்றும் பெயர், பெயரிலிருந்து பெயர் மற்றும் வினை ஆக்கம் பெறுவது குறித்து ஆராய்ந்துள்ளார். மேலும் சொல்லாக்க நெறியாக,

1. விகுதி பெறுதல்
2. பகுதி வடிவம் வேறுபடுதல்
3. பகுதி மாத்திரம் நின்று வேறு சொல்லாதல்

இவை மூன்றும் உருபு அடிப்படைச் சொல்லாக்க நெறிகள் எனவும்

1. பொருட்பன்மை
2. ஒருபொருட் பன்மொழி
3. பொருள் மாற்றம் இல்லா வெற்றாக்கம்

இவை மூன்றும் பொருள் நிலையில் சொல்லாக்க நெறிகள் எனவும் இரு நிலைகளில் சொல்லாக்க நெறிமுறைகளை வகைப்படுத்துவது குறிப்பிடத்தக்கது.

**தேவநேயப் பாவாணர்**

பாவாணர் சொல்லாக்க நெறிகளாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடுகின்றார்.

1. விகுதி வழி ஆக்கம்
2. நேர்ச்சொல் காணல்
3. மொழிபெயர்ப்புவழி ஆக்கம்
4. வேர்ப்பொருள் சொல் காணல்
5. சிறப்பியற் சொல்
6. ஒலிபெயர்ப்பு

இவற்றைப் பெயரளவில் மட்டுமே வகைப்படுத்திக் கூறியுள்ளார் எனலாம்.

**வ. ஜெயதேவன்**

அகராதியியல் துறையில் குறிப்பிடத்தக்க அளவில் சிறந்த ஆய்வை நிகழ்த்தி, இன்றுவரை அகராதி உருவாக்கத்திலும் அகராதியியல் சார்ந்தும் தன்னுடைய சிந்தனைகளை வெளிப்படுத்தி வருபவர். இவர் சொல்லாக்கம் குறித்த சிந்தனையில் ஈடுபடுகையில் அதை இரு நிலைகளில் பகுத்து விளக்குகிறார். அதாவது, ஆக்கம், சொல்லாக்கம் எனப் பிரித்து ஆக்கம் என்பது அடிச்சொல்லின் முன்னோ பின்னோ ஒட்டு இணைக்கும் சொல்லியல் செயல்பாட்டால் விளைவது. இது ஒட்டாக்கம் எனவும் பெயர் பெறும் என்கிறார். அதை முன்னொட்டாக்கம், பின்னொட்டாக்கம் என இருநிலையில் பிரித்துச் சான்று காட்டுகிறார். முன்னொட்டாக்கத்திற்கு அநீதி, மறுதேர்வு என்பதையும் பின்னொட்டாக்கத்திற்குப் பொரியல், நலம் என்பதையும் சான்றாகக் கூறியுள்ளார். அடுத்துச் சொல்லாக்கத்தை,

1. கூட்டாக்கம்
2. மாற்றாட்டாக்கம்
3. கலப்பாக்கம்
4. குறைப்பாக்கம்
5. ஒப்புமையாக்கம்
6. பின்னாக்கம்
7. இரட்டிப்பாக்கம்
8. கடனாக்கம்
9. புத்தாக்கம்
10. ஒலிக்குறிப்பாக்கம்

எனப் பத்து வகைகளாகப் பிரித்து விளக்கியுள்ளார்.

**1. கூட்டாக்கம்**

இரண்டு அல்லது இரண்டுக்கும் மேற்பட்ட அடிச்சொற்களின் கூட்டிணைவால் விளைவது. இதை அகவட்டக் கூட்டாக்கம், புறவட்டக்

கூட்டாக்கம் எனப் பிரித்து அகவட்டக் கூட்டாக்கத்திற்கு எலிப்பொறி, ஓய்வுத் தலம் என்பதையும் புறவட்டக் கூட்டாக்கத்திற்கு மரமண்டை, இரும்பு மனிதர், தேனிலவு என்பதையும் சான்றாகக் கூறியுள்ளார்.

**2. மாற்றாட்டாக்கம்**

ஒரு சொல் வகை தன்னளவில் மாற்றமுறாது வேறு சொல் வகையாக மாற்றமுறுவதால் விளைவது. எ.கா. வணக்கம் > வணக்கங்கள், புன்னகை > புன்னகைத்தல்

**3. கலப்பாக்கம்**

இரண்டு அல்லது அதற்கும் மேற்பட்ட சொற்களின் பகுதி கலப்பதால் விளைவது.

எ.கா. தே+இலை+நீர் > தேநீர், ஆதன்+தந்தை > ஆந்தை

**4. குறைப்பாக்கம்**

ஒரு சொல் அல்லது சொல் தொகுதியைக் குறைத்தலால் விளைவது. இதை மூன்று வகையாகப் பகுத்து விளக்குகிறார்.

*(1)* கத்தரிப்பாக்கம்/வெட்டாக்கம்

ஒரு சொல்லை எளிமை கருதிச் சுருக்கிக் கொள்வதாகும். கிலோகிராம் > கிலோ, பரமசிவம் > பரமு, திருச்சிராப்பள்ளி > திருச்சி, முதனிலை : ஆகாய விமானம் > விமானம், இடைநிலை : பருப்பு > பப்பு, கடைநிலை : பேராசிரியர் > பேரா.

*(2)* சுருக்கவாக்கம்

சொற்களைச் சுருக்கி எழுத்தாகக் கொள்வது. எ.கா. : கி.மு., கி.பி., எ-டு, ஆ-ர்.

*(3)* தலைப்பெழுத்தாக்கம்

பல சொற்களின் முதல் எழுத்துகள் சேர்வதால் ஒரு சொல் நீர்மையதாக விளைவது. இது தமிழில் குறிப்பிடும்படி இல்லை. ஆங்கிலம் போன்ற மொழிகளில் உள்ளன.

எ.கா. : ADIS > Acquired Immuno Deficiency Syndromes

**5. ஒப்புமையாக்கம்**

ஒரு சொல் வடிவத்திற்கு ஒப்புமையானதாக இன்னொரு சொல்லை உருவாக்குவதாகும். எ.கா. : ஒருவன் > ஒருவள், நண்பன் > நண்பி.

**6. பின்னாக்கம்**

ஒரு சொல் வடிவத்திற்கு ஒப்புமையானதாக இன்னொரு சொல்லை உருவாக்குதல். அதாவது, ஒரு பெயர்ச் சொல்லுக்கு இணையான வினைச் சொல்லை ஆக்குவதாகும்.

எ.கா. : முயற்சி > முயற்சித்தல், பயணி > பயணித்தல்.

**7. கடனாக்கம்**

பிறமொழிச் சொற்களைக் கடன் கோடலால் விளைவது.

எ.கா. : மில்லியன், சப்பாத்தி, கருப்புப்பணம்.

**8. புத்தாக்கம்**

புதுவதாகப் படைத்தலால் விளைவது.

எ.கா. : பட்டினிப்போர், கணினி.

**9. இரட்டிப்பாக்கம்**

சொல் முழுமையாக இரட்டித்தல் மற்றும் பகுதியாக இரட்டித்தல். மேலும் எதுகை அமைப்பில் இரட்டித்தல் என்பன இவ்வகையில் அடங்கும்.

எ.கா. : கிசுகிசு, மீள்பயில்வு, காரசாரம்.

**10. ஒலிக்குறிப்பாக்கம்**

ஒன்றன் பெயரை அதனோடு தொடர்புடைய ஒலிக்குறிப்பைக் கொண்டு உருவாக்குவதாகும்.

எ.கா. : மியாவ், காக்கா, பூம்பூம்.

இவ்வாறு சொல்லாக்கங்களைப் பகுத்து விளக்கியுள்ளார்.

**சீதாலட்சுமி**

சிங்கப்பூர் பகுதியில் வாழும் மக்கள் பயன்படுத்தும் தொடர்புச் சாதனங்களில் நிழ்ந்துள்ள சொல்லாக்கங்களைப் பகுத்துக் கூறியுள்ளதைப் பின்வருமாறு காணலாம்.

1. தமிழ் ஒட்டுக்களைப் பிறமொழிச் சொற்களுடன் இணைத்தல்.

எ.கா. பேங்க்+இயல் - பேங்கியல்.

2. இருமொழிச் சொற்கள் இணைந்து புதுச்சொல் வரல்.

எ.கா. அதிகம்+பாக்கியசாலி - அதிகப்பாக்கியசாலி.

*3.* ஆங்கிலச் சொல்லின் முழுப்பொருளையும் விளக்கும் வகையில் சொல்லாக்குதல்.

எ.கா. power cut - விளக்கணைப்பு.

*4.* அதிகம் புழங்கப்படாத பழந்தமிழ்ச் சொற்கள் புதுவாழ்வு பெறல்.

எ.கா. இரத்த மறுகுருதியேற்ற சேவை.

*5.* ஆகுபெயர்களாகச் சொல்லாக்குதல்.

எ.கா. டாக்சியில் ஏறிச் சவாரிமீட்டரை முதலில் பார்க்கவேண்டும்.

*6.* ஒரு நீண்ட சொல் பின் சுருங்கி வேறுபொருளுக்குச் சொல்லாதல்.

எ.கா. பட்டயம்.

*7.* தமிழுக்கேற்ப ஓரளவு பொருளை மாற்றிச் சொல்லாக்கம் செய்தல்.

எ.கா. cable car - கம்பிவண்டி.

*8.* நல்ல சொல் பயன்பாடு.

எ.கா. துல்லியப் பொருளியல்.

*9.* இ, நர், அகம், ஞன் எனப் பின்னொட்டுகளை இணைத்துச் சொல்லாக்கல்.

எ.கா. காலணியகம்.

*10.* சொற்கள் அளவில் சுருங்குதல்.

எ.கா. வீடமைப்பு வளர்ச்சி கழகம் - வீ.வி.கழகம்.

*11.* சொற்களை எளிமையாக்குதல்.

எ.கா. polytechnic - poly.

எனப் பகுத்து நோக்கியுள்ளது, அன்றாடம் மக்கள் வாழ்வில் பயன்படுத்தும் சொற்களாக உள்ளதைக் காணமுடிகின்றது.

**வே. சீதாலட்சுமி**

நன்னூலாரின் கலைச்சொல்லாக்க முறைகளை ஆராய்ந்த இவர், சில சொல்லாக்க வகைகளைப் பகுத்துக் கூறியுள்ளார். அதைப் பின்வருமாறு நோக்கலாம்,

1. விகுதி சேர்த்தல்
2. தொகையாக்கல்
3. கூட்டுச்சொல் அமைத்தல்

4. பிறமொழிச் சொற்களைக் கையாளுதல்

என்ற நான்கு பிரிவுகளில் விளக்கியுள்ளார்.

**1. விகுதி சேர்த்தல்**

பெயராகவோ, வினையாகவோ அமையும் பகாப்பதங்களுடன் விகுதி சேர்த்துச் சொற்களை உருவாக்குவது இச்சொல்லாக்க முறைகளில் ஒன்றாகும். இவ்வகையில் பெயராக்க விகுதிகளைச் சேர்த்துப் பெயர்களும், வினையாக்க விகுதிகளைச் சேர்த்து வினைச் சொற்களும் ஆக்கப்படுகின்றன.

(1)பெயராக்க விகுதி சேர்த்தல்

வினையடிகளோடு அம், அல், வு, ஐ, கு, கை, சி, து, தல், தி, மை, பு, வை, அன் என்பன போன்ற விகுதிகள் சேர்ந்து பெயர்கள் உருவாகின்றன.

எ.கா. இணை+அம் > இணையம், பரவு+அல் > பரவல்.

(2) பெயரடிச் சொல்லுடன் அம், வு, ஐ, கு, சி, பு, மை, றி, று, என்பன போன்ற விகுதிகள் சேர்ந்து பெயர்கள் உருவாகின்றன.

எ.கா. மன்று+அம் > மன்றம், நல்+றி >நன்றி.

(3) கருத்தா விகுதி

காரன், காரி, காரர், சாலி, ஆளர், ஆளன், ஆளி, நர், போன்ற விகுதிகள் கருத்தா விகுதிகளாக அமைவதைக் காணலாம். இவ்விகுதிகள் ஒரு செயலைச் செய்பவரைக் குறித்து வருவதால் கருத்தா விகுதிகள் எனப்படுகின்றன.

எ.கா. வேலைக்காரன் - வேலைக்காரி.

(4) கருவி விகுதி

ஒரு செயலைச் செய்ய உதவும் கருவிப்பொருளை உணர்த்தும் விகுதிகளைக் கொண்டு கலைச்சொற்கள் மிகுதியும் ஆக்கப்படுகின்றன. கருவிப் பொருள் விகுதியாக இகரவிகுதி அமைகின்றது.

எ.கா. மண்வெட்டு+இ > மண்வெட்டி, தொலைபேசு+இ > தொலைபேசி.

(5) வினையாக்க விகுதி சேர்த்தல்

தமிழில் பெயரடிகளோடு விகுதி சேர்த்து வினையாக்கம் செய்வது குறைவாகவே காணப்படுகிறது. ஆனால், பிறமொழிச் சொற்களுடன் இணைந்து வினையாக்கம் நடைபெறுவது மிகுதியாகக் காணப்படுகின்றது. இகர, உகர விகுதிகளை வினையாக்க விகுதிகளாகச் செயல்படுகின்றன.

எ.கா. காதல்+இ > காதலி, நாண்+உ > நாணு, உபயோகம்+இ > உபயோகி, கோபம்+இ > கோபி.

(6) விகுதியோடு விகுதி சேர்த்தல்

வினையடிகளுடனும், பெயரடிகளுடனும் ஒரு விகுதி சேர்ந்து சொல்லாக்கம் செய்வது போல், விகுதிக்கு மேல் விகுதி சேர்ந்தும் சொற்கள் உருவாகின்றன.

எ.கா. விடுதலை, நிலையம்.

**2. தொகையாக்கம்**

இரு பெயர்களைத் தொகுத்து ஒருசொல் நீர்மைத்தாக அமைத்து வழங்குவது தொகையாகும். இதுவும் தமிழின் சொல்லாக்க முறைகளில் ஒன்றாகக் காணப்படுகிறது. ஆயின் பெயரோடு பெயரும், வினையும் தொகுக்கப்பட்டு வருவது தொகை என்றும் கூறுவார். இக்கூற்று ஏற்புடைத்தன்று என்றும், பெயரோடு பெயர் தொக்கதே தொகை என்றும் கூறப்படுகிறது.

இரு பெயர்களை இணைத்துத் தொகையாக்குவதில் ஆறு வகைகளைக் குறிப்பிடுகின்றார். அவை வேற்றுமைத் தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என்று ஆறு வகைகளாகும். இவ்வகைகள் மரபிலக்கணத்தாரால் அமைக்கப் பட்டனவாம் என்று சுட்டுகிறார்.

எ.கா. வேற்றுமைத்தொகை > பணவீக்கம்
வினைத்தொகை > இணைதிறன்
பண்புத்தொகை > வட்டப்பாதை
உவமத்தொகை > துடியிடை
உம்மைத்தொகை > போக்குவரத்து
அன்மொழித்தொகை > பொற்றொடி.

**பன்மொழித்தொகை**

வேற்றுமைத்தொகை முதலாக அன்மொழித்தொகை ஈறாகக் கூறிய தொகைகள் இருபெயர்கள் தொக்கு வரும் தொகைகளாம். இவற்றில் உம்மைத்தொகை இரண்டிற்கும் மேற்பட்ட பெயர்கள் இணைந்து அமைவதைக் காணலாம். இவ்வாறன்றி இரண்டுக்கும் மேற்பட்ட பெயர்கள் பல தொகை அமைப்புகளில் இணைந்து பன்மொழித்தொகை அமைகின்றது.
எ.கா. உலகப்பொதுமறை, பள்ளிப் பாடதிட்டம்

### 3. கூட்டுச்சொல் அமைத்தல்

கூட்டுச்சொற்கள் கூட்டுப்பெயர்களாகவும், கூட்டுவினைகளாகவும் ஆக்கம் பெறுகின்றன.

(1) கூட்டுவினையாக்கல்

கூட்டுவினைச்சொற்கள் செய்து, செய எனும் வினையெச்சச் சொற்களுடனும், பெயர், வினை ஆகியவற்றுடனும், இடைச்சொற்களுடனும் பிடி, வை, செய், இடு, கொள் போன்ற துணைவினைச்சொற்களை இணைத்து உருவாக்கப்படுகின்றன.

எ.கா. பெயர்+துணைவினை > ஆசைப்படு, வழிபடு.

வினையெச்சம்+துணைவினை > கண்டுபிடி, ஆடச்செய்.

இடை+வினை > மேற்கொள், கீழ்ப்படி.

என்ற மூன்று நிலைகளில் வினைச்சொல்லாக்கம் நிகழ்ந்துள்ளதைக் குறிப்பிட்டுச் சென்றுள்ளார்.

(2) கூட்டுப்பெயர்களை ஆக்கும் முறைகள்

ஆறு நிலைகளில் கூட்டுப்பெயர்கள் ஆக்கப்படுவதைப் பகுத்துக் கூறியுள்ளார். கூட்டுப்பெயர்கள் ஆக்கப்படுவதிலும் இருசொல் கூட்டு, பலசொல் கூட்டு என்ற வகையில் பிரித்து விளக்கியுள்ளார்.

(அ) கூட்டுவினைகளுடன் 'தல்' விகுதி சேர்த்துக் கூட்டுப்பெயர்கள் உருவாக்கப்படுகின்றன.

எ.கா. வழிபடுதல், ஒப்பிடுதல்.

(ஆ) கூட்டுவினைகளில் அமையும் இடு, படு, கொள் போன்ற துணைவினைகள் முதனிலைத் திரிந்த பெயர்ச்சொற்களாக மாறுவதன் மூலம் கூட்டுப் பெயர்ச் சொற்கள் உருவாக்கப்படுகின்றன.

எ.கா. வழிபடு > வழிபாடு - படு என்பது பாடு என மாறியது.

மேற்கொள் > மேற்கோள் - கொள் என்பது கோள் என மாறியது.

(இ) கூட்டு வினைச்சொற்களுடன் இகர விகுதி சேர்ந்து மிகுதியான சொற்களை உணர்த்துவதைக் காணலாம். இவை பெரும்பாலும் கருவிப்பொருளை உணர்த்தும் சொற்களாகவே அமைகின்றன.

(ஈ) கூட்டு வினைச்சொற்களுடன் புகர விகுதி சேர்ந்து கூட்டுப் பெயர்கள் உருவாகின்றன.

எ.கா. கண்டுபிடி+பு > கண்டுபிடிப்பு.
மொழிபெயர்+பு > மொழிபெயர்ப்பு.

(உ) கூட்டு வினைச்சொற்களுடன் 'அல்' விகுதி சேர்ந்தும் கூட்டுப்பெயர்கள் ஆக்கப்படுகின்றன.

எ.கா. ஊடுருவு+அல் > ஊடுருவல்.
ஒளிவிலகு+அல் > ஒளிவிலகல்.

(ஊ) கூட்டு வினைச்சொற்களுடன் வுகர விகுதி சேர்ந்தும் கூட்டுப்பெயர்கள் உருவாகின்றன.

எ.கா. சீர்குலை+வு > சீர்குலைவு.

(எ) செய்த, செய்யும், செய்யா என்னும் பெயரெச்ச வாய்பாடுகளிலமைந்த சொற்களுடனும் பெயர்களிணைந்து கூட்டுப் பெயர்கள் உருவாக்கம் பெறுகின்றன.

எ.கா. பெயரெச்சம்+பெயர் > அணையா விளக்கு, வாடா மலர்.

(ஏ) பன்மொழிக் கூட்டுச்சொல்

பெயரும். வினையும், பெயரும் என இரண்டிற்கு மேற்பட்ட சொற்கள் இணைந்து கூட்டுப் பெயர்கள் உருவாகின்றன.

எ.கா. காது கேட்கும் கருவி.

### 4. பிறமொழிச் சொற்களைக் கையாளுதல்

தமிழ்மொழியின் அமைப்பிற்கு ஏற்ப பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்துவதைத் தமிழாக்கம், ஒப்பொலியாக்கம், ஒலிபெயர்ப்பு, வேற்றொலிக் கலப்பு, பிறமொழி மற்றும் தமிழ்மொழிச் சொல்லிணைவு ஆகிய ஐந்து பிரிவுகளில் விளக்கியுள்ளார்.

**4.1.1.** தமிழின் மொழி முதலில் சில உயிர் மெய்கள் தனித்து நிற்கவில்லை, ஆகவே, அம்மெய்களை மொழி முதலில் கொண்ட பிறமொழிச் சொற்களைப் பெயர்த்தாளும் பொழுது அவற்றின் முன் உயிர் சேர்த்து அமைக்கப்படுகின்றன. இதை நன்னூலாரின் கருத்துப்படி விளக்குகிறார்.

எ.கா. இராமன், இலாபம், உரோமம்

**4.1.2.** தனி மெய்யெழுத்துகளை முதலில் கொண்ட பிறமொழிச் சொற்களைத் தமிழில் அமைக்கும் பொழுது அம்மெய்யெழுத்துகளுடன் உயிரிணைத்து வழங்க வேண்டும்.

எ.கா. த்யானம் - தியானம்

**4.1.3.** சில பிறமொழியெழுத்துகளைத் தமிழில் மொழி பெயர்க்க நேரிடும் பொழுது ஸ், ஷ், ஜ், போன்ற எழுத்துகளுக்கு மாறாக த், ச், ட்ச், ட் போன்றவற்றை அமைத்துச் சொற்களை உருவாக்குவது தமிழ் நியதியாகும். இவை தமக்குள் குறிப்பிட்ட வரன்முறைகளோடு அமைகின்றன.

எ.கா. சாஸ்திரம் - சாத்திரம், ஜனம் - சனம், அஷ்டமி - அட்டமி.

**4.1.4.** மொழி இடையில் மயங்கி வாரா என விலக்கப்பட்ட இரு மெய்கள் மயங்கி வருங்கால் இடையில் உயிர் சேர்த்தே வழங்கப்பெறும்.

எ.கா. சூர்யன் - சூரியன்.

**4.2.** ஒப்பொலியாக்கம்

பிறமொழிச் சொற்களுக்கு ஒத்த ஒலியுடைய தமிழ்ச் சொற்களை அப்பிறமொழிச் சொற்களுக்கீடாக ஆள்வதனை ஒப்பொலியாக்கம் எனலாம்.

எ.கா. பாரிஸ் - பாரிமுனை.

**4.3.** ஒலிபெயர்ப்பு

பிறமொழி ஒலிகளோடு ஒலிப்பில் நெருக்கம் உடையனவாய்த் தமிழில் சில ஒலிகள் காணப்படுகின்றன. அவ்வொலிகளைக் கொண்டு பிறமொழிச் சொற்களைத் தமிழில் பிறமொழியில் உள்ளவாறே ஒலித்து வழங்குவது இவ்வகையாகும்.

எ.கா. ரிப்பன், ரயில்.

**4.4.** வேற்றொலிக் கலப்பு

பிறமொழிச் சொற்களை மொழிபெயர்த்தாளும் பொழுது, ஒரு சில இடங்களில் தமிழில் இல்லாத பிறமொழிக்குரிய ஒலிகளும், அவற்றிற்குரிய எழுத்துகளால் அப்படியே எடுத்தாளப்படுகின்றன. இதுவே வேற்றொலிக் கலப்பாகும். வடமொழியிலுள்ள ஷ், ஸ், ஹ் போன்ற ஒலிகள் தமிழில் அமைத்துச் சொல்லாக்கம் செய்யப்படுகிறது.

எ.கா. ரஸ்தா, பஸ், ஷோரூம்.

4.5. பிறமொழி, தமிழ்மொழிச் சொல்லிணைவு

பிறமொழிச் சொற்களுடன் தமிழ்மொழிச் சொற்கள் இணைந்து சொல்லாக்கம் நடைபெறுகிறது.

எ.கா. எக்ஸ் கதிர், கார்பன் தாள்.

**பொற்கோ**

சொல்லாக்கம் பற்றி இரு நிலைகளில் விளக்கம் தந்துள்ளார். அவற்றில் முதல் நிலை

1. பொருள்விரிவு பெறுதல்.
2. உருவு திரிதல்.
3. விகுதிகள் சேர்தல்.
4. சொற்றொகை.

ஆகிய நான்கு பிரிவுகளில் விளக்கப்படுகிறது.

**1. பொருள் விரிவு பெறுதல்**

ஒரே சொல் பெயராகவும் வினையாகவும் செயல்படுவது பொருள் விரிவு கருதி ஆக்கப்படுதல் என்கிறார். மலர், அடி, பூ போன்ற சொற்கள் வினையாகவும் பெயராகவும் வருகின்றன. இவை பொருள் விரிவு கருதி ஆக்கப்பட்டவை என்று எடுத்துக்காட்டுகிறார்.

இது மரபான இலக்கண நிலை என்று தோன்றினும் "*மலர் என்பது பெயராக வருங்கால் ஒரு சொல் என்றும் வினையாக வருங்கால் வேறொரு சொல் என்றும் கருதினால் சொற்களின் பயன்பாட்டில் ஏற்படுகிற மாற்றமும் சொல்லாக்க உத்திகளில் ஒன்றாக அடங்கிவிடும்*"[37] என்று குறிப்பிடுகின்றார்.

**2. உருவு திரிதல்**

உயிரொலி நீண்டும் உயிர்கள் மாறியும் மெய்கள் இரட்டித்தும் மெய்கள் மாறியும் சொற்களின் உருவில் தோன்றும் திரிபுகள் புதிய சொற்களை உருவாக்குவதுண்டு.

எ.கா. உண் > ஊண் - உயிரொலி நீட்சி.
தொடை > துடை - உயிர் மாற்றம்.
வெளி > வெள்ளி - மெய் இரட்டு.
அளபு > அளவு - மெய் மாற்றம்.

உருமாற்றம் பெற்றும் பொருள் மாறாது இருக்கும் நிலையையும் காணமுடிகிறது.

எ.கா. வெயில் > வெய்யில், மெல்ல > மெள்ள.

### 3. விகுதி சேர்தல்

ஒரு சொல்லோடு ஒன்றும் பலவுமாக விகுதிகள் சேர்ந்து, புதிய சொற்கள் பிறப்பது பெரும்பான்மை. எண்ணம், நோக்கம் முதலிய சொற்களில் அம் விகுதியும் விலை, கொலை முதலிய சொற்களில் ஐ விகுதியும் சேர்ந்து சொற்கள் உருவாகியுள்ளன. விடுதலை, கெடுதலை முதலிய சொற்களில் தல், ஐ முதலிய இரண்டு விகுதிகள் ஒருங்கு சேர்ந்துள்ளன.

விகுதிகள் சேர்ந்தும் பொருள் மாற்றம் ஏற்படாமல் சொற்கள் ஒருசொல் நிலையிலேயே நிற்பதும் உண்டு. நோக்கு >நோக்கம் எனவும் குன்று > குன்றம் எனவும் வான் > வானம் எனவும் கான் >கானம் எனவும் அமைந்துள்ள சொற்களை எடுத்துக்காட்டி விளக்கம் தந்துள்ளார்.

### 4. சொற்றொகை

பட்டறிவு, பகுத்தறிவு என்பன பட்டறி, பகுத்தறி என்ற கூட்டு வினைகளோடு வு விகுதி சேர்ந்து பிறந்தன என்றும் கருங்கல், செங்கல் என்பன கரும், செம் என்ற அடைகள் கல் என்ற சொல்லோடு சேர்ந்து பிறந்தன என்றும் சான்று காட்டித் தொகைச்சொல்லாக்கம் பற்றி விளக்கியுள்ளார்.

இரண்டாம் நிலையில் புதுச்சொல் பற்றிய தேவையை நிறைவு செய்யும் முறைகளைத் தமிழில் மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம் என்கிறார். அவை,

1. நம்மிடமுள்ள தமிழ்ச் சொற்களையே சீர் செய்து தேவையை நிறைவு செய்தல்.
2. தமிழ் முறையில் தமிழைக் கொண்டு புதுச்சொற்களை ஆக்குதல்.
3. பிறமொழிச் சொற்களைத் திரித்தும் திரிக்காமலும் ஆளுதல்.[38]

என்பனவாகும்.

1. தமிழ்ச் சொற்களையே சீர்செய்து தேவையை நிறைவு செய்தல். அதாவது வழக்கில் இல்லாத பழைய சொற்களைப் புதிய பொருளில் ஆட்சிக்குக் கொண்டு வருதல்.

எ.கா. அங்காடி, மாநிலம், மாவட்டம்.

2. தமிழ்முறையில் தமிழ் கிளவிகளைக் கொண்டு புதுச் சொற்களை ஆக்குதல். இவ்வகையில் மூன்று நிலைகளில் சொல்லாக்கம் நடைபெறுவதாகச் சுட்டுகிறார்.

2.1. விகுதிகளைச் சேர்த்தல்
2.2. பெயரோடு பெயர் சேர்தல்
2.3. கூட்டு வினைகள் சேர்தல்

மேற்காணும் மூன்று பிரிவுகளை விரிவாகப் பின்வருமாறு காணலாம்.

### 2.1. விகுதிகளைச் சேர்த்தல்

விகுதிகளைச் சேர்த்துச் சொற்கள் ஆக்கம் பெறுவதில் அம், அன், அள், அர், அல், இயல், இல், உள், ஐ, காரன், காரி, காரர், கை, படி, பாடு, பு, மதி, மான், மானம், மை, வி, வு, முதலாய விகுதிகள் காலந்தோறும் புதுச்சொற்களை உருவாக்கப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

எ,கா. வேலைக்காரன், வேலைக்காரி.

### 2.2. தொகைகளை அமைத்தல்

புதிய சொற்கள் தேவைப்படும்போது தொகைகளை ஆக்கிக் கொள்வது தமிழில் நெடுங்காலமாகக் கையாளப்பட்டு வரும் உத்தியாகும். இது இரு பெயர்த்தொகை, பல்பெயர்த்தொகை என இரு நிலைகளில் ஆக்கம் பெறுகின்றன.

எ.கா. ஊராட்சி, சட்டமன்றம்.

### 2.3. கூட்டுவினைகளை உருவாக்கல்

புதிய வினைச்சொற்களை உருவாக்கும்போது தா, வா, உறு, உன், முதலிய துணைவினைகளைப் பெயரோடு அல்லது வினையோடு சேர்த்தல் தமிழ் வரலாறு கண்ட ஒரு உத்தி. புறந்தந்தான், போத்தந்தான், திரிந்தணன், தைவந்தான், அழிவந்தான், கண்ணுற்றான், பேறுற்றான், புதையுண்ட நகரம், மையுண்ட கண், முதலாய எடுத்துக்காட்டுகளில் வினையாக்க உத்திகள் பயன்பட்டுள்ளமையைக் காணலாம்.

இவ்வாறே, இக்காலத்தில் ஆகு, ஆக்கு, ஆடு, எடு, கொள், கொடு, செய், தீர், படு, படுத்து, பண்ணு, போடு முதலாய வினைகள் பெயரோடும் பிடி, கொள், கொடு முதலாய வினைகள் செய்தென் எச்சத்தோடும் சேர்ந்து புதிய வினைகளை உருவாக்குகின்றன.

எ.கா. உருவாகு, உருவாக்கு.

### 3. பிறமொழிச் சொற்களைத் திரித்தும் திரிக்காமலும் ஆளுதல்

தமிழாக்கம், ஒப்பொலியாக்கம், ஒலிபெயர்ப்பு, வேற்றொலிக் கலப்பு என்ற தன்மைகளில் சொல்லாக்கம் நடைபெறும் என்று குறிப்பிடுகிறார்.

#### 3.1. தமிழாக்கம்

பிறமொழிச் சொற்களைத் தமிழ்த் தன்மையில் திரித்து ஆளுதல்.

எ.கா. ஸ்தலம் - தலம், சாஸ்திரம் - சாத்திரம்.

#### 3.2. ஒப்பொலியாக்கம்

ஒத்த ஒலியுடைய தமிழ்ச் சொற்களை ஆளுதல்.

எ.கா. பாரிஸ் - பாரிமுனை, பார்லிமெண்ட் - பாராளுமன்றம்.

#### 3.3. ஒலிப்பெயர்ப்பு

தமிழ் ஒலிகளைக் கொண்டு பிறமொழிச் சொற்களை எழுதுதல்.

எ.கா. Rocket - ராக்கெட், Lorry - லாரி.

#### 3.4. வேற்றொலிக் கலப்பு

தவிர்க்க இயலாத சூழலில் புதிய எழுத்துகளின் உதவியோடு பிறமொழி ஒலியன்களை ஆளுதல்.

எ.கா. ஸ்டேஷன்.

### இரா. கணேசன்

அறிவியல் துறை சார்ந்து சொல்லாக்க முறைகளைப் பகுத்துக் கூறும் இவர் மூன்று பிரிவுகளில் வகைப்படுத்துகிறார். அவை,

1. சிறப்புப் பெயர்கள்
2. இடுகுறிப்பெயர்கள்
3. காரணப்பெயர்கள் என்பனவாகும்.

### 1. சிறப்புப் பெயர்கள்

'நன்றி கருதிய சிறப்புப் பெயர்கள்' என்ற வகைப்பாட்டைத் தந்து அதில் சொற்களைத் தமிழின் இலக்கண அமைப்பிற்கேற்ப ஒலி பெயர்த்துக் கொள்ளல்.

எ.கா. Ampere - ஆம்பியர், Volt - ஒல்டு.

காரணம் கருதிய சிறப்புப் பெயர்கள் ஒரு பிரிவாகக் காணப்படுகிறது.

'புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட நாடு' என்பதால் 'New Found Land' என்று காரணம் கருதிய சிறப்புப் பெயருக்கு எடுத்துக்காட்டுத் தருகிறார். இடுகுறிச் சிறப்புப் பெயராகச் சொற்களை ஒலிபெயர்க்கச் செய்வதற்கு Cotton - காட்டன் என உதாரணங்கள் தருகின்றார்.

### 2. இடுகுறிப் பெயர்கள்

கணிதக் குறியீடுகள், வேதியியல் குறியீடுகள் போன்றவற்றை அவ்வாறே பயன்படுத்த வேண்டுமென்கிறார்.

### 3. காரணப் பெயர்கள்

காரணம் கருதிப் பிறக்கும் சொற்களை ஆறு வகைகளாகப் பகுக்கிறார்.

1. நாட்டுப்புற வழக்குச் சொற்கள்
2. இலக்கிய வழக்குச் சொற்கள்
3. புது வழக்குச் சொற்கள்
4. கூட்டுச் சொற்கள்
5. ஒப்புடைச் சொற்கள்
6. ஏலாச் சொற்கள்

என்று அறிவியல் முறையில் சொல்லாக்க முறைகளைப் பாகுபாடு செய்து விளக்கியுள்ளார்.[39]

### ச. அகத்தியலிங்கம்

மொழியியல் அறிஞரான இவர் சொல்லாக்கத்தை இரு வகையாகப் பகுத்துக் கூறுகிறார்.

1. ஆக்கப்பாடு(Derivation )
2. இணைப்பாக்கம்(Composition) என்பனவாகும்.

1. சில சொற்களை இணைப்பதால் உண்டாகும் புதிய சொற்கள் ஆக்கப்பாடு ஆகும்.

எ.கா. நட, விளை என்ற சொற்கள் ஒட்டுகளைப் பெற்று நடத்தை, நடப்பு, விளைச்சல் என்றாகின்றன.

2. இணைப்பாக்கம்

இரு சொற்கள் இணைவதால் உருவாக்கப்படுவதாகும்.

எ.கா. புகைவண்டி, வானொலி.

## ஆ. வேலுப்பிள்ளை

சொல்லாக்கம் குறித்துத் தமிழ் வரலாற்று இலக்கணம் என்ற நூலில் ஐந்து வகைகளில் விளக்க முற்பட்டுள்ளார். அதில் பெயர்ச்சொல்லாக்கம் பற்றியே குறிப்பிட்டுள்ளார். வினையாக்கம் பற்றிக் குறிப்பிடும்படி பேசவில்லை. பெயர்ச்சொல்லாக்க வகைகள் பின்வருமாறு:

பெயரடிகளாக அமைந்துள்ள சில பெயர்ச்சொற்களைத் தவிர, ஏனைய பெயர்ச்சொற்கள் வினை வடிவங்களிலிருந்தும் பெயர்ச் சொற்களிலிருந்தும் ஏனைய உரிச்சொற்களிலிருந்தும் அமைகின்றன என்பார்.

*1.* பெயர்ப் பகுதியாயே, அமைந்த பெயர்ச்சொற்கள்

எ.கா. ஒளி, கரை, வரை, அடி(பாதம்).

*2.* பகுதி விகுதியாகப் பிரிப்பதற்கு அரிய பெயர்கள்

எ.கா. பொருள், குடை.

*3.* வினை வடிவங்களில் இருந்து உண்டாகும் பெயர்கள்

*(1)* சில வினையடிகள் பெயர்ச்சொற்களாகவும் வழங்குகின்றன. இவற்றை முதனிலைத் தொழிற்பெயர் என்பர் தமிழிலக்கணக்காரர்.

எ.கா. பூ, கட்டு, தளிர், பணி.

*(2)* முதனிலைத் திரிந்த தொழிற்பெயர்

வினையடியின் முதல் உயிர் நீளல், வினைப்பகுதியின் ஈற்றுயிர் மெய்யிரட்டல் ஆகிய இரு நிலையில் ஆக்கம் நடைபெறுகிறது.

எ.கா. பொரு - போர், எழுது - எழுத்து.

மேலும் பகு என்பது பங்கு என மாறும் பொழுது வினைப்பகுதியின் ஈற்று வல்லினமெய் இனமான மூக்கொலி பெறுகிறது. வினைப்பகுதியின் நீண்ட உயிர் குறுகிறது (காண் - கண்).

*(3)* வினைப்பகுதிகளுக்குத் தொழிற்பெயர் விகுதிகள் சேர்த்து பெயர்கள் ஆக்கப்படுகின்றன.

எ.கா. எண்(ணு) + தல் - எண்ணுதல், நில் + அம் - நிலம், காண் - காட்சி.

*4.* பெயர் முதலியவற்றிலிருந்து அமைந்த பெயர்கள். விகுதிகளைச் சேர்ப்பதாலும் பாலறி கிளவிகளைச் சேர்ப்பதாலும் இத்தகைய பெயர்கள் அமைகின்றன. எ.கா. பொன் + இ - பொன்னி, களி + று - களிறு.

5. கூடியமையும் பெயர்கள்

இரு பெயர்கள் இணைந்தும், பெயரும் வினையடியும் விகுதியும் இணைந்தும், பெயரும் இடப்பொருளுருபும் பாலறி கிளவியும் இணைந்தும், தொழிற்பெயரும் எதிர்மறையிடைச்சொல்லும் விகுதியும் பாலறிகிளவியும் இணைந்தும் பெயரடையும் பெயரும் இணைந்தும் கூட்டுச் சொற்கள் ஆக்கப்படுகின்றன.

எ.கா. வாய்க்கால், காராண்மை, வழியிலார், இறையிலி, வெண்பா.

**எச். சித்திரபுத்திரன்**

மொழிகளில் சொற்கள் பல்வேறு முறைகளில் படைக்கப்படுகின்றன. இவ்வாறு சொற்கள் படைக்கப்படும் தன்மை சொல்லாக்கம் ஆகும். படைக்கப்படும் முறைகள் சொல்லாக்க உத்திகள் என்றும் அழைக்கப்படுகின்றன. சொல்லாக்க உத்திகள் மொழிக்கு மொழி காலத்திற்குக் காலம் மாறிவரும் தன்மை கொண்டனவாக உள்ளன. தமிழில் பின்வரும் சொல்லாக்க உத்திகள் பயன்பாட்டில் உள்ளன.

| | |
|---|---|
| 1. திரிபாக்கம் | (Inflection) |
| 2. ஆக்கம் | (Derivation) |
| 3. கூட்டாக்கம் | (Compounding) |
| 4. எழுத்துப் பெயர்ப்பு | (Transliteration) |
| 4.1. நேர்நிலை எழுத்துப் பெயர்ப்பு | (Direct transliteration) |
| 4.2. மாற்றுநிலை எழுத்துப் பெயர்ப்பு | (AlternateTransliteration) |
| 5. மொழிபெயர்ப்பு | (Translation) |
| 5.1. நேர்நிலை மொழிபெயர்ப்பு | (Direct translation) |
| 5.2. கருத்துநிலை மொழிபெயர்ப்பு | (Concept translation) |
| 6. தமிழ்ப்படுத்தம் | (Tamilization) |
| 6.1. இனமாற்றம் | (Cognate sound change) |
| 6.2. வடிவமாற்றம் | (Form change) |
| 7. கலப்பாக்கம் | (Hybridization) |
| 7.1. இருசொல் கலப்பாக்கம் | (Di-hybrid) |
| 7.2. பலசொல் கலப்பாக்கம் | (Multi-hybrid) |
| 7.3. சொல்விகுதி இணைப்பாக்கம் | (Hybrid of suffixation) |
| 8. எளிமையாக்கம் | (Simplification) |
| 8.1. எழுத்தெளிமை | (Graphic Simplification) |
| 8.2. வடிவ எளிமை | (Form Simplification) |
| 8.3. திரிபு எளிமை | (Paradigm Simplification) |
| 9. புத்தாக்கம் | (Neologism) |

9.1. ஒட்டு நிலையாக்கம் (Suffixation - Prefixation)
9.2. தனிச்சொல் நிலையாக்கம் (Singleton)
10. சொற்குறுக்கம் (Abbreviation)
11. குறுக்கச்சொல் (Acronym)
12. பதிலீட்டாக்கம் (Substitution)
13. இரட்டிப்பாக்கம் (Reduplication)
14. எதிரொலியாக்கம் (Echo word)
15. ஒப்புமையாக்கம் (Anology)
16. பகுதியாக்கம் (Clipping)
17. பகுதி இணைப்பாக்கம் (Blending)
18. பின்னாக்கம் (Back formation)

### 1. திரிபாக்கம்

திரிபாக்கம் உருபனியல் சார்ந்த சொல்லாக்கமாகும். இவ்வகைச் சொல்லாக்கத்தில் பெயர்/வினைச் சொற்களுடன் பல்வேறு உருபுகளும், இடைச்சொற்களும் விகுதிகளும் இணைக்கப்படுகின்றன. திரிபாக்கச் சொற்கள் அடிச்சொல்லின் அடிப்படை இலக்கணத்திலிருந்தும் பொருளிலிருந்தும் எவ்வித மாற்றமும் அடைவதில்லை. காலம், இடம், எண், பால் ஏற்ற வினைமுற்றுச்சொற்கள், எச்சச்சொற்கள் என்பன போன்ற இலக்கண வேறுபாட்டுச் சொற்களும் வேற்றுமை ஏற்பு வடிவங்களும் பன்மை வடிவங்களும் திரிபாக்கச் சொற்களாகும்.

எ.கா. செய்வேன், செய்வார்.

### 2. ஆக்கம்

உருபன் நிலையிலான சொல்லாக்கத்திற்கு மற்றொரு சான்று ஆக்கமாகும். வினை மற்றும் பெயர் அடிகளுடன் ஒட்டுகளை இணைப்பதன் மூலம் ஆக்கச்சொற்கள் தோற்றம் பெறுகின்றன. மேலும் சொல்லடிகளில் சில மாற்றங்களைச் செய்வதன் மூலமும் ஆக்கம் நிகழ்வதுண்டு. ஆக்கச்சொற்கள் திரிபுச்சொற்கள் போலின்றி அடிப்படை இலக்கணத்திலும் பொருளிலும் மாற்றம் பெற்றுக் காணப்படும். ஆக்கச்சொற்கள் தனிச்சொற்களாகக் கொள்ளப்படுவதோடன்றித் தலைச்சொற்களாகவும் தரப்படுகின்றன. ஆக்கச் சொல்லாக்கத்தில் பெரும்பாலும் இலக்கணம் மாற்றம் நடைபெறுகிறது. ஆக்கச் சொல்லாக்கத்திற்கு உதவும் விகுதிகள், ஆக்க விகுதிகள் என்றழைக்கப் படுகின்றன.

தமிழில் பெயர்ச்சொற்களை வினைச்சொற்களாகவும் வினைச்சொற் களைப் பெயர்ச்சொற்களாகவும் ஆக்கவிகுதிகள் பயன்படுத்தப்படுகின்றன.

எ.கா. நடி(வி) - நடி-ப்பு > நடிப்பு, வாழ்(வி) - வாழ்-க்கை > வாழ்க்கை.

தமிழில் பெயர் அடிகளுடனும் ஆக்கச்சொற்களுடனும் ஆன, ஆக எனும் சொல்லாக்கச் சொற்களை இணைப்பதன் மூலம் பெயரடை, வினையடைகள் தோற்றம் பெறுகின்றன.

எ.கா. வேகம் > வேகமாக, வேகமான.

தமிழில் ஆக்க விகுதிகளின் பயன்பாடு இல்லாமலும் சில வினைச்சொற்கள் பெயர்ச்சொற்களாக ஆக்கம் பெறுவதுண்டு.

எ.கா. பெறு > பேறு, கெடு >கேடு.

### *3. கூட்டாக்கம்*

இரண்டும் பலவுமாய்ச் சொற்கள் இணைந்து அமைப்பிலும் பொருளிலும் மாறுபட்டுத் தனித்தன்மை பெற்றுக் காணப்படின் அது கூட்டுச்சொல் ஆகும். இது இயல்புச் சேர்க்கை, கூட்டுச் சேர்க்கை என இருவகையாகும்.

கூட்டுச்சொற்கள் அவற்றுள் இடம்பெறும் தனிச்சொற்களின் செயல் பாட்டிற்கும் பொருண்மைக்கும் ஏற்ப நான்கு வகைகளாகப் பிரித்தறியப் பெறும். அவை,

முதல் வகைக் கூட்டாக்கத்தில் இடம்பெறும் தனிச்சொற்களின் பொருள் முழுநிலையில் கூட்டுச்சொற்களில் இடம்பெற்றிருக்கும். இவ்வகையில் இடம்பெறும் தனிச்சொற்களில் கருத்துப்பொருள் கூட்டுச்சொற்களின் கருத்துப் பொருளிலிருந்து மாறுபடுவதில்லை. தமிழில் பிற கூட்டுச்சொற்களைவிட இவ்வகைச் சொற்கள் மிகுதியாக வழங்கப்படுகின்றன.

எ.கா. அரவுரி, ஆழிமுதல்வன், மாட்டுவண்டி.

இரண்டாம் வகை கூட்டாக்கத்தில் இடம்பெறும் தனிச்சொற்களின் பொருள் முழுநிலையில் வெளிப்படுவதில்லை. இவ்வகைக் கூட்டாக்கத்தில் முதல் சொல்லின் பொருள் முழுநிலையில் வெளிப்பட்டு நிற்கும். இரண்டாவது சொல்லின் பொருள் பகுதி வெளிப்பட்டோ வெளிப்படாமலோ காணப்பெறும்.

எ.கா. ஒளிமண்டலம்(ஞாயிறு), குளறுபடி(முறைகேடு).

மூன்றாம் வகைக் கூட்டுச் சொற்களில் சொல் ஒன்றின் பொருள் வெளிப்படாது நிற்க இரண்டாம் சொல்லின் பொருள் மட்டும் வெளிப்பட்டு நிற்கும். முன் சொல்லின் பொருள் பகுதி நிலையிலோ முழு நிலையிலோ வெளிப்படாது நிற்கும். இவ்வகைச் சொற்களும் அகராதியில் தலைச் சொற்களாகத் தரப்படும்.

எ.கா. இருநீர் - 'கடல்' , செங்காய் - 'முற்றியகாய்'.

நான்காம் வகைக் கூட்டுச் சொல் தனித்தன்மையுடைய கூட்டுச் சொல்லாகும். பிற கூட்டுச்சொற்களைப் போலின்றி இரண்டு தனிச்சொற்களின் பொருளும் கூட்டாக்கத்தில் இடம்பெறாது. மாறாகப் புதுப்பொருள் ஒன்று தோன்றி நிற்கும். பெயர்+பெயர் கூட்டுக்களாகவும் பெயர்+வினைச்சொற்கள் அடங்கிய தொடர்களாகவும் இவை காணப்படுவதுண்டு.

எ.கா. எட்டிக்காய், ஏட்டுச்சுரைக்காய்.

### 4. எழுத்துப்பெயர்ப்பு

பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்கும் பொழுதும் அவற்றிற்கு இணையான சொற்கள் ஏற்பு மொழிகளில் இல்லாத பொழுதும் மொழிபெயர்ப்பு செய்யும் நிலையில் சரியான சொற்கள் கிடைக்காதவிடத்தும் மொழிபெயர்க்க இயலாதவிடத்தும் கடன் வாங்கப்பட்ட தருமொழிச் சொற்கள் ஏற்பு மொழி எழுத்துகளில் அவ்வாறே எழுதப்படுதல் உண்டு. இது நேரடி எழுத்துப்பெயர்ப்பு, மாற்றுநிலை எழுத்துப் பெயர்ப்பு என்ற இருநிலைகளில் நடைபெறுகின்றது.

நேரடி எழுத்துப்பெயர்ப்பில் கடன்பெறும் சொற்கள் ஒலிநிலையில் எவ்வித மாற்றமும் இன்றி ஏற்புமொழி எழுத்துகளில் எழுதப்பெறும். சான்றாக 'கவர், சினிமா' போன்ற சொற்களைக் கூறுவார். பிறமொழிச் சொற்களை எழுத்துப்பெயர்ப்பு செய்யும் பொழுது தமிழ் ஒலி அமைப்பிற்கு ஏற்றவாறு தகுமொழி ஒலிகளை/எழுத்துகளை மாற்றியமைப்பது மாற்றுநிலை எழுத்துப்பெயர்ப்பாகும். காட்டாக ஆக்ஸிஜன் > ஆக்சிசன் இதைக் கூறியுள்ளார்.

### 5. மொழிபெயர்ப்பு

பிறமொழிச் சொற்களை எழுத்துப்பெயர்ப்புச் செய்து வழங்க விரும்பாத இடத்தும் தூயமொழி உணர்வினாலும் பிறமொழிச்சொற்கள் மொழிபெயர்த்து வழங்கப்படுகின்றன. எழுத்துப்பெயர்ப்பில் ஒரு மொழிச் சொல் மற்றொரு

மொழி எழுத்தில் எழுதப்படுகிறது. ஆனால் மொழிபெயர்ப்பில் ஒரு மொழிச்சொல் அல்லது கருத்து மற்றொரு மொழியில் மாற்றம் செய்யப்பெறுகின்றது. இது நேர்நிலை மொழிபெயர்ப்பு, கருத்துநிலை மொழிபெயர்ப்பு என இருவகைத்தாகும்.

சான்றாக Television என்னும் சொல் நேர்நிலை மொழிபெயர்ப்பில் 'தொலைக்காட்சி' என்றும் கருத்து மொழிப்பெயர்ப்பில் 'சின்னத்திரை' என்றும் மொழிபெயர்ப்பு செய்யப்படுவதைச் சுட்டுகிறார்.

### 6. தமிழ்ப்படுத்தம்

சொல்லாக்க உத்திகளில் தமிழில் பரவலாகக் காணப்படும் ஓர் உத்தி தமிழ்ப்படுத்தம். இது இனமாற்றம், வடிவமாற்றம் என இருவகைப்படும். இனமாற்றம் என்பது நேரடி எழுத்துப்பெயர்ப்பில் கிரந்த எழுத்துகளுக்கு ஒப்புடைய தமிழ் எழுத்துகளை அமைத்தலாகும். சான்றாக ஹ, ஜ, ஷ, ஸ, ஸ்ரீ என்பவை ஒலி ஒப்புடைய தமிழ் எழுத்துகளில் பதிலீடு செய்யப்படுவதைக் காணலாம்.

எ.கா. ஹரியானா > அரியானா, ஹிந்தி > இந்தி.

பிறமொழிச் சொற்களைக் கடனாகப் பெற்று, அவற்றை மாற்று எழுத்துப்பெயர்ப்பு செய்யும் சூழலில் வடிவமாற்றம் ஏற்படுகிறது. மொழி முதல், இடை, கடை ஆகிய இடங்களில் ஒற்றுகளுக்குப் பதிலீடாக அவற்றிற்கு இனமான எழுத்துகளை மாற்றி அமைத்தல். சில இடங்களில் மொழி முதல், இடையில் ஆய்தம் வரும்பொழுது அதை நீக்கிப் பெயர்த்தல் என வடிவ மாற்றம் நிகழ்கின்றது.

எ.கா. க்ரைம் > கிரைம், பேங்க் > பேங்கு, செக் > செக்கு, பிரச்னை > பிரச்சினை, ஃபைல் > பைல்.

### 7. கலப்பாக்கம்

இரண்டோ இரண்டிற்கு மேற்பட்ட மொழிச் சொற்களோ கூட்டுச் சொற்களாக வழங்கப்படுவது கலப்பாக்கமாகும். கலப்பாக்கத்தில் இடம்பெறும் சொற்களின் தன்மைக்கு ஏற்ப அது இரண்டு வகைப்படும். அவை இருசொல் கலப்பாக்கம், பலசொல் கலப்பாக்கம் என்பனவாகும்.

எ.கா. இருசொல் கலப்பாக்கம் - துணை ஜனாதிபதி, தேர்தல் கமிஷன்
பலசொல் கலப்பாக்கம் - மாவட்ட போலீஸ் அதிகாரி.

பிறமொழிச் சொற்களுடன் தமிழ் உருபுகள், விகுதிகள் சேர்ந்து சொற்கள் ஆக்கம் பெறுகின்றன. அவையும் ஒருவகை கலப்பாக்கம் எனலாம்.

எ.கா. ஆபீஸரை - (ஐ) உருபு, போலீஸ்காரர் - (காரர்) விகுதி.

### 8. எளிமையாக்கம்

கடினமான மொழிக்கூறுகள் எளிமையாக மாற்றம் செய்யப்பெறுவது எளிமையாக்கம் ஆகும். மொழிகளில் பயன்படுத்தப்படும் கடின எழுத்துகளை எளிய எழுத்துகளாகவும் நீண்ட சொற்களைக் குறுகிய வடிவங்களாகவும் மாற்றி அமைப்பது எளிமையாக்கத்திற்குரிய சான்றுகளாகும். தமிழில் நடைபெறும் எளிமையாக்கத்தை எளிமையாக்கக் கூறுகளின் அடிப்படையில் மூன்று வகைகளாகப் பகுக்கலாம். அவை எழுத்தெளிமை, வடிவ(சொல்) எளிமை, திரிபு எளிமை என்பனவாகும்.

தமிழில் இரட்டை உயிர்களான ஐ, ஔ, என்பவை சொல்லின் முதலில் தனியாகப் பயன்படுத்தப்படும் பொழுது உயிர்மெய்களாகப் பயன்படுத்தப்படும் பொழுதும் எழுத்தெளிமை கருதி அவை இரு எழுத்துகளாக மாற்றம் செய்யப்பெறுகின்றன.

எ.கா. ஐயர் > அய்யர், ஔவையார் > அவ்வையார்.

நீண்ட சொல் வடிவங்களில் சில சொற்கள் அல்லது பகுதிகளை விட்டுவிட்டுச் சொல்லைச் சுருக்கி வழங்குவது வடிவ எளிமையாகும். வடிவ எளிமையைக் கூட்டுச்சொற்களில் அதிகம் காணலாம்.

எ.கா. மாவட்ட ஆட்சியர் > ஆட்சியர், உயிரினங்கள் > உயிரிகள்.

திரிபுச் சொற்களும் நீண்ட வடிவு காரணமாகச் சுருக்கப்படுவதுண்டு. பழந்தமிழில் வழக்கிலிருந்த கூட்டுத் திரிபு வடிவங்கள் இன்று சுருக்கமாகக் கையாளப்படுகின்றன.

எ.கா. செய்வதற்காக > செய்ய, வருதல் இல்லை > வரவில்லை.

### 9. புத்தாக்கம்

மொழிகளில் பரவலாகக் காணப்பெறும் ஒரு சொல்லாக்க உத்தி புத்தாக்கம் ஆகும். மொழியில் ஏற்கெனவே வழங்கப்பெறும் சொல்லிலிருந்து புதுச்சொற்களைப் படைத்தளிக்கும் முறை புத்தாக்கமாகும். புத்தாக்கம் தமிழில் இருநிலைகளில் காணப்படுகின்றது. அவை ஒட்டுநிலையாக்கம், சொல் நிலையாக்கம் என்பனவாகும். ஒட்டுநிலையாக்கம் முன்னொட்டாக்கம், பின்னொட்டாக்கம் எனும் இரு பிரிவுகளைக் கொண்டது. சொல்

நிலையாக்கம் தனிச்சொல்லாக்கம், இருசொல் கூட்டாக்கம், பலசொல் கூட்டாக்கம் எனும் மூன்று வகைகளை உள்ளடக்கியது.

**முன்னொட்டாக்கம்**

சொற்களில் குறிப்பாகப் பெயர்ச்சொற்களின் முன்னால் ஒட்டுக்களை இணைத்துப் புதிய சொற்களை ஆக்கும் முறை முன்னொட்டாக்கம் எனப்படும். ஆங்கிலம், வடமொழி போன்ற மொழிகளில் முன்னொட்டுகளின் பயன்பாடு அதிகமாக உள்ளது. ஆனால் தமிழில் வடமொழிக் கலப்பால் சில முன்னொட்டுகள் இடம்பெற்றுள்ளன. அவை எதிர்மறைப்பொருளில் அமைந்துள்ளன (சுத்தம் - அசுத்தம், சப்தம் - நிசப்தம்). தற்காலத்தில் அறிவியல் வளர்ச்சியால் பல சொற்கள் முன்னொட்டுகள் போன்று பயன்படுத் தப்படுகின்றன. நுண், தன், புற, மின், எதிர், முனை போன்ற சொற்கள் முன்னொட்டுகளாக அமைவதைப் பின்வரும் சான்றுகளால் அறியலாம்.

எ.கா. நுண்ணுயிர், தன்னியக்கம், புறச்சுவர், மின்னிலை, எதிர்மின்வாய், முனைவுத்தளம்.

**பின்னொட்டாக்கம்**

பெயர், வினையடிகளுடன் விகுதிகள் சேர்க்கப்பட்டுச் சொற்கள் ஆக்கப்படும் முறையாகும். தமிழ்மொழியில் பெரும்பாலான சொற்கள் பின்னொட்டாக்கம் மூலமே உருவாக்கம் பெறுகின்றன.

எ.கா. செயலி(இ), இணையம்(அம்), அதிர்வு(வு), ஓட்டுநர்(நர்), மின்மை(மை), தீர்ப்பாயம்(ஆயம்), ஒன்றியம்(இயம்).

**தனிச்சொல் நிலையாக்கம்**

சொல்நிலையாக்கம் மூன்று நிலைகளில் நடைபெறுகின்றது. அதில் கூட்டாக்கம், பலசொல் கூட்டாக்கம் ஆகிய இரண்டும் கூட்டாக்கம் என்ற வகையில் அடங்கிவிடுகிறது. மூன்றாவது வகையான தனிச்சொல்லாக்கம் என்பது எந்தவித சொற்களிலிருந்தும் தோற்றம் பெறாமல் தனிச்சொல்லாகப் படைக்கப்படுவது தனிச்சொல்லாக்கமாகும்.

எ.கா. நேயம், முகாம், கமுக்கம்.

**10. சொற்குறுக்கம்**

சொற்குறுக்கம் என்பது நீண்ட சொல்/ கூட்டுச்சொல்/ தொடர் என்பவை ஒரு பொருளைக் குறித்துப் பயன்படுத்தப்படும் பொழுது அவற்றைப் பல்வேறு

காரணங்களுக்காகச் சுருக்கிக் கூறுவதாகும். சொற்குறுக்கத்தில் சொற்களின் முதல் எழுத்துகள்/அசைகள் தெரிவு செய்யப்பெற்று இடையில் புள்ளியுடன், குறிப்பிட்ட அச்சொல்லுக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படும்.

எ.கா. ஐ.நா.(ஐக்கிய நாட்டு சபை), த.ப.க.(தமிழ்ப்பல்கலைக்கழகம்), ஜன.(ஜனவரி).

### 11. குறுக்கச்சொல்

சொற்குறுக்கத்தைப் போன்று முதல் எழுத்துகளைத் தெரிவு செய்து குறுக்கச்சொல் ஆக்கப்பெற்றிருப்பினும் அவை குறியீடுகள் போன்றல்லாமல் தனிச்சொற்களாக வழங்கப்பெறும். இடையில் புள்ளிகள் இடம்பெறுவதில்லை. தமிழில் குறுக்கச்சொற்களுக்கான பதிவுகளைக் காண இயலவில்லை.

எ.கா. எயிட்ஸ் (AIDS) Acquired Immuno Deficiency Syndrome.

### 12. பதிலீட்டாக்கம்

ஊர் மற்றும் மனிதர்களைக் குறிக்கும் பல சிறப்புப் பெயர்கள் சுருக்கமாகப் பயன்படுத்தப்படும். இவ்வகையில் சுருக்கம் பெற்ற சொற்கள் மூலச் சொற்களுடன் தொடர்பு பெற்றும், தொடர்பு இல்லாமலும் காணப்பெறும்.

எ.கா. கும்பகோணம் >கும்பை, குடந்தை
தஞ்சாவூர் > தஞ்சை
அண்ணாதுரை > அண்ணா.

### 13. இரட்டிப்பாக்கம்

தமிழ் மரபிலக்கணங்களில் இரட்டிப்பாக்கம் பற்றி இடம்பெற்றுள்ள செய்திகளைத் தொகுத்து வழங்கியுள்ளார். அதில் அடுக்குத் தொடர், இரட்டைக்கிளவி ஆகியன இடம்பெறுகின்றன. அடுக்குத் தொடர் வடிவத்தில் எவ்வித மாற்றமும் இன்றி ஒரு சொல் அடுத்தடுத்து இரண்டோ இரண்டிற்கும் மேற்பட்ட முறைகளோ பயின்றுவரும் பொழுது அடுக்குத் தொடர் உருவாக்கம் பெறுகிறது.

இரட்டைக்கிளவி இரட்டித்து வரும் நிலையில் மட்டும் பொருள் உணர்த்தவல்ல சொற்கள் இரட்டைக்கிளவிகளாகும். இரட்டைக்கிளவிகளைத் தனியாகப் பிரித்துப் பார்த்தால் பொருள் வெளிப்படுவதில்லை.

இரட்டிப்புச் சொற்களைப் பொதுவாக உருபன் இரட்டிப்பு, சொல் இரட்டிப்பு என இருநிலைகளில் வகைப்படுத்தி விளக்கியுள்ளார்.

எ.கா. உருபன் இரட்டிப்பு - கச கச, வழ வழ.

சொல் இரட்டிப்பு - ஊர் ஊராக, காலம் காலமாக.

### 14. எதிரொலியாக்கம்

இரட்டிப்பாக்கதில் ஒருவகையாக எதிரொலியாக்கம் இடம்பெறும். இது முதல் சொல்லின் உயிர் அல்லது உயிர்மெய் மற்றொரு உயிராகவோ உயிர்மெய்யாகவோ மாற்றம் பெறும்.

எ.கா. அழுதுகிழுது, அகடவிகடம்.

### 15. ஒப்புமையாக்கம்

மொழிகளில் சொற்கள் பல்வேறு இலக்கண விதிகளுக்கு உட்பட்டு ஆக்கம் பெறுகின்றன. ஆண் பெண், ஒருமை பன்மை வேறுபாடுகள் தமிழில் விகுதிகளை இணைப்பதன் மூலம் தோற்றம் பெறுகின்றன. இலக்கண விதிகளுக்கு உட்பட்டுப் படைக்கப்படும் சொற்கள் வழக்கில் வழங்கப்பெறினும் சில சொற்களில் ஏதேனும் ஒரு வடிவம் மட்டும் காணப்பெறும். மற்றொரு வடிவம் வழங்கப்பெறுவதில்லை.

எ.கா. பாலகன் > பாலகி, நண்பன் > நண்பி, மலர் > மலர்கள்.

### 16. பகுதியாக்கம்

ஒரு சொல் அதன் வடிவத்தில் குறைக்கப்பட்டுப் பின்பகுதி மட்டும் சொல்லாக வழங்கப்பெறுவது பகுதியாக்கம் ஆகும். பகுதி இணைப்பாக்கச் சொற்கள் ஆங்கிலத்தில் மிகுதியாக வழங்கப்பெறுகின்றன. ஆனால், தமிழில் இவ்வகைக்குரிய சான்றுகளை முழுநிலையில் காண இயலவில்லை.

### 17. பகுதி இணைப்பாக்கம்

கூட்டுச் சொற்களாக வழங்கப் பெறும் இரண்டு சொற்களின் இரண்டு பகுதிகளைத் தெரிவு செய்து புதிதாகச் சொற்களை ஆக்கிக் கொள்ளும் முறைக்குப் பகுதி இணைப்பாக்கம் என்று பெயர். ஆங்கிலத்தில் பகுதி இணைப்பாக்கம் அதிகமாக இடம்பெற்றுள்ளன. தமிழில் இவ்வகை ஆக்கம் காணப்படவில்லை.

### 18. பின்னாக்கம்

மொழிகளில் பெயர், வினைச்சொற்கள் காணப்படுகின்றன. பெயரிலிருந்து வினைச்சொற்களும் வினைகளிலிருந்து பெயர்ச்சொற்களும் ஆக்கப்படுவதுண்டு.

எனினும் இவ்வகை ஆக்கங்கள் இல்லாத நிலையில் புதிதாகப் படைக்கப்படுவது பின்னாக்கமாகும்.

எ.கா. புன்னகை > புன்னகைத்தான், பயணம் > பயணித்தான்.

இவ்வாறு சொல்லாக்க முறைகளைப் பதினெட்டு வகைகளாகப் பிரித்து விளக்கியுள்ளார். சொல்லாக்க முறைகளை அதிகமாகப் பகுத்துக் கூறியவர் என்பது குறிப்பிடத்தக்கது.

## இராதா செல்லப்பன்

கலைச்சொல்லாக்கம் குறித்து ஆய்வு நிகழ்த்தித் தம் ஆய்வின் மூலம் பெற்ற முடிவுகளைத் தொகுத்துச் சில சொல்லாக்க அடிப்படைகளைப் பின்வரும் தன்மையில் வகைப்படுத்திக் கூறியுள்ளார்.

1. பழைய சொற்களில் உள்ள விகுதிகளைப் பயன்படுத்துவதன் மூலம் புதுச்சொற்களை உருவாக்கலாம்.

எ.கா. கடப்பாடு - பாடு - பண்பு + பாடு > பண்பாடு

2. ஆதி நீடல், குறுகல்

எ.கா. மக்கள் > மாக்கள், ஆணி > அணி என்பது போன்றவை.

3. ஒலிநயம் பற்றிய மாறுதல்களால் சொற்களில் புதிய மாற்றங்கள் உண்டாகின்றன. இரு சொற்கள் புணரும் போது வருமொழியில் உயிர்முதலாயின் நெடில் வடிவமும் மெய்முதலாயின் குறுகல் வடிவமும் அமைகின்றன.

எ.கா. கரு + இருள் > காரிருள், கரு + நிறம் > கருநிறம்.

4. குற்றுயிரை அடுத்து வகர உகரம் வீழ்ந்து, குறில் நீண்டு மாத்திரை குறையாது அமையும்.

எ.கா. கனவு > கனா.

5. வினையடிகள் நீண்டு சொல்லாக்கம் நிகழ்தல்.

எ.கா. பெறு > பேறு, கெடு > கேடு.

6. இகர விகுதி சேர்ந்து பெயர் உருவாதல்.

எ.கா. வரைவி, தொலைபேசி.

7. அடிச்சொற்களோடு ஆக்க விகுதிகளைச் சேர்ப்பதன் மூலம் புதிய சொற்களை உருவாக்கலாம். கு, சு, டு, து, று, அம், அல், அர், ஆழ் இழ், அள், இள், ஆகிய விகுதிகளைச் சேர்க்கலாம்.

எ.கா. படி + அம் >படிவம்.

8. அடிச்சொற்களோடும் ஏனைய பகுதிகளோடும் இலக்கணச் சிறப்பு விகுதிகள் சேர்ந்து சொற்கள் அமைகின்றன. அல், தல், கை, மை விகுதிகள் போன்றவை.

எ.கா. செய் + தல் > செய்தல், செம் + மை > செம்மை.

9. நகரம் அல்லது ஞகரத்தை இடைநிலையாக அமைத்துப் பல சொற்கள் ஏற்கனவே உருவாக்கப்பட்டுள்ளன.

எ.கா. ஓட்டுநர், அறிஞர், கலைஞர்.

10. வினையடிகளில் வல்லொலிகள் இரட்டிப்பதால் ஆக்கப்பெயர்கள் அமைகின்றன.

எ.கா. எழுது > எழுத்து.

11. கலைச்சொல்லாக்கத்தில் 'செய்யா' என்னும் எதிர்மறைப் பெயரெச்சத்தைப் பயன்படுத்தலாம்.

எ.கா. பற்றாக்குறை.

12. வினைத்தொகைகளும் சொல்லாக்கத்தில் துணை செய்யும்.

எ.கா. தாழ்மதிப்பீடு.

எனச் சொல்லாக்கங்களைப் பகுத்துக் கூறியுள்ளார். இவருடைய வகைப்பாடுகளில் சில இலக்கண விதிகளும் சொல்லாக்க நெறிமுறைகளுக்கு துணைநிற்பதைக் காணமுடிகின்றது.

சொல்லாக்கங்களில் ஈடுபடுவோர், புதுச்சொற்களைப் படைக்க முன்வருவோர் சில விதிமுறைகளைக் கவனத்தில் கொள்ள வேண்டும் என்று தா.ஏ. ஞானமூர்த்தி கூறுகின்றார். அவை,

1. ஆக்கப்பெறும் சொல் தமிழ்ச் சொல்லாக இருத்தல் வேண்டும்.
2. பொருள் பொருத்தமுடையதாக அமைதல் வேண்டும்.
3. வடிவில் சிறியதாக இருத்தல் வேண்டும்.
4. சொல்லோசை நயமாக இருத்தல் வேண்டும்.
5. தமிழ் இலக்கண மரபுக்கு உட்பட்டதாய் இருத்தல் வேண்டும்.

என்பனவாகும்.[40]

சொல்லாக்கத்தின் முதன்மைப் பங்காகச் சில கருத்துகளை இரா. வசுமதி அவர்கள் குறிப்பிடுகின்றார்.

1. சொற்கோவையை விரிவடையச் செய்தல்.
2. மொழி வாழ்வதற்கு உறுதுணை புரிதல்.

3. புதிய பொருள்களுக்கும் எண்ணங்களுக்கும் வடிவம் தரல்.

4. பிறமொழியிலுள்ளவற்றை மக்கள் அறிந்து கொள்ளுமாறு செய்தல்.

5. மொழித் தூய்மையைப் பாதுகாத்தல்.

என்று குறிப்பிடும் அவரே,

> *மொழியினுடைய உயிரோட்டமான பண்புகளில் தலைசிறந்து அமைவது சொல்லாக்கமே. இந்தச் சொல்லாக்கம் குறிப்பிட்ட காலத்தில் மக்கள் வழக்காற்றில் பயன்பட்டு வரலாற்று நிலையில் அச்சொல் மொழியின் சொற்கோவையில் நிலைபெற்று விடுகிறது*[41]

என்றும் குறிப்பிடுகின்றார். இது போன்ற தன்மைகளில் சொல்லாக்கம் குறித்தும் சொல்லாக்க வகைப்பாடுகள் குறித்தும் பல்வேறு கருத்துகள் நிலவி வருகின்றன.

## தொகுப்புரை

- மொழியின் தோற்றம் பற்றிப் பல்வேறு கருத்துகள் நிலவிவரினும் அவை பெரும்பாலும் ஊகங்களே என்பார் மா.சு. திருமலை.
- ஒரு நாட்டின் வரலாற்றை அறிய புத்தகங்களும் செய்யுள்களும் அன்றி, அந்நாட்டில் வழங்கும் சொற்களே போதும் என்று பாவாணர் குறிப்பிடுகின்றார்.
- சொல் என்பதற்கு இலக்கணிகள், உரையாசிரியர்கள், தமிழறிஞர்கள் ஆகியோர் சில வரையறைகளைக் குறிப்பிட்டுள்ளனர்.
- இ. மறைமலை அவர்கள் சொற்களைத் தனிச்சொல், தொகைச்சொல், கூட்டுச்சொல் என நான்கு வகையாகப் பகுத்துக் கூறியுள்ளார்.
- சொல்லாக்கத்தின் முன்னோடியாக ஃபிஷ் கிரீன் என்பார் விளங்குகிறார். இவர் மருத்துவத்துறை சார்ந்த கலைச்சொற்களை ஆக்கித் தந்துள்ளார்.
- தமிழ்ச் சொல்லாக்கத்தின் தொடக்க காலத்தில் வடமொழியின் பங்களிப்பு இருந்துள்ளதைக் காணமுடிகின்றது.
- புதுப்புதுச் சொற்களாக ஒலிக்குறிப்புச் சொற்களை மட்டுமே உருவாக்க முடியும் என்பது எஸ். வையாபுரிப்பிள்ளையின் கருத்தாகும்.
- எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் தமிழில் உள்ள பழைய சொற்களே விகாரம், விகுதி சேர்தல், சொற்கள் இணைதல் போன்ற தன்மைகளில் சொல்லாக்கம் நிகழ்கின்றது என்பார்.
- சொல்லாக்கத்தை ஆக்கப்பாடு என்று ச. அகத்தியலிங்கம் குறிப்பிடுகின்றார்.

- மு. கணபதிபிள்ளை அவர்கள் பிறமொழிக் கருத்துகளை மக்கள் தம்மொழி வாயிலாக அறிந்து கொள்ளுவதற்காகவே சொல்லாக்கம் நிகழ்கின்றது என்பார்.
- தமிழ்ப் பகுதிகளினின்று புதுச்சொற்களைப் படைத்துக் கருத்தை வெளிப் படுத்தலாம் என்பது வி.கோ. சூரியநாராயண சாஸ்திரிகள் கருத்தாகும்.
- சொற்கள் ஆக்கப்படுவதைச் சொல்லாக்கம், கலைச்சொல்லாக்கம் என இருநிலைகளில் காணமுடிகின்றது.
- சொல்லாக்கம் ஒரு துறை சார்ந்து நடைபெற்றால் அவை கலைச்சொல்லாக்கம் என வழங்கப்படுகிறது.
- சொல்லாக்கமும் கலைச்சொல்லாக்கமும் ஒன்று என்பது சீதாலட்சுமியின் கருத்தாகும்.
- சொல்லாக்க உத்திகளின் வகைப்பாடு எண்ணிக்கையில் சொல்லாக்கச் சிந்தனையாளர்களிடம் வேறுபாடு காணப்படுகிறது.
- சொல்லாக்கச் சிந்தனையாளர்களின் ஒருமித்த உத்தியாக ஒட்டுவழிச் சொல்லாக்கம், கூட்டுச்சொல்லாக்கம், மொழிபெயர்ப்பாக்கம் போன்றவை திகழ்கின்றன.
- சொல்லாக்கத்தில் பெயர்ச்சொல்லாக்கம் பற்றியே அதிகம் குறிப்பிடப் டுகின்றது. வினையாக்கம் பற்றிக் குறிப்பிடப்படும்படியாகக் கருத்துகள் இல்லை.
- ச. அகத்தியலிங்கம் அவர்கள் சொல்லாக்கத்தை ஆக்கப்பாடு, இணைப்பாக்கம் என இருநிலைகளில் பகுத்துக் கூறியுள்ளார்.
- சொல்லாக்க உத்திகளைப் பதினெட்டு வகைகளாக எச். சித்திரபுத்திரன் பகுத்துக் கூறியுள்ளார். பலநிலைகளில் சொல்லாக்க உத்திகளைப் பகுத்து நோக்கியவர் இவரே என்பது குறிப்பிடத்தக்கது.
- சொல்லாக்க விதிமுறைகளாகச் சிலவற்றை தா.ஏ. ஞானமூர்த்தி வகுத்துக் கூறியுள்ளார்.
- சொல்லாக்கத்தின் முதன்மைப் பங்காகச் சில கருத்துகளைத் 'திருவள்ளுவரின் சொல்லாக்க முறைகள்' என்னும் தம் ஆய்வில் இரா.வசுமதி குறிப்பிட்டுள்ளார்.
- மொழியினுடைய உயிரோட்டமான பண்புகளில் தலைசிறந்த ஒன்றாகச் சொல்லாக்கம் விளங்குகிறது என்னும் இரா. வசுமதியின் கருத்து முற்றிலும் பொருத்தமுடையதாகும்.

## அடிக்குறிப்புகள்

1. மா.சு. திருமலை, கி. கருணாகரன், மொழியியல், ப.9.
2. த. சரவணமுத்துப்பிள்ள, தமிழ்ப் பாஷை - ஓர் உபந்நியாசம், ப.10.
3. ஞா. தேவநேயப் பாவாணர், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், ப.16.
4. இ. மறைமலை, சொல்லாக்கம், ப.7.
5. மேலது, பக்.8-10.
6. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரகராதி, ப.1654.
7. க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.646.
8. எஸ். வையாபுரிப்பிள்ளை, தமிழின் மறுமலர்ச்சி, தொகுதி 2, ப.215.
9. மேலது, ப.217.
10. ச. அகத்தியலிங்கம், மொழியியல், சொல்லியல், பெயரியல், ப.10.
11. மேலது, ப.10.
12. மேலது, ப.15.
13. மேலது, பக்.15-16.
14. ச. அகத்தியலிங்கம், மொழியியல், சொல்லியல், வினையியல், ப.16.
15. மு. கணபதிபிள்ளை, மொழிவளர்ச்சியும் சொல்லாக்கமும், ப.76.
16. ச. சோமசுந்தர பாரதியார், நற்றமிழ், ப.43.
17. வி.கோ. சூரியநாராயண சாஸ்திரிகள், தமிழ் மொழியின் வரலாறு, ப.102.
18. மேலது, ப.109.
19. பொற்கோ, இலக்கண உலகில் புதிய பார்வை, தொகுதி 2, ப.88.
20. இரா. வசுமதி, திருவள்ளுவரின் சொல்லாக்க முறைகள், பக்.14-15.
21. மேலது, ப.15.
22. சூ. இன்னாசி, சொல்லியல், பக்.134,159,160.
23. இரா. சண்முகம், காலந்தோறும் தமிழ்மொழி, ப.49.
24. சீதாலட்சுமி, சிங்கப்பூர் மக்கள் தொடர்புச் சாதனங்கள் தமிழ்மொழி, இலக்கிய வளர்ச்சிக்கு ஆற்றிய பங்களிப்பு, ப.72.
25. கி. கருணாகரன், மொழிவளர்ச்சி, ப.83.
26. ச. சோமசுந்தர பாரதியார், நற்றமிழ், ப.42.
27. தா.ஏ. ஞானமூர்த்தி, அறிவியல் தமிழாக்கம், ப.12.
28. இரா. வசுமதி, திருவள்ளுவரின் சொல்லாக்க முறைகள், ப.17.

29. இ.மறைமலை, சொல்லாக்கம், ப.39.
30. இரா. வசுமதி, திருவள்ளுவரின் சொல்லாக்க முறைகள், ப.20.
31. மேலது, ப.21.
32. இராதா செல்லப்பன், கலைச்சொல்லாக்கம், பக்.22-23.
33. வே. சீதாலட்சுமி, நன்னூலாரின் கலைச்சொல்லாட்சி, ப.23.
34. சீதாலட்சுமி, சிங்கப்பூர் மக்கள் தொடர்புச் சாதனங்கள் தமிழ்மொழி, இலக்கிய வளர்ச்சிக்கு ஆற்றிய பங்களிப்பு, ப.22.
35. மேலது, ப.74.
36. இ. மறைமலை, சொல்லாக்கம், பக்.86-96.
37. பொற்கோ, இலக்கண உலகில் புதிய பார்வை, தொகுதி 1, ப.88.
38. பொற்கோ, இலக்கண உலகில் புதிய பார்வை, தொகுதி 2, பக்.83-88.
39. இரா. வசுமதி, திருவள்ளுவரின் சொல்லாக்க முறைகள், பக்.34-43.
40. தா.ஏ. ஞானமூர்த்தி, அறிவியல் தமிழாக்கம், ப.12.
41. இரா. வசுமதி, திருவள்ளுவரின் சொல்லாக்க முறைகள், ப.42.

தமிழ் மொழியில் காணப்படுகின்ற சொற்கள் அனைத்தும் ஒவ்வொரு காலகட்டத்திலும் பல நிலைகளில் வளர்ச்சி பெற்று வந்துள்ளதை, காலமுறைப்படி இலக்கியங்களை அணுகும்பொழுது அறிந்துகொள்ள முடியும். சொற்களின் வளர்ச்சிநிலை என்பது ஒலியன், உருபன் ஆகியவற்றின் சேர்க்கையால் நிகழ்வதாகும். இதற்கு அடுத்த நிலையில் சொற்களின் தேவை கருதியும் எளிமை கருதியும் சொற்சுருக்கம் கருதியும் சொற்களை இணைத்தும் விகுதிகளைச் சேர்த்தும் பிறமொழிச் சொற்களைக் கடன் பெற்றும் புதிய சொற்களை ஆக்கிக் கொள்கின்ற நிலை காணப்படுகின்றது. இதில் சொற்களை இணைத்து ஆக்குதல் என்பது பழங்காலந் தொட்டே வழக்கில் உள்ளது நாம் அறிந்த ஒன்றாகும். அதாவது, 'தொகைச்சொற்கள்' என்னும் தன்மையில் ஆக்கப்படுவதாகும்.

இலக்கண நிலையில் தொகைச் சொற்கள் என்று வழங்கப்படும் இவ்வகை, சொல்லாக்க அமைப்பு முறையில் கூட்டுச்சொல் என வழங்கப்படுகிறது. 'தொகைச்சொல்' என்ற நிலையில் நோக்கும் பொழுது இருசொல் இணைவு மட்டுமே இலக்கண நிலையில் காணப்படுகிறது. ஆனால், சொல்லாக்க அமைப்பில் இருசொல் கூட்டு, பலசொல் கூட்டு என்னும் தன்மையில் சொற்கள் ஆக்கம் பெறுவதைக் காணமுடிகின்றது. இருப்பினும் தொகைச்சொற்களுக்கான அடிப்படையாக இலக்கண நூல்களில் காணப்படும் தொகை வகைகளைக் குறிப்பிடலாம்.

கூட்டுச்சொல்லாக்கத்திற்கு அடிப்படைத் தரவுகளாக விளங்கும் தொகைகள் பற்றி இலக்கண நூல்களில் காணப்படும் செய்திகளைக் காண்பது என்பது முக்கியமானதாகும். அதன் அடிப்படையில் அச்செய்திகள் தொகுத்து நோக்கப்பட்டுள்ளன.

தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில் எச்சவியலில் தொகைகள் பற்றிக் குறிப்பிடுமிடத்து ஆறுவகைத் தொகைகளைப் பற்றிக் கூறுகின்றார். அதாவது,

வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகையென்று
அவ்வா றென்ப தொகைமொழி நிலையே (தொல்.சொல்.412)

என்று ஆறுவகையான தொகைகள் பற்றிப் பொதுப்படக் கூறியுள்ளார். பின்பு ஒவ்வொரு தொகை பற்றியும் முறையே **413, 414, 415, 416, 417, 418** ஆகிய நூற்பாக்களில் விரிவாக விளக்கியுள்ளார். இத்தொகைகள் அனைத்தும் பொருள் சிறக்கும் இடமாக நான்கு நிலைகளைக் குறிப்பிட்டுள்ளார்.

அவைதாம்,
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்
அம்மொழி நிலையா தன்மொழி நிலையலும்
அந்நான் கென்ப பொருள்நிலை மரபே (தொல்.சொல்.419)

இவ்விடம் உரையாசிரியர்கள் வேங்கைப்பூ, பெண்ணணங்கு, வெள்ளாடை போன்ற சொற்களை எடுத்துக்காட்டி, பொருள் சிறக்கும் தன்மையை விளக்கியுள்ளனர்.

தொகைச் சொற்களை இருசொற்களின் கூட்டு என்பதால் இவற்றை ஒரு சொல்லாக எண்ண ஐயம் தோன்றிவிடும் என்பதை உணர்ந்த தொல்காப்பியர்,

எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய (தொல்.சொல்.420)

என்று தொகைச் சொற்களின் வடிவ அமைப்பை ஒருசொல்லாகக் கொள்ளலாம் எனத் தெளிவுபடுத்தியுள்ளார். இந்நூற்பாவிற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், தொல்காப்பியர் கையாண்டுள்ள சில தொகைச்சொற்களைச் சான்றுகாட்டி விளக்கியுள்ளதை அறியமுடிகிறது.

*இவை இருமொழித் தொடர். 'உயர்சொற்கிளவி'(27) 'இடைச்சொற் கிளவி'(161) 'உரிசொற்கிளவி'(161) என்புழி, உயர்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்னுந் தொகைச் சொற்கள் ஒரு சொல் நடையவாய், அவை கிளவி என்பதனோடு தொக்கு ஒரு சொல் நடையவாய், மேல் வந்து முடிப்பனவற்றொடு முடிந்தன (தொல்.சொல்.420 உரை).*

என்று மூலநூலாசிரியர் எடுத்தாண்ட சொற்களையே சான்றுகாட்டிச் சிறப்பாக விளக்கம் அளித்துள்ளதை அறியமுடிகின்றது.

தொல்காப்பியர் குறிப்பிடும் அறுவகைத் தொகைகளுக்கு உரை எழுதிய உரைகாரர்களிடம் காணப்படும் முரண்பாடுகளை இ. மறைமலை தம் ஆய்வில் சுட்டிக்காட்டியுள்ளார். அதை இவ்விடம் நோக்குதல் பொருத்தமாக இருக்கும் என்ற அடிப்படையில் பின்வருமாறு காணமுடிகிறது.

நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும் கருத்துநிலையில் ஒத்துப்போவதையும் சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் முரண்படுவதையும்,

*"... ஆசிரியர் தொக்கே நிற்கும் எனச் சூத்திரம் செய்தலின், வேற்றுமை உருபும் உம்மும் வினைச்சொல் ஈறும் பண்பு உணர்த்தும் ஈறும் இத்தொகைச் சொற்களை அல்லாததோர் சொல்லும் தொக்கு நிற்றலின் தொகைச் சொல் என்பதே அவர் கருத்தாயிற்று" என்பார் நச்சினார்க்கினியர். இதுவே இளம்பூரணருக்கும் உடன்பாடான கருத்தாகும். சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் இக்கருத்தினின்று மாறுபடுகிறார்கள்.*

*"உருபு முதலாயின தொகுதல் எல்லாத் தொகையினுஞ் செய்யாமையான், எல்லாத் தொகைக் கண்ணுஞ் செல்லுமாறு ஒட்டியொரு சொல்லாதல் தொகையிலக்கணமாக முடிதலின் இவ்வாசிரியர்க்கு இதுவே துணிவெனப் படுமென்பது"[4] எனச் சேனாவரையர் துணிகிறார்.*

*"தொகைச் சொல்லாவது; பொருளுணர்த்துஞ் சொல்லாயினும் தொழிலுணர்த்துஞ் சொல்லாயினும் இரண்டு சொல் விட்டிசைத்து நில்லாது ஒட்டி நிற்பது"[5] எனத் தெய்வச்சிலையாரும்[1]*

என்று எடுத்துக்காட்டித் தொகைகள் குறித்து விளக்க முற்படும் இ. மறைமலை, இவ்விரு சாரார் கருத்துகளில் எதனை ஏற்பது என்ற சிக்கல் தோன்றுமிடத்து சி. இலக்குவனார் கூறும் கருத்தைச் சுட்டிகாட்டியுள்ளதையும் இங்கு நோக்குதல் தெளிவைத் தரும்.

உரையாசிரியர்களின் இக்கருத்து மாறுபாட்டுக்கு அமைவு கூறும் வகையில் டாக்டர் சி. இலக்குவனார் இருசாராரது கூற்றுகளிலும் பாதிப்பாதி உண்மையுள்ளது எனவும், தொல்காப்பியர் "மறைந்து நிற்றல்" "ஒன்று சேர்தல்" என்னும் இரு பொருள்களையும் உள்ளடக்கியே தொகைச் சொற்கு இலக்கணம் வகுத்துள்ளார் எனவும் கூறுகிறார்[6].[2]

இக்கருத்துகளின் துணைக்கொண்டு புதிய தொகைச் சொற்களை (கூட்டுச்சொற்களை) ஆக்குவதற்கான தெளிவை அறியமுடிகிறது.

தொகைச் சொற்கள் குறித்துத் தொல்காப்பியரும் தொல்காப்பிய உரையாசிரியர்களும் வழங்கியுள்ள கருத்துகளை இ. மறைமலை சுட்டுவதைப் போல் அன்றி மிகவும் விரிவாகச் ச. இராசேந்திரன் 'தமிழில் சொல்லாக்கம்'[3] என்னும் தமது நூலில் விளக்கியுள்ளார். இவர் தொகைகள் பற்றி விளக்குமிடத்து, தொல்காப்பியர் 'தொகைகள்' என்று குறிப்பிடுவதற்கு இணையாகக் 'கூட்டுகள்' என்னும் கலைச்சொல்லைக் கையாண்டுள்ளார்.[4]

அடுத்து நன்னூலார் தொகைச் சொற்கள் பற்றிக் கூறுமிடத்துத் தொகை நிலைத் தொடர்சொல் என்று குறிப்பிடுகின்றார். இவர் தொகைகள் எவ்வாறு அமைகின்றன என்பதற்கு இலக்கணமாக,

பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளின் அவற்றின் உருபிடை
ஒழிய இரண்டு முதலாத் தொடர்ந்தொரு
மொழிபோல் நடப்பன தொகைநிலைத் தொடர்ச்சொல் (நன்.361)

என்று சொல்லதிகாரத்தில் பொதுவியலில் வகுத்துக் கூறியுள்ளார். இந்நூற்பாவில், 'பெயர்ச்சொல்லொடு பெயர்ச்சொல்லும், பெயர்ச்சொல்லொடு வினைச்சொல்லும் வேற்றுமை வினை பண்பெனப் பின்னர் வகுத்துக் கூறும் அறுவகைப்பொருட் புணர்ச்சிக்கண் அவற்றின் உருபுகள் இடையே தொக்கு நிற்ப இரண்டு முதலிய பல சொற்கள் தொடர்ந்து, ஒருமொழி போல் நடப்பன தொகைநிலைத் தொடர்ச்சொற்கள்' என்று தொகை பற்றிய விளக்கமாகப் பவணந்தி முனிவர் வகுத்து வழங்கியுள்ளார். இவ்வாறு உருபுகள் மறைந்து நின்று தொகைகள் உருவாவதை,

வேற்றுமை வினைபண்பு உவமை உம்மை
அன்மொழி எனஅத் தொகை ஆறுஆகும் (நன்.362)

என வேற்றுமை முதலாக அன்மொழி ஈறாக ஆறுவகைகளில் தொகைச் சொற்கள் ஆக்கம் பெறுகின்றன என்பார். மேலும் இத்தொகைகள் பற்றி விரிவாக 363, 364, 365, 366, 367, 368, 369 ஆகிய நூற்பாக்களில் வேற்றுமை முதலாக முறையே தனித்தனியே விளக்கியுள்ளார். இத்தொகைகள் ஆறினும் பொருள் சிறக்கும் இடமாக,

முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
எனும்நான்கு இடத்தும் சிறக்கும் தொகைப்பொருள் (நன்.370)

இந்நூற்பாவில், 'முன்மொழி, பின்மொழி, அனைத்து மொழி அனைத்து மொழிக்கும் புறத்தில் வரும் மொழி ஆகிய இந்நான்கு இடங்களுள் ஒன்றில் தொகைநிலைத் தொடர்ப்பொருள் சிறந்து நிற்கும்' என்று குறிப்பிட்டுள்ளார்.

இவர், இளம்பூரணரின் தொல்காப்பிய உரையைப் பின்பற்றி நன்னூலை எழுதியுள்ளதாய்த் தெரிகிறது என்று ச. இராசேந்திரன் குறிப்பிடுகின்றார்.[5] இவருடைய கருத்தை உற்றுநோக்கும் பொழுது இவ்விடம் தொகைகள் குறித்து இளம்பூரணர் தரும் உரை விளக்கத்தை அடியொற்றி நன்னூலில் தொகைகள்

குறித்து இலக்கணம் வரைந்துள்ளார் என்ற எண்ணம் மேலோங்குவதை அறியமுடிகின்றது.

மேலும் தொல்காப்பியர் இருசொல் தொகையை மட்டும் குறிப்பிட்டுச் சொல்ல, நன்னூலார் இருசொல் தொகை, பலசொல் தொகை என்ற நிலையில் தொகைகள் பற்றிக் குறிப்பிடுவதை 'இரண்டு முதலாத் தொடர்ந்தொரு மொழி' என்ற அடியின் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது. இவ்வாறு பன்மொழித் தொகை பற்றித் துணிய, நன்னூலாருக்குத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் துணை நின்றுள்ளனர் என்பதைச் ச. இராசேந்திரன் முன்னர்க் கூறிய கருத்தின் வழி அறிந்துகொள்ளலாம்.

இவ்விரு இலக்கண நூலாரின் கருத்து நிலையில் நின்று இவர்களின் நூல்களுக்கு உரை எழுதிய ஆசிரியர்களின் கருத்துப்படியும் சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் தொகை பற்றியும் தொகைச் சொற்கள் உருவாக்கப்படும் வாய்ப்பாட்டு முறை பற்றியும் எவ்வாறு சிந்தித்துள்ளனர் என்பதைப் பின்வருமாறு தொகுத்து ஆராயலாம்.

சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் தொகைச் சொல்லாக்கத்தைத் தொகைச் சொல்லாக்கம், கூட்டுச் சொல்லாக்கம், இணைப்பாக்கம் என்ற தன்மைகளில் வழங்குகின்றனர். தொகைச் சொல்லாக்கம் என்ற பெயரில் இ. மறைமலை அவர்களும் இணைப்பாக்கம் என்ற பெயரில் ச. அகத்தியலிங்கம் அவர்களும் மற்ற சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் கூட்டாக்கம் என்ற பெயரிலும் சொற்கள் இணைந்து புதிய சொல்லாக்கம் நடைபெறுவதைக் குறிப்பிடுகின்றனர்.

தனிச்சொற்கள் இரண்டு அல்லது பல சொற்கள் இணைந்து ஆக்கம் பெறுவதைப் பொற்கோ தொகையாக்கம் என்றும் இ. மறைமலை தொகைச் சொல்லாக்கம், பல்பெயர்த் தொகைச்சொல்லாக்கம், கூட்டுச்சொல் ஆகிய மூன்று பிரிவுகளிலும் ச. அகத்தியலிங்கம் இணைப்பாக்கம் என்றும் மற்ற சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் கூட்டாக்கம் என்றும் வழங்குகின்றனர். கூட்டுச் சொல்லாக்கத்தைப் பலநிலைகளில் ஆராய்ந்த அறிஞர்களின் கருத்துகளைப் பின்வருமாறு தொகுத்து நோக்கலாம்.

தற்கால மொழியியல் சார்ந்து சிந்தித்து வரும் பொற்கோ அவர்கள் சொல்லாக்கச் சிந்தனையிலும் ஈடுபட்டுள்ளார். கூட்டுச் சொல்லாக்கம் பற்றிக் குறிப்பிடும் பொழுது இவர் "*புதிய சொற்கள் தேவைப்படும் போது*

*தொகைகளை ஆக்கிக் கொள்வதும் தமிழில் நெடுங்காலமாகக் கையாளப்பட்டு வந்த உத்தியேயாகும்*"[6] என்று குறிப்பிடுகின்றார். இதற்கான சான்றுகளாகச் சில சொற்களைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

எ.கா. ஊராட்சி, நகராட்சி, சட்டமன்றம்.

இந்நிலையில் கூட்டுச் சொல்லாக்கம் பற்றிக் குறிப்பிடும் இவர், கூட்டுவினைகள் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். இக்கூட்டுவினைகள் பற்றிய கருத்துகளைப் பத்துப்பாட்டில் வினையாக்கம் பற்றி ஆராயுமிடத்து நோக்குதல் பொருத்தமுடையதாக இருக்கும் எனக் கருதி இவ்விடம் தவிர்க்கப்பட்டுள்ளது. மேலும் தொகைச்சொற்களை எவ்வாறு உருவாக்க வேண்டும் என்பது குறித்துப் பொற்கோ, "*இருபெயர்த் தொகையும் பல்பெயர்த் தொகையும் உருவாவதில் உள்ள இன்றியமையாத சில விதிமுறைகளைக் கண்டறிந்து தொகைகளை உருவாக்கினால் தான் அவை எளிதில் நிலைபெற்று வாழ்வு பெறும்*"[7] எனச் சுட்டுமிடத்து, கூட்டுச்சொற்களை ஆக்கும் பொழுது எவ்வாறு செயல்பட வேண்டும் என்பது பற்றிக் குறிப்பிட்டுள்ளதை அறியமுடிகிறது. சில விதிமுறைகளுக்கு உட்பட்டுச் சொற்களை ஆக்கினால் தான் அவை மக்கள் வழக்காற்றில் நிலைத்து நிற்கும் என்பதையும் மேற்காணும் கருத்தின் வழி உணரமுடிகிறது.

ஆட்சித்துறை சொற்கோவையில் நிகழ்ந்துள்ள சொல்லாக்கங்களை ஆராய்ந்து வகைப்படுத்தி விளக்கிய இ. மறைமலை அவர்கள், தொல்காப்பியரின் கருத்து நிலையிலும் பொற்கோவின் சிந்தனை தளத்திலும் நின்று கூட்டுச் சொல்லாக்கத்தைத் தொகைச் சொல்லாக்கம், பல்பெயர்த் தொகைச் சொல்லாக்கம், கூட்டுச் சொல்லாக்கம் என்னும் மூன்று நிலைகளில் ஆராய்ந்துள்ளார்.

தொகைச் சொல்லாக்கம் பற்றிக் குறிப்பிடுகையில் "*ஏற்கனவே வழக்கில் உள்ள சொற்களைக் கொண்டு புதிய கருத்துகளைப் புலப்படுத்தும் புதிய சொற்களைப் படைத்தற்குத் தொகைச் சொல்லாக்கம் பெருந்துணை புரிகிறது*"[8] எனத் தொகைச் சொல்லாக் கத்தின் முக்கியத்துவத்தை விளக்குகிறார். மேலும் புகைவண்டி, திரைப்படம், குழல் விளக்கு, மின்விசிறி போன்ற சொற்களை எடுத்துக்காட்டி, இதுபோன்ற சொற்கள் ஆக்கம்பெற்றுத் தமிழின் சொற்கோவையை விரிவுபடுத்திக் கொண்டு வருகின்றன என்பார்.

தொகைச் சொற்களின் உறுப்புச் சொற்கள் என்ற தன்மையில் தொகைச்சொற்கள் ஆக்கம் பெறும் வாய்ப்பாட்டுத் திறத்தை விளக்குகிறார். பொதுவாகப் பெயர் + பெயர் அல்லது வினையடி + பெயர் என்பதே

தொகைச்சொல்லின் அமைப்பு என்பார். இந்த அமைப்பில் இடம்பெறும் சொற்களின் தன்மையினை வகைப்படுத்திக் கூறுவதைக் கீழே காணலாம்.

(1) தனிச்சொல் + தனிச்சொல்
(2) தனிச்சொல் + ஒட்டுவழிச்சொல்
(3) ஒட்டுவழிச்சொல் + ஒட்டுவழிச்சொல்

இந்த மூன்று வகைகளை இருசொல் கூட்டாக்கத்திற்கும்

(1) பெயர் + பெயரெச்ச மூலம் + பெயர்
(2) பெயர் + பெயரெச்ச மூலம் +[பெயரடை] + பெயர்
(3) பெயர் + பெயரெச்ச மூலம் + பெயர் + பெயரெச்ச மூலம் + பெயர்
(4) X + பெயரெச்ச மூலம் + பெயர்

என்ற நான்கு வாய்ப்பாடுகளில் பல்பெயர்த் தொகைகள் அமைவதாகத் தே. ஆண்டியப்பன் கூறுவதைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

மேலும் 'தொகைச்சொல் + பெயர் சொல்' என்ற பிரிவில் அறுவகைத் தொகைகளோடு பெயர்கள் சேர்ந்து ஆக்கம் பெறுவது பற்றி,

பெயர் + பெயர் + பெயர்
தொகை + பெயர் + பெயர்
பெயர் + தொகை + பெயர்
வினையடி + தொகைச்சொல்
வினையடி + கூட்டுச்சொல்
பெயர் + கூட்டுவினை + பெயர்
கூட்டுப்பெயர் + வினை + பெயர்
கூட்டுப்பெயர் + கூட்டுவினை + பெயர்
பெயர் + வினையடை + வினைத்தொகை
வினைத்தொகை + வினையடை + பெயர்

என்பது போன்ற வாய்ப்பாட்டு அமைப்புகளில் கூட்டுச் சொல்லாக்கம் நிகழ்ந்துள்ளதைச் சான்றுகளுடன் விளக்கியுள்ளார்.

கூட்டுச் சொல்லாக்கத்தைத் தொல்காப்பியர், பவணந்தி முனிவர், தொல்காப்பிய உரையாசிரியர்கள், இ. மறைமலை, தே. ஆண்டியப்பன், பொற்கோ போன்றோரின் வழிநின்று ச. இராசேந்திரன் ஆராய்ந்துள்ளார். இவர் கூட்டுகளை உள்வட்டக் கூட்டு, வெளிவட்டக் கூட்டு எனப் பகுத்துக் கூறியுள்ளார். இருப்பினும் கூட்டுகளைப் பின்வரும் பத்து வகைகளாகப் பாகுபாடு செய்யலாம் எனக் குறிப்பிட்டுள்ளார்.

1. இரண்டாம் அங்கம் செயப்படு பொருளாய் வரும் கூட்டுகள்.
2. இரண்டாம் அங்கம் கேண்மைச் செயப்படு பொருளாய் வரும் கூட்டுகள்.
3. இரண்டாவது அங்கம் எழுவாயாய் வரும் கூட்டுகள்.
4. இடப்பொருள் இரண்டாவது அங்கமாய் வரும் கூட்டுகள்.
5. காலம் இரண்டாவது அங்கமாய் வரும் கூட்டுகள்.
6. பிற வகைகள்.
7. சமநிலை உள்வட்டக் கூட்டுகள்.
8. உவம உருவகப் பெயர் கூட்டுகள்.
9. மரபுப்பெயர் கூட்டுகள்.
10. பல்பெயர் கூட்டுகள்.

இவ்வாறு வகைப்படுத்திக் கூறும் ச. இராசேந்திரன், இ. மறைமலை அவர்கள் குறிப்பிடும் கூட்டுச்சொல் அமைப்புகள் பற்றி விவாதித்துச் செல்கிறார். தே. ஆண்டியப்பன் குறிப்பிடும் வாய்ப்பாடுகளை இவரும் கையாண்டுள்ளார்.

பொற்கோவைப் பின்பற்றிச் சில இடங்களில் இ. மறைமலை அவர்கள் ஆட்சித்துறை சொற்களை ஆராய்ந்துள்ளார். மேலும் பலநிலைகளில் சொல்லாக்கம் பற்றிச் சிந்தித்துள்ளார். ச. இராசேந்திரன், இ. மறைமலையைப் பின்பற்றிச் சொல்லாக்கம் குறித்து விவாதித்துள்ளார். குறிப்பாகக் கூட்டுச் சொல்லாக்கம் பற்றிப் பேசுமிடத்து இ. மறைமலையின் கருத்துநிலையில் நின்றும் அவரைப் பின்பற்றியும் விளக்கியுள்ளார் என்பதை அறியமுடிகின்றது.

கூட்டாக்கங்களை மரபிலக்கணப்படி தொகையாக்கம் என்று கூறும் சு. சக்திவேல் மற்றும் ச. இராசேந்திரன் ஆகிய இருவரும் பெயர்கள், வினைகள், பெயரடைகள், வினையடைகள் முதலிய நான்கு வகைகளில் கூட்டாக்கங் களைப் பகுத்துக் கூறுவர். கூட்டுகளின் உள்வகைப்பாடுகளாகப் பின்வரும் ஐந்து நிலைகளில் குறிப்பிடுகின்றனர்.

1. கூட்டுகளை உருவாக்கப் பயன்படுத்தப்படும் சொற்களின் வடிவ வகுப்புகள்.
2. பொருண்மை வகுப்புகள்.
3. கூட்டுகளாக வரும் சொற்களை இணைப்பவைகளாகக் கருதப்படும் சூழ்நிலை இயக்கிகள்.
4. ஆழ்நிலை தொடரியல் செயற்பாடு.
5. உருபனியல்.

ஆகிய வழிகளில் மட்டுமன்றிப் பிற வழிகளிலும் கூட்டாக்கங்கள் வகைப்படுத் தப்பட்டுத் தரப்படலாம் என்று கூறுகின்றனர்.

கூட்டுப்பெயர்கள் ஆக்கம் பெறும் தன்மையினை வாய்ப்பாட்டு நிலையில் பின்வருமாறு பகுத்தாராய்ந்துள்ளனர். அதாவது, உள்வட்டக் கூட்டு, வெளிவட்டக் கூட்டு என இரண்டாகப் பிரித்து வாய்ப்பாடு அமைத்துள்ளனர்.

**(1) உள்வட்டக் கூட்டுகள்**

பொதுப்பெயர் + பொதுப்பெயர் > பெயர் (வீரப்பதக்கம்)
சிறப்புப்பெயர் + பொதுப்பெயர் > பெயர் (காந்திவழி)
நேரியைபு கூட்டுகள் > பெயர் (பெண் டாக்டர்)
உம்மைத் தொகைக் கூட்டுகள் > பெயர் (ஆடுமாடுகள்)

**(2) வெளிவட்டக் கூட்டுகள்**

வினை + பெயர் > பெயர் (ஊறுகாய்)
பெயர் + வினை > பெயர் (தாலிகட்டு)
வினை + வினை > பெயர் (இழுபறி)
பெயரடை + பெயர் > பெயர் (நன்கொடை)
இடைச்சொல் + பெயர் > பெயர் (முன்னுரை)
வினையடை + பெயர் > பெயர் (முன்னேற்றம்)

ஆகிய வாய்ப்பாட்டு அமைப்பில் பெயராக்கம் நடைபெறும் எனவும்

பெயர் + வினை > வினை (முயற்சிசெய்)
வினை + வினை > வினை (கண்டுபிடி)
பெயரடை + வினை > வினை (புன்னகை)
வினையடை + வினை > வினை (எதிரொலி)
இடைச்சொல் + வினை > வினை (வெளியேறு)

ஆகிய ஐந்து வாய்ப்பாட்டு நிலைகளில் வினையாக்கம் நடைபெறும் எனவும்

பெயர் + பெயரடை > பெயரடை - இரத்தச்சிவப்பு(ரோஜா)
பெயரடை + பெயரடை > பெயரடை - குருட்டு ஊமை(பெண்)
பெயர் + பெயர் > பெயரடை - பொன்மனச்(செம்மல்)
வினை + பெயர் > பெயரடை - வெட்டுக்கத்தி(மீசை)
பெயரடை + பெயர் > பெயரடை - செஞ்சோற்றுக்(கடன்)
இடைச்சொல் + பெயர் > பெயரடை - வெளியுலகச்(செய்தி)
பெயர் + வினை > பெயரடை - குடுமிப்பிடி(சண்டை)
வினை + வினை > பெயரடை - அடிதடி(சண்டை)
பெயரடை + வினை > பெயரடை - திருநிறைச்(செல்வி)

ஆகிய வாய்ப்பாட்டு அமைப்பில் பெயரடைகள் உருவாக்கம் பெறுகின்றன எனவும் குறிப்பிட்டுள்ளனர்.

மேலும் கூட்டுவினையடைகள் ஆக்கம், ஒரு கூட்டுப்பெயரின் முன் வினையடைப் பின்னொட்டுகள் ஆக, ஓடு, இல் போன்றவை சேரும்பொழுது நடைபெறுகின்றன என்று குறிப்பிடுகின்றனர். சான்றாக, உறுதுணையாக, கழிவிரக்கத்தோடு, அசுரவேகத்தில் என்பது போன்ற சொற்களை எடுத்துக் காட்டியுள்ளனர். கூட்டுச் சொல்லாக்கம் நடைபெறும் அமைப்பு முறைகளை மேற்கண்ட வாய்ப்பாடுகளாகப் பகுத்து வழங்கலாம் என்று கூறியுள்ளனர்.

சொற்களை இணைத்துப் புதிய சொற்களை ஆக்குவதைத் தொகைச் சொல்லாக்கம், கூட்டுச்சொல் அமைத்தல் என்ற இருநிலைகளில் வே. சீதாலட்சுமி குறிப்பிடுகின்றார்.

மரபிலக்கணங்கள் குறிப்பிடும் தொகை வகைகளில் காணப்படும் சொற்களைத் தொகையாக்கம் என்ற சொல்லாக்க வகைக்குச் சான்றாகச் சுட்டலாம் என்று அறுவகைத் தொகைகளை விளக்கியுள்ளார். அடுத்துக் கூட்டுச்சொல் அமைத்தல் என்ற பிரிவில் கூட்டுப் பெயர்களையும் கூட்டு வினைகளையும் அமைத்தலைக் காணமுடிகிறது.

| | |
|---|---|
| பெயர் + துணைவினை | > ஆசைப்படு |
| வினை + துணைவினை | > புதையுண் |
| வினையெச்சம் + துணைவினை | > கண்டுபிடி |
| இடைச்சொல் + வினை | > மேற்கொள் |

ஆகிய நான்கு வாய்ப்பாட்டு அமைப்புகளில் கூட்டு வினையாக்கம் நடைபெறும் எனவும்

1. கூட்டு வினைகளுடன் 'தல்' விகுதி சேர்த்துக் கூட்டுப்பெயர்கள் உருவாக்கப்படுதல்

   எ.கா. வழிபடுதல்.

2. கூட்டு வினைகளில் அமையும் இடு, படு, கொள் போன்ற துணை வினைகள் முதனிலைத் திரிந்த பெயர்ச் சொற்களாக மாறுவதன் மூலம் கூட்டுப் பெயர்ச்சொற்கள் உருவாக்கப்படுதல்

   எ.கா. சமன்பாடு, மேற்கோள்.

3. கூட்டு வினைச்சொற்களுடன் 'இ'கர விகுதி சேர்ந்து மிகுதியான

சொற்களை உருவாக்குவதைக் காணலாம். இவை பெரும்பாலும் கருவிப்பொருளை உணர்த்தும் சொற்களாகவே அமைகின்றன.

4. கூட்டு வினைச்சொற்களுடன் 'பு'கர விகுதி சேர்ந்து கூட்டுப் பெயர்களை உருவாக்குதல்

   எ.கா. கண்டுபிடிப்பு.

5. கூட்டு வினைச்சொற்களுடன் 'அல்' விகுதி சேர்த்தும் கூட்டுப் பெயர்கள் உருவாக்கப்படுகின்றன

   எ.கா. ஊடுருவல்.

6. கூட்டு வினைச்சொற்களுடன் 'வு'கர விகுதி சேர்ந்தும் கூட்டுப் பெயர்கள் உருவாகின்றன.

   எ.கா. சீர்குலைவு.

ஆகிய ஆறு நிலைகளில் விகுதிகள் இணைவதால் கூட்டுப்பெயர்கள் உருவாகின்றன என்பார். மேலும் பெயரெச்சம் + பெயர் என்ற தன்மையில் பெயர்ச்சொற்கள் ஆக்கம் பெறும் என்பதைச் சான்றுடன் விளக்குகிறார்.

எ.கா. பேசும் பொம்மை.

அடுத்துப் பன்மொழிக் கூட்டுச்சொற்கள் ஆக்கப்படுவதைச் சான்றுடன் சுட்டிக்காட்டியுள்ளார்.

எ.கா. காது கேட்கும் கருவி, மரமறுக்கும் ஆலை.

இதுபோன்ற தன்மைகளில் கூட்டுச்சொற்கள் ஆக்கம் பெறும் என்பதாக வே. சீதாலட்சுமி குறிப்பிடுகின்றார்.

வ.சுப. மாணிக்கனாரின் படைப்புகளில் நிகழ்ந்துள்ள சொல்லாக்கங்களைத் தொகுத்து ஆராய்ந்த பழ. முத்துவீரப்பன், கூட்டுச் சொல்லாக்கம் நடைபெறும் வாய்ப்பாட்டு முறைகளாகச் சிலவற்றைக் குறிப்பிடுகின்றார். அதாவது, பின்வரும் வாய்ப்பாட்டு அமைப்பில் கூட்டுச் சொல்லாக்கம் நடைபெறும் என்பார்.

| | |
|---|---|
| பெயர் + பெயர் | > பெயர் (அரசாழி) |
| பெயர் + வினை | > பெயர் (இசைபாடி) |
| வினை + பெயர் | > பெயர் (எழுதுகையர்) |
| வினை + வினை | > பெயர் (ஆய்முனை) |
| வினையடி + பெயர் | > பெயர் (அறப்பிழை) |

பண்படி + பெயர் > பெயர் (அல்உலகியல்)
வினையடை + பெயர் > பெயர் (இரு பேரொலிஞர்)
பெயர் + வினை > வினை (காதலாடுகிறேன்)
வினை + வினை > வினை (விலக்குண்ண)

ஆகிய எட்டு வகைகளில் வ.சுப. மாணிக்கனார் கூட்டுச்சொற்களை ஆக்கியுள்ளார் என ஆய்ந்து குறிப்பிட்டுள்ளார்.

கூடியமையும் பெயர்கள் என்ற பெயரில் கூட்டுச் சொல்லாக்கம் நடைபெறும் வாய்ப்பாட்டு அமைப்பு முறைகளை ஆ. வேலுப்பிள்ளை குறிப்பிட்டுள்ளார்.

பெயர் + பெயர் > பெயர் (வாய்க்கால்)
பெயர் + வினையடி + விகுதி > பெயர் (மனாளன்)
பெயர் + இடப்பொருளுருபு + பாலறிகிளவி > பெயர் (வழியிலார்)
தொழிற்பெயர் + எதிர்மறை இடைச்சொல் + விகுதி > பெயர் (இறையிலி)
பெயரடை + பெயர் > பெயர் (வெண்பா)

ஆகிய ஐந்து வாய்ப்பாட்டு அமைப்பு முறைகளில் கூட்டுப் பெயராக்கம் நடைபெறும் என்பது இவர் கருத்தாகும். இந்த வாய்ப்பாடுகள் அனைத்தும் இருசொல் கூட்டு என்ற முறையில் அடங்கிவிடுவதைக் காணலாம். மேலும் இருசொல் கூட்டுடன் விகுதிகள், பொருளுருபுகள், இடைச்சொற்கள் போன்றவையும் சேர்ந்து கூட்டுப் பெயராக்கம் நடைபெறும் என்பதை மேற்காணும் வாய்ப்பாடுகள் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது.

சொல்லாக்கம் குறித்து விசாலமான சிந்தனைகளை உடைய எச். சித்திரபுத்திரன், கூட்டுச் சொல்லாக்கத்தின் தன்மை பற்றியும் வகைப்பாடுகள் பற்றியும் விரிவாக ஆராய்ந்துள்ளார். கூட்டுகள் எவ்வாறு அமைகின்றன என்பதை,

> *பேசுபவர்களின் பேச்சு சூழலுக்கும் கருத்து வெளிப்பாட்டுத் தேவைக்கும் ஏற்பச் சொற்கள் பொருள் தரும் வகையில் இணைந்து செயல்படுகின்றன. இவ்விணைவு பேச்சாளர்களின் விருப்பத்திற்கு ஏற்ப வாக்கியத்திற்கு வாக்கியம் சூழலுக்குச் சூழல் மாற்றம் பெற்றுக் காணப்பெறும். இத்தகைய தன்மை சொற்சேர்க்கை என்றழைக்கப் பெறுகின்றது*[9]

என்று வரையறை செய்துள்ளார். சொற்களின் இணைவால் தோற்றம் பெறும் சொற்கள் சூழலுக்கு ஏற்ப அமையும் என்பதையும் மேற்காணும் கருத்தின் வழி உணர்ந்துகொள்ள முடிகின்றது. இக்கூட்டாக்கம் இருநிலைகளில்

நடைபெறுவதாகக் குறிப்பிடுகின்றார். அதாவது, இருசொற்கள் இயல்பாய்த் தற்காலிகமாகச் சேர்ந்துவரின் அது இயல்புச் சேர்க்கை என்றும் இயல்பாய் அன்றி மிக நெருக்கமுடன் பிரித்தறிய இயலாதவாறு இணைந்து வருவது கூட்டுச் சேர்க்கை என்றும் கூறுகின்றார். இயல்புச் சேர்க்கை இலக்கண மரபில் நின்று செயல்படுவதால் அதைப் பற்றி இவ்விடம் அறிதல் தேவையில்லை எனக் கருதி அடுத்துக் கூட்டுச்சேர்க்கை பற்றிக் காணலாம்.

கூட்டுச் சேர்க்கையில் இரண்டு முதல் பல சொற்கள் வரை இணைந்து காணப்பெறும். பல சொற்கள் இணைந்து பொருளில் முற்றிலும் மாறுபட்டுக் காணப்பெறுமாயின் அது மரபுத்தொடர் என்ற தன்மையில் இடம்பெறும் எனவும் இரண்டு சொற்கள் இணைந்து அமைப்பிலும் பொருளிலும் மாறுபட்டுத் தனித்தன்மை பெற்றுக் காணப்படின் அது கூட்டுச்சொல் எனவும் பகுத்தறிவார்.

மொழிகளில் சில சொற்கள் சில சொற்களுடன் மட்டும் அதிகம் இணைந்து காணப்பெறும். அவற்றைத் தனித்தனியாகப் பிரித்தறிதல் என்பது இயலாத ஒன்றாகும். அவ்வாறு பிரித்தறியின் பொருளின் தன்மை மறைந்து விடும். கூட்டுச் சேர்க்கையில் இடம்பெறும் சொற்களுக்கு மாற்றுச் சொற்களைப் பதிலீடு செய்யவும் முடியாது. இதற்குச் சான்றாக, 'காலை' என்ற சொல்லும் 'வணக்கம்' என்ற சொல்லும் பல்வேறு சொற்களுடன் இணைந்து இயல்புச் சேர்க்கையாக வரும் என்பார். ஆனால், அவ்விரு சொற்களும் இணைந்த 'காலை வணக்கம்' என்ற சொல் கூட்டுச்சொல்லாகும். இதைப் பிரித்தறியின் பொருள் மறைந்துவிடும் என்பதைக் குறிப்பிடுகின்றார்.

கூட்டுச் சேர்க்கையில் இடம்பெறும் தனிச்சொற்களின் பொருள் கூட்டாக்கத்தில் முழுநிலையிலோ, ஓரளவோ, முற்றிலும் வேறுபட்டோ நிற்கும் என்பார். கூட்டுச்சொற்கள் அவற்றுள் இடம்பெறும் தனிச் சொற்களின் செயல்பாட்டிற்கும் பொருண்மைக்கும் ஏற்ப நான்கு வகைகளாகப் பிரித்தறியப் பெறும் எனக் குறிப்பிடும் எச். சித்திரபுத்திரன் மற்ற சொல்லாக்கச் சிந்தனையாளர்களிடமிருந்து சற்று மாறுபட்ட அமைப்பு முறையில் வகைப் படுத்தியுள்ளார். அவை,

சொல்$_1$ + சொல்$_2$ > சொல்$_1$ சொல்$_2$ - பொருள்$_1$ + பொருள்$_2$
சொல்$_1$ + சொல்$_2$ > சொல்$_1$ சொல்$_2$ - பொருள்$_1$ -----------
சொல்$_1$ + சொல்$_2$ > சொல்$_1$ சொல்$_2$ - ----------- பொருள்$_2$

சொல்$_1$ + சொல்$_2$ > சொல்$_1$ சொல்$_2$ - பொருள்$_3$

என்ற நான்கு வகைகளில் கூட்டுச் சொல்லாக்கம் நடைபெறும் எனப் பகுத்துக் கூறியுள்ளார்.

**சொல்$_1$ சொல்$_2$ > பொருள்$_1$ பொருள்$_2$**

இவ்வகை ஆக்கத்தில் இடம்பெறும் தனிச்சொற்களின் பொருள் முழுநிலையில் இடம்பெறும். இதில் தனிச்சொற்களின் கருத்துப்பொருள் கூட்டுச்சொற்களின் கருத்துப் பொருளிலிருந்து மாறுபடுவதில்லை. தமிழில் பிற கூட்டுச் சொற்களைவிட அதிக விளைவாக்கம் பெற்று வழக்கில் உள்ள வகையாக இவ்வடிவம் திகழ்கின்றது. இதற்குச் சான்றாக அரவுரி, மாட்டுவண்டி, ஆழிமுதல்வன் போன்ற சொற்களைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

**சொல்$_1$ சொல்$_2$ > பொருள்$_1$ ---------**

தனிச்சொற்களின் பொருள் கூட்டாக்கத்தில் முழுநிலையில் வெளிப்படுவதில்லை. இவ்வகைக் கூட்டாக்கத்தில் முதல் சொல்லின் பொருள் முழுநிலையில் வெளிப்பட்டு நிற்கும். இரண்டாவது சொல்லின் பொருள் பகுதி வெளிப்பட்டோ வெளிப்படாமலோ காணப்படும். சான்றாக ஒளிமண்டலம், உழுபடை, கொடிரிசை என்பது போன்ற சொற்களை எடுத்துக்காட்டுவார்.

**சொல்$_1$ சொல்$_2$ > ---------- பொருள்$_2$**

இவ்வகைக் கூட்டாக்கத்தில் இடம்பெறும் தனிச்சொற்களின் பொருள்களில் முதல் சொல்லின் பொருள் வெளிப்பட்டோ, வெளிப்படாமலோ நிற்கும். ஆனால், இரண்டாம் சொல்லின் பொருள் முழுநிலையில் வெளிப்பட்டு நிற்கும். சான்றாக இருநீர், உரிமை மாந்தர், செங்காய் போன்ற சொற்களை எடுத்துக்காட்டலாம் என்பார்.

**சொல்$_1$ சொல்$_2$ > பொருள்$_3$**

இவ்வகைக் கூட்டாக்கத்தில் இடம்பெறும் இரண்டு தனிச்சொற்களின் பொருள் முற்றிலும் இடம்பெறாது. மாறாகப் புதிய ஒரு பொருள் வெளிப்பட்டு நிற்கும். கூட்டுச்சொல் வகைகளில் தனித்தன்மையுடைய கூட்டுச்சொல் இதுவெனக் கூறுவார். இவ்வமைப்பில் இடம்பெறும் சொற்கள் பெயர் + பெயர் கூட்டுகளாகவும் பெயர் + வினைச்சொற்கள் அடங்கிய தொடர்களாகவும் காணப்படும் என்பார். சான்றாக எட்டிக்காய், தேன்நிலவு, கம்பி நீட்டுதல் போன்ற சொற்களைக் கூறுவார்.

கூட்டுச் சொல்லாக்கத்தில் உருவாகும் சொற்கள் அகராதிகளில் தலைச்சொற்களாக இடம்பெறுவதால் இயல்புச் சேர்க்கை, கூட்டுச் சேர்க்கை ஆகிய இரண்டையும் பிரித்தறிதல் இன்றியமையாததாகும். கூட்டுச் சொற்களைப் பிரித்துக் கொடுத்தால் பயனற்றதாகிவிடும். எனவே இவ்விரு சேர்க்கைகளையும் கண்டறிவதற்குச் சில முக்கியமான விதிகள் இருப்பதை எச். சித்திரபுத்திரன் எடுத்தாண்டுள்ளார். அவற்றை நோக்குதல் ஆய்வில் மேலும் தெளிவைக் காணப் பயன்படும் என்ற தன்மையில் பின்வருமாறு காணலாம்.

விதிகள்

1. கூட்டுச் சொல்லாக்கத்தில் இடம்பெற்றுள்ள தனிச்சொற்களுக்குப் பதிலாக அதே பொருளுடைய பிறிதொரு சொல்லைப் பதிலீடு செய்ய இயலாது.

எ.கா. மாட்டுவண்டி > காளை வண்டி.

2. கூட்டுச்சொற்களுக்கு இடையே வேறு எந்தச் சொற்களையும் சேர்த்தல் இயலாது.

எ.கா. கள்ளச்சாவி > கள்ளப் பெரியசாவி.

இவ்வகையில் கூட்டுச்சொற்களின் முன்னால் மட்டும் பெயர்ச்சொற்களையோ பெயரடைகளையோ இட்டு வழங்கலாம். 'பெரிய கள்ளச் சாவி' என்பது போன்று.

3. கூட்டுச் சொற்களில் இடம்பெற்றுள்ள தனிச்சொற்களின் பொருள் முற்றிலும் மாறுபட்டு, மாறாகப் புதிய பொருள் பெற்றுக் காணப்படுதல். மரபுத்தொடர்கள் இத்தன்மையில் ஆக்கம் பெறுகின்றன.

எ.கா. தேன்நிலவு (கூட்டுச்சொல்)
பச்சைக்கொடி காட்டுதல் (மரபுதொடர்)

4. கூட்டாக்கத்தில் இடம்பெற்றுள்ள சொற்களுள் சில கட்டுடையன வாகக் காணப்பெறும். மேலும் அவை தம்முள் இணைவுத் தன்மை அதிகம் கொண்டும் செயல்படும்.

எ.கா. அல்லும் பகலும்

5. கூட்டுச்சொற்கள் ஒருபொருட் பன்மொழிகளைக் கொண்டிருக்கும். அதாவது கூட்டுச் சொல்லாக்கத்திற்கு இணையாக மொழியில் தனிச்சொற்கள் இடம்பெற்றிருக்கும்.

எ.கா. **கூட்டுச்சொல்** **இணையான சொல்**

ஆட்டம்பாட்டம் கொண்டாட்டம்

அமளிதுமளி கலகம்

**6.** கூட்டுச்சொற்களும் மரபுத்தொடர்களும் தமக்கெனத் தனியான இலக்கணக் குறிப்புகளைப் பெற்றுள்ளன. சான்றாகக் 'கம்பி நீட்டு' எனும் சொல்லில் இடம்பெற்றுள்ள 'கம்பி' பெயர்ச்சொல்லாகும். 'நீட்டு' என்பது வினைச் சொல்லாகும். பெயரும் வினையும் இணைந்து புதிய சொற்கள் தோற்றம் பெறுகின்றன.

எ.கா. நல்ல (பெ.அ.) + பாம்பு (பெ) > நல்லபாம்பு (பெ)

என்று ஆறுவகையான விகுதிகளைச் சுட்டிக்காட்டியுள்ளார். கூட்டாக்கத்தின் அமைப்புமுறை பற்றி மேற்கண்டவாறு தெளிவான ஒரு சிந்தனைப் போக்கில் செயல்பட்டுள்ளதை அறிந்துகொள்ள முடிகின்றது.

இதுவரை கண்ட சொல்லாக்கச் சிந்தனைகளில் எச். சித்திரபுத்திரனின் பார்வை சற்று மாறுபட்ட போதிலும் பொருண்மை நிலையில் மற்ற சொல்லாக்கச் சிந்தனையாளர்களிடம் ஒத்துப்போவதை உணர்ந்துகொள்ள முடிகின்றது.

அடுத்து இலக்கணிகள், உரையாசிரியர்கள், சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் ஆகியோரின் கருத்துகளைத் தொகுத்து நோக்கியதன் அடிப்படையில் பத்துப்பாட்டில் உள்ள சொற்களைத் தொகுத்துப் பகுத்து ஆராய்ந்து கூட்டுச்சொற்கள் அமைப்பு நிலையிலும் பொருள் நிலையிலும் விரிவாக ஆராயப்படுகிறது.

பத்துப்பாட்டில் உள்ள சொற்களைத் தொகுத்து ஆராய முற்படுகையில் கூட்டுப் பெயர்ச்சொல்லாக்கம் அதிகமாகவும் கூட்டு வினைச்சொல்லாக்கம் மிகக் குறைவாகவும் நிகழ்ந்துள்ளதை அறியமுடிகின்றது. கூட்டுப்பெயர்ச் சொல்லாக்கத்தைத் தனித்தும் கூட்டு வினைச்சொல்லாக்கத்தைத் தனியாகவும் பகுத்துக் காணமுடிகிறது. மேலும் கூட்டுப் பெயராக்கம் பற்றிய செய்திகள் பின்வருமாறு:

## இருசொல் கூட்டுப் பெயராக்கம்

மொழி வளர்ச்சியில் சொற்கள் இணைந்து பல சொற்கள் ஆக்கம் பெறுவது இயல்பான ஒன்றாகும். சொற்கள் இணைவது பல நிலைகளில் நிகழ்கின்றன. இரண்டு முதலாகப் பல சொற்கள் இணைந்து ஆக்கம்

பெறுவதைக் கூட்டாக்கம் என்று வழங்குவர். இந்தக் கூட்டாக்கத்தை இரு பெரும் பிரிவுகளில் பகுத்து ஆராயலாம். அவை இருசொல் கூட்டுப் பெயராக்கம், பலசொல் கூட்டுப் பெயராக்கம் என்பன. இருசொல் கூட்டுப் பெயராக்கம் இலக்கண நூல்கள் குறிப்பிடும் தொகையாக்கம் என்னும் தன்மையில் அமைகின்றது. முன்னர்த் தொகுத்து அறிந்த கருத்துகளின் வழிநின்று பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள இருசொல் கூட்டுப் பெயராக்கம் பின்வருமாறு ஆராயப்படுகிறது.

இருசொல் கூட்டுப் பெயராக்கம் பலவகையான வாய்ப்பாட்டு அமைப்புமுறைகளில் நிகழ்த்தப்படுவதைச் சொல்லாக்கச் சிந்தனையாளர் களின் வழி முன்னரே அறிந்தோம். அவற்றின் தன்மையில் பத்துப்பாட்டில் உள்ள சொற்களை அணுகும் பொழுது நான்கு வகையான வாய்ப்பாட்டு அமைப்பில் சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. அதாவது,

பெயர் + பெயர் > பெயர்
பெயரடை + பெயர் > பெயர்
வினை + பெயர் > பெயர்
உரிச்சொல் + பெயர் > பெயர்

ஆகிய நான்கு வாய்ப்பாடுகளில் வடிவ அமைப்பில் சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. ஒவ்வொரு வாய்ப்பாடு அமைப்பிற்கும் சான்றுகாட்டும் நோக்கில் கீழே காணலாம்.

### பெயர் + பெயர் > பெயர்

கூட்டுச்சொற்கள் உருவாக்கத்தில் இருபெயர்கள் இணைந்து பெயர்கள் ஆக்கம் பெறுவது குறிப்பிடத்தக்கது. இந்த அமைப்பில் பத்துப்பாட்டில் உள்ள சொற்களைச் சான்று நோக்கில் ஆராயலாம்.

வாய் + மொழி > வாய்மொழி (மெய்மொழி) (மது.19)
நாள் + அங்காடி > நாளங்காடி (பகல்நேர கடை) (மது.430)
மலை + மகள் > மலைமகள் (பார்வதி) (திரு.257)
கார் + கோள் > கார்கோள் (கடல்) (திரு.7)
கடவுள் + கடன் > கடவுட்கடன் (நேர்த்திக்கடன்) (பொரு.52)
தலை + கோள் > தலைக்கோள் (கன்னி) (பொரு.142)
மறை + காப்பாளர் > மறைகாப்பாளர் (அந்தணர்) (பெரு.301)
வழி + நாள் > வழிநாள் (முதுவேனில்) (சிறு.9)
கிணை + மகள் > கிணைமகள் (கிணைப்பறை கொட்டுவோன் மனைவி) (சிறு.136)

மான் + கணம் > மான்கணம் (மான் கூட்டம்) (குறி.217)
மதலை + பள்ளி > மதலைப்பள்ளி (வீட்டின் உறுப்பு) (நெடு.48)
வெறி + களம் > வெறிக்களம் (வெறியாடுமிடம்) (மலை.150)
மெய் + பை > மெய்ப்பை (சட்டை) (முல்.60)
வாய் + புள் > வாய்ப்புள் (நன்னிமித்தம்) (முல்.18)
தவம் + பள்ளி > தவப்பள்ளி (தாபதர்கள் தங்குமிடம்) (பட்.153)
கான் + ஆறு > கான்யாறு (காட்டாறு) (பட்.161)

இவையும் இவை போன்றும் பத்துப்பாட்டில் இருசொற்கள் இணைந்து ஆக்கம் பெற்ற சொற்கள் பல காணப்படுகின்றன. இச்சொற்களை எச். சித்திரபுத்திரன் அவர்கள் குறிப்பிடும் நான்கு வகை அமைப்புகளில் ஒப்புநோக்கும் பொழுது மூன்று வகையான பொருள் நிலைகள் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ளதை உணர்ந்துகொள்ள முடிகின்றது.

இருசொல் இணைவின் பொழுது இரண்டு தனிச்சொற்களின் பொருளும் முழுநிலையில் வெளிப்படுதல் என்னும் தன்மையில் 'கான்யாறு', 'மான்கணம்', 'நாளங்காடி' போன்ற சொற்களும் முதல் சொல்லின் பொருள் மறைந்து இரண்டாம் சொல்லின் பொருள் வெளிப்படுதல் என்னும் தன்மையில் 'கடவுட்கடன்', 'தவப்பள்ளி' போன்ற சொற்களும் இரண்டு தனிச்சொற்களின் பொருளும் மறைந்து மாறாக வேறு புதிய பொருள் வெளிப்படுதல் என்னும் தன்மையில் 'மலைமகள்', 'மெய்ப்பை', 'மறைகாப்பாளர்' போன்ற சொற்களும் ஆக்கம் பெற்றுள்ளன. ஆனால் இரண்டு தனிச்சொற்களில் முதல் சொல்லின் பொருள் வெளிப்பட்டு இரண்டாம் சொல்லின் பொருள் வெளிப்படாது நிற்கும் தன்மையில் சொற்கள் ஆக்கம் பெற்றதாய் அறியமுடியவில்லை.

இருசொல் இணைவுகளால் ஆக்கம் பெறும் சொற்களில் சில இடங்களில் விகுதிகளின் பயன்பாடும் காணப்படுவதை அறியமுடிகின்றது. சான்றாக 'மறைகாப்பாளர்', 'பேய் மகளிர்' போன்ற சொற்கள் இரண்டு சொற்கள் இணைவுடன் முறையே 'ஆளர்', 'இர்' ஆகிய விகுதிகள் சேர்ந்து ஆக்கம் பெற்றுள்ளதைக் காணலாம். இருசொல் கூட்டுப்பெயராக்கத்தில் பல சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. மேற்காணும் சொற்கள் சான்று நோக்கில் சுட்டப்பட்டுள்ளன. இந்த இருசொல் கூட்டுப் பெயராக்கம் பத்துப்பாட்டில் விளைவாக்கம் கொண்ட ஒன்றாக விளங்குகிறது. இவ்வமைப்பில் ஆக்கம் பெற்றுள்ள மற்ற சொற்கள் அனைத்தும் பின்னிணைப்பில் கொடுக்கப் பட்டுள்ளன.

### பெயரடை + பெயர் > பெயர்

பெயரடைகளுடன் பெயர்ச் சொற்கள் இணைவதால் பல சொற்கள் ஆக்கம் பெறுகின்றன. இவ்வாய்ப்பாட்டு அமைப்பு அடிப்படையில் பத்துப்பாட்டில் உள்ள சொற்களை அணுகும் பொழுது பல பெயரடைகள் பல்வேறு சொற்களுடன் சேர்ந்து சொற்கள் ஆக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. பத்து நெடும்பாட்டுகளிலும் ஒன்றிரண்டு சொற்கள் விகிதமாகச் சான்றுகாட்டும் முகமாகக் கீழே காணலாம்.

| | |
|---|---|
| திரு + நகர் | > திருநகர் (அழகிய வீடு) (மது.216) |
| நல் + ஆசிரியர் | > நல்லாசிரியர் (சிறந்த குரு) (மது.761) |
| பெரு + நீர் | > பெருநீர் (கடல்) (மது.321) |
| நன் + மொழி | > நன்மொழி (புகழ்மொழி) (திரு.268) |
| செம் + கோல் | > செங்கோல் (அறநெறி) (பொரு.230) |
| இன் + இயம் | > இன்னியம் (இசைக்கருவி) (பெரு.56) |
| பெரு + மகன் | > பெருமகன் (சிறந்த மகன்) (பெரு.101) |
| மா + நிலம் | > மாநிலம் (பெரிய நிலபரப்பு) (சிறு.1) |
| பெரிய + இசை | > பேரிசை (பெரிய புகழ்) (சிறு.125) |
| முது + ஊர் | > மூதூர் (பழைய ஊர்) (குறி.236) |
| வெண் + குடை | > வெண்குடை (கொற்றக்குடை) (நெடு.184) |
| பழைய + குடி | > பழங்குடி (பழைய குடிமக்கள்) (மலை.479) |
| மட + மான் | > மடமான் (இளைய மான்) (முல்.99) |
| செம் + வேள் | > செவ்வேள் (முருகன்) (பட்.154) |

இச்சொற்கள் போன்று பல சொற்கள் பத்துப்பாட்டில் ஆக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. திரு, நல், பெரு, மா, செம், இன், முது, வெண் போன்று பல பெயரடைகள் பல்வேறு சொற்களுடன் இணைந்து கூட்டுச்சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. இந்த வாய்ப்பாட்டு அமைப்புமுறை ஆக்கம் என்பது பத்துப்பாட்டில் மிகுந்த விளைவாக்கம் உள்ள ஒன்றாகக் காணப்படுகின்றது. மேலும் இவ்வகையில் ஆக்கம் பெற்ற சொற்கள் பின்னிணைப்பில் அகர நிரலில் கொடுக்கப்பட்டுள்ளன.

### வினை + பெயர் > பெயர்

இருபெயர்ச் சொற்கள் இணைந்து பெயர்ச்சொற்கள் ஆ்ஃகம் பெறுவது போன்று வினைச்சொல்லும் பெயர்ச்சொல்லும் சேர்ந்து பெயர்ச்சொல் ஆக்கம் பெறுவதும் ஒருவகையாக உள்ளதைச் சொல்லாக்கச் சிந்தனையாளர்கள்

குறிப்பிட்டுள்ளதை முன்னரே கண்டோம். பெரும்பாலும் வினைச்சொற்கள் முழுநிலையில் செயல்படாமல் அடிச்சொற்கள் மட்டும் அதாவது, வினையடிகள் மட்டும் பெயர்ச்சொற்களுடன் இணைந்து கூட்டுப் பெயராக்கம் நடைபெறுகின்றன. மரபிலக்கணத்தார் சுட்டும் அறுவகைத் தொகைகளில் வினைத்தொகை இவ்வகையில் இடம்பெறுவது குறிப்பிடத்தக்கது. பத்துப்பாட்டில் இவ்வமைப்பில் சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. அவற்றில் சில சொற்களைச் சான்றாக நோக்கலாம்.

| | |
|---|---|
| அலை + வாய் | > அலைவாய் (திருச்செந்தூர்) (திரு.125) |
| மகிழ் + பதம் | > மகிழ்ப்பதம் (மகிழ்ச்சி தரும் கள்) (பொரு.111) |
| தெவ்வு + புலம் | > தெவ்வுப்புலம் (பகைவர் நாடு) (சிறு.246) |
| தொடு + தோல் | > தொடுதோல் (செருப்பு) (பெரு.169) |
| ஆய் + மகள் | > ஆய்மகள் (இடைச்சி) (முல்.13) |
| மேய் +புலம் | > மேய்ப்புலம் (மேய்ச்சல் நிலம்) (மது.303) |
| அரி + பனி | > அரிப்பனி (கண்ணீர்) (நெடு.164) |
| ஆடு + களம் | > ஆடுகளம் (வெறியாடுமிடம்) (குறி.175) |
| நடு + கல் | > நடுகல் (மறவர்க்கு நடும் கல்) (பட்.79) |
| விரவு + மொழி | > விரவுமொழி (கலப்புமொழி) (மலை.327) |

இச்சொற்கள் அனைத்தும் வினையடிகளுடன் பெயர்ச்சொற்கள் சேர்ந்து ஆக்கம் பெற்றவையாகும். இவற்றைப் போன்று மேலும் பல சொற்கள் பத்துப்பாட்டில் ஆக்கம் பெற்றுள்ளன. இச்சொற்கள் இடம், பொருள், மனிதனைக் குறிக்கும் பெயர், மொழி என்ற தன்மையில் ஆக்கம் பெற்றுள்ளன. பா. வீரப்பன் குறிப்பிடுவது போன்று பெரும்பான்மையான சொற்களைச் சமயத்துடன் தொடர்புபடுத்தி ஆராயின் அவை சமயத்தேவைக்கு ஆக்கம் பெற்றவையாகக் கருத இடமளிக்கிறது. இவ்வகை ஆக்கம் பத்துப்பாட்டில் சற்று விளைவாக்கம் குறைந்த ஒன்றாகக் காணப்படுகிறது. இவ்வகையில் ஆக்கம் பெற்றுள்ள மற்ற சொற்கள் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

**உரிச்சொல் + பெயர் > பெயர்**

பெயரையும் வினையையும் சார்ந்து பயன்பாட்டில் இடம்பெறும் உரிச்சொற்களுடனும் பெயர்ச்சொற்கள் இணைந்து சொல்லாக்கம் நடைபெறுவதைத் தே. ஆனந்டியப்பன் குறிப்பிட்டுள்ளார். இவரின் கருத்துப்படி பத்துப்பாட்டில் உள்ள சொற்களை அணுகும் பொழுது உரிச்சொற்களுடன் பெயர்ச்சொற்கள் இணைந்து சொல்லாக்கம் நிகழ்ந்துள்ளதைக் காணமுடிகின்றது. சான்றாகப் பின்வருவனவற்றைக் கூறலாம்.

| | |
|---|---|
| கழி + முடை | > கழிமுடை (மிக்க முடைநாற்றம்) (திரு.53) |
| நனி + சேய் | > நனிசேய் (மிகுதொலைவு) (மலை.487) |
| உறு + செறுநர் | > உறுசெறுநர் (மிக்க பகைவர்) (மது.152) |
| உறு + துயர் | > உறுதுயர் (பாலுண்ணாமையால் உற்ற துயரம்) (முல்.13) |
| உறு + கண் | > உறுகண் (வருத்தம்) (பெரு.43) |
| உறு + புலி | > உறுபுலி (வலிமைமிக்க புலி) (சிறு.121) |
| உறு + வெயில் | > உறுவெயில் (மிக்க வெயில்) (சிறு.174) |

இச்சொற்களில் முதல் இரண்டு சொற்களான முடை, சேய் ஆகியவை கழி, நனி முதலிய உரிச்சொற்களுடனும் செறுநர், துயர், கண், புலி, வெயில் ஆகிய சொற்கள் 'உறு' என்ற உரிச்சொல்லுடன் இணைந்தும் கூட்டாக்கம் நிகழ்ந்துள்ளன. இம்மூன்று உரிச்சொற்களும் மிகுதிப்பொருள் பற்றி இடம் பெற்றுள்ளன. ஆனால், 'உறுதுயர்', 'உறுகண்' ஆகிய இரண்டு சொற்களிலும் வருத்தம் என்பதை வெளிப்படுத்தும் தன்மையில் 'உறு' இடம்பெற்றுள்ளது எனலாம். இவ்வகை ஆக்கம் விளைவாக்கம் குறைந்த ஒன்றாகக் காணப்படுகிறது.

இருசொல் கூட்டுச் சொல்லாக்கத்தில் பெயர், வினை, பெயரடை, உரிச்சொல் முதலிய சொற்கள் ஒன்றுடன் ஒன்று இணைந்து சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதை அறிந்துகொள்ள முடிகின்றது. பத்துப்பாட்டில் இருசொல் கூட்டாக்கம் அதிக விளைவாக்கம் கொண்டதாகக் காணப்படுகிறது.

### பலசொல் கூட்டுப் பெயராக்கம்

பல்பெயர்த் தொகை என்பது மூன்று முதலாகப் பல சொற்கள் இணைந்து ஒரு பொருள் தரும் சொற்களாக அமைவது ஆகும். இப்பல்பெயர்க் கூட்டு பற்றித் தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்கள் குறிப்பு ஏதும் தரவில்லை எனலாம். எனினும் தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், 'எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய' (தொல்.சொல்.420) என்னும் நூற்பாவிற்கு உரை வகுத்தவிடத்து,

*இருமொழித் தொடரின் கண்ணும் பன்மொழித் தொடரின் கண்ணும் தொக்கு நிற்கும் எல்லாத் தொகைச் சொற்களும் ஒருசொல் நின்று தன்னை முடிக்கும் சொற்களொடு முடியுமாறு போலத் தாமும் தம்மை முடிக்கும் சொற்களொடு முடிதலை உடைய(தொல்.சொல்.420 உரை)*

என்று குறிப்பிடுகின்றார். இங்கு 'எல்லாத் தொகையும்' என்று தொல்காப்பியர் குறிப்பிட்டது அறுவகைபட்ட தொகைச் சொற்களை எனலாம். ஆனால்

நச்சினார்க்கினியர் உரை எழுதும் பொழுது இருசொல் தொகையுடன் பலசொல் தொகையையும் சேர்த்துக் குறிப்பிட்டுள்ளதை மேற்காணும் உரைக்குறிப்பின் மூலம் அறியமுடிகின்றது. இந்தப் பலசொல் கூட்டுகளுக்குத் தொல்காப்பியர் கையாண்டுள்ள 'உயர்சொற்கிளவி', 'இடைசொற்கிளவி', 'உரிசொற்கிளவி' என்பது போன்ற சொற்களை எடுத்துக்காட்டி உரை வகுத்துள்ளதைக் காணமுடிகின்றது. தொல்காப்பியரின் கருத்துவழி நின்று நச்சினார்க்கினியர் பலசொல் கூட்டுக்கான இலக்கணத்தை வருவித்துக் கொண்டார் எனலாம். இவருடன் தெய்வச்சிலையாரும் ஒத்துப்போவதைக் காணமுடிகின்றது. மற்ற தொல்காப்பிய உரையாசிரியர்கள் பலசொல் கூட்டு பற்றிக் குறிப்பிட்டுள்ளதாக அறியமுடியவில்லை என்பார் இ.மறைமலை.

> *நன்னூல் விருத்தியுரைகாரர் தொகைச் சொற்களை ஒரு தொடர்த் தொகைச்சொல் எனவும் பலதொடர்த் தொகைச்சொல் எனவும் இரண்டாகப் பிரித்துப் புலிகொள் யானை, குரங்கெறி விளங்காய் என்பவற்றை மூன்று பொருளான் மயங்கிய பலதொடர்த் தொகைச் சொல்லுக்கு உதாரணமாக நவில்வார்*[10]

என்று தம் ஆய்வில் சுட்டிக் காட்டியுள்ளார். இங்கு நச்சினார்க்கினியர் போன்றே விருத்தியுரைகாரரும் பலசொல் கூட்டுக்கான இலக்கணத்தைக் காலச்சூழலுக்கு ஏற்ப வருவித்துக் கொண்டார் என்றால் அது மிகையாகாது.

மேலும் இப்பல்பெயர்த் தொகைச்சொற்களைப் பற்றி ஆய்வுகள் தனித்துக் குறிப்பிடும்படியாக வெளிவரவில்லை என இ. மறைமலை கூறுவதைக் கவனத்தில் கொள்ளவேண்டும்.

> *பழந்தமிழ் இலக்கியங்களில் பலதொடர்த் தொகைச் சொல் அல்லது பல்பெயர்த் தொகைச்சொல் மிகுதியும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவற்றுள் சிலவற்றைத் தொகுத்துப் பல்பெயர்த் தொகைச் சொற்களைப் பற்றிய தமது கருத்தை டாக்டர் தே. ஆண்டியப்பன் எடுத்து விளக்கியுள்ளார்*[11]

என்று இ. மறைமலை அவர்கள் சுட்டுவதன் மூலம் பழந்தமிழ் இலக்கியங்களான எட்டுத்தொகை பத்துப்பாட்டு ஆகியவற்றில் பலசொல் சேர்க்கையால் மிகுதியான சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன என்பதை அறியமுடிகின்றது. இக்கருத்தின் துணைகொண்டு நோக்கும் பொழுது அ. லெட்சுமணன், பா. வீரப்பன் போன்றோர் தம் ஆய்வின் ஒரு பகுதியாக பலசொல் கூட்டுகள் பற்றி ஆராய்ந்துள்ளனர் என்பதைக் காணமுடிகிறது. இவர்களில் அ. லெட்சுமணன்

எட்டுத்தொகை பத்துப்பாட்டு ஆகியவற்றில் நிகழ்ந்துள்ள கூட்டுச்சொற்கள் பற்றியும் பா. வீரப்பன் பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள கூட்டுச்சொற்கள் சிலவற்றைத் தொகுத்தும் ஆராய்ந்துள்ளனர். பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள கூட்டுச் சொல்லாக்கத்தை ஆராயும் நோக்கத்தில் பா. வீரப்பன் தம் ஆய்வை நிகழ்த்தவில்லை. ஏனெனில் அவர் பத்துப்பாட்டு நடையியலை ஆய்வுப் பொருளாக் கொண்டு ஆராய்ந்துள்ளார். எனவே தான் சான்று காட்டும் போக்கில் கூட்டுச்சொற்கள் சிலவற்றைத் தொகுத்து நடையியலின் தன்மையை விளக்கியுள்ளார்.

இக்கருத்துகளின் அடிப்படையில் பத்துப்பாட்டில் உள்ள சொற்களை வகை தொகைபடுத்தி ஆராயும் பொழுது பலசொற்கள் பலசொல் கூட்டு என்னும் அமைப்பில் உருவாக்கம் பெற்றுள்ளன என்பதை அறியமுடிகின்றது. இந்தப் பலசொல் கூட்டு என்பது பெயர்ச்சொற்கள், வினைச்சொற்கள், பெயரடைகள் ஆகியவற்றின் சேர்க்கையிலும் சில இடங்களில் பலசொல் கூட்டின் இறுதியில் விகுதிகள் இணைந்தும் ஆக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

பலசொல் கூட்டாக்கம் நிகழ்ந்துள்ளதை அ. லெட்சுமணன் அவர்கள் மூன்று நிலைகளில் பகுத்துக் கூறியுள்ளார். அதாவது முச்சொல் கூட்டு, நான்கு சொல் கூட்டு, ஐந்து சொல் (தொடர்க்) கூட்டு எனப் பிரித்து விளக்கியுள்ளார். இவரின் கருத்தைத் துணைகொண்டும் சொல்லாக்கச் சிந்தனையாளர்களின் கருத்தின் துணையுடனும் பத்துப்பாட்டில் உள்ள சொற்களைத் தொகுத்து அணுகும் பொழுது பலசொல் கூட்டாக்கத்தில் 'முச்சொல் கூட்டு', 'நான்கு சொல் கூட்டு' ஆகிய இருவகை ஆக்கம் உள்ளதைக் காணமுடிகின்றது. ஆனால் பலசொல் கூட்டாக்கத்தில் முச்சொல் கூட்டே அதிக விளைவாக்கம் கொண்டதாகப் பத்துப்பாட்டில் காணமுடிகிறது.

பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள பலசொல் கூட்டுச்சொற்களைத் தொகுத்து ஆராயும் பொழுது பின்வரும் வாய்ப்பாட்டு அமைப்புகளில் சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

**மூன்றுசொல் கூட்டு வாய்ப்பாடு**

பெயர் + பெயர் + பெயர் > பெயர்
பெயரடை + பெயர் +பெயர் > பெயர்
பெயரடை + பெயரடை +பெயர் > பெயர்

பெயர் + பெயரடை + பெயர் > பெயர்
பெயர் + வினை + பெயர் > பெயர்
வினை + பெயர் + பெயர் > பெயர்

**நான்கு சொல் கூட்டு வாய்ப்பாடு**

பெயரடை + பெயர் + பெயரடை + பெயர் > பெயர்
பெயர் + வினை + பெயரடை + பெயர் > பெயர்
பெயர் + பெயர் + பெயரடை + பெயர் > பெயர்
பெயர் + பெயர் + வினை + பெயர் > பெயர்

இவ்விரு முறைகளிலும் மூன்றுசொல் கூட்டு ஆறுவகையான வாய்ப்பாட்டு அமைப்புகளிலும் நான்குசொல் கூட்டு நான்கு வகையான வாய்ப்பாட்டு அமைப்புகளிலும் நிகழ்ந்துள்ளன. நான்கு சொற்களுக்கு மேல் இணைவது தொடர்போன்று காணப்படும் என்பதால் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப் படவில்லை. இந்த வாய்ப்பாடுகளின் வரிசையில் பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள பலசொல் கூட்டாக்கத்தைப் பின்வரும் தன்மையில் நோக்கலாம்.

பலசொல் கூட்டாக்கத்தில் பெயர்ச்சொற்கள் ஆக்கப்படுவதை முன்னர்க் கண்ட இரு வாய்ப்பாட்டுத் தன்மையில் மூன்று தனிச்சொற்கள் சேர்ந்து ஒருசொல் ஆக்கப்படுவது முச்சொல் கூட்டு என வழங்கப்படுகிறது. முச்சொல் கூட்டுவழியில் ஆக்கம் பெற்ற சொற்கள் வாய்ப்பாடுகளின் தன்மையில் ஆராயப்பட்டுள்ளன.

## பெயர் + பெயர் + பெயர் > பெயர்

தனிச்சொற்களாக உள்ள மூன்று பெயர்கள் இணைந்து ஒருசொல் தன்மையில் ஆக்கம் பெறுவதைப் பத்துப்பாட்டில் காணமுடிகிறது. அவை,

மான் + தோல் + பள்ளி > மான்தோற்பள்ளி (படுக்கை) (பெரு.89)
நான்கு + முகம் + ஒருவன் > நான்முகஒருவன் (பிரமன்) (பெரு.403)
ஏழு + நிலை + மாடம் > எழுநிலைமாடம் (மாளிகை) (முல்.86)
பூ + தலை + குந்தம் > பூந்தலைகுந்தம் (எறிவேல்) (முல்.41)
பூ + தொடி + மகளிர் > பூந்தொடிமகளிர் (பெண்கள்) (குறி.224)

என்பன. இச்சொற்கள் அனைத்தும் தனிப்பெயர்கள் மூன்று இணைந்து ஆக்கம் பெற்றவையாகும். இவற்றில் இறுதியாக உள்ள 'பூந்தொடிமகளிர்' என்பதில் 'மகளிர்' என்ற பெயர்ச்சொல்லில் 'இர்' இணைந்து காணப்படுகிறது. இந்த அடிப்படையில் நோக்கும் பொழுது பூந்தொடிமகளிர் என்பது மூன்று

தனிச்சொற்கள் மற்றும் ஒரு விகுதி இணைந்து ஆக்கம் பெற்றுள்ளது எனலாம். இச்சொற்கள் மூன்று தனிச்சொற்களின் சேர்க்கை என்ற போதிலும் ஒரு பொருளைக் குறிப்பாகச் சுட்டுவதை அறியலாம். இந்த வாய்ப்பாட்டு அமைப்புமுறை ஆக்கம் விளைவாக்கம் குறைந்த ஒன்றாகக் காணப்படுகிறது.

### பெயரடை + பெயர் + பெயர் > பெயர்

ஒரு பெயரடையும் இரு பெயர்சொற்களும் இணைந்து ஆக்கம் பெறுவது இவ்வகை ஆக்கமாகும். இவ்வமைப்பில் பத்துப்பாட்டில் ஆக்கம் பெற்றுள்ள சொற்களைக் கீழே காணலாம்.

பொறி+மயிர்+வாரணம் > பொறிமயிர்வாரணம் (கோழிச்சேவல்) (மது.673)
குறு+நிலம்+மன்னர் > குறுநிலமன்னர் (சிற்றரசர்) (மது.776)
செம்+வேல்+சேஎய் > செவ்வேல்சேஎய் (முருகன்) (திரு.61)
முன்+நீர்+வண்ணன் > முந்நீர்வண்ணன் (திருமால்) (பெரு.30)
செம்+வரி+கயல் > செவ்வரிகயல் (மீன்) (பெரு.270)
பல்+இயம்+கோடியர் > பல்லியக்கோடியர் (இசைக்கலைஞர்) (சிறு.125)
குறு+நீர்+கன்னல் > குறுநீர்க்கன்னல் (நாழிகை வட்டில்) (முல்.58)
இரும்+கோ+வேள் > இருங்கோவேள் (வேந்தன்) (பட்.282)
செம்+கேழ்+வட்டம் > செங்கேழ்வட்டம் (விசிறி) (நெடு.58)
செம்+கால்+சேவல் > செங்காற்சேவல் (ஆண்புறா) (நெடு.45)

இவை போன்று 25க்கும் மேற்பட்ட சொற்கள் பத்துப்பாட்டில் ஆக்கம் பெற்றுள்ளன. மேற்காணும் சொற்கள் சான்றுகாட்டும் தன்மையில் வழங்கப்பட்டுள்ளன. இவ்வகையில் ஆக்கம்பெற்றுள்ள மற்ற சொற்கள் அனைத்தும் பின்னிணைப்பில் அகரநிரலில் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த வகை ஆக்கம் விளைவாக்கம் கொண்டதாகக் காணப்படுகிறது.

### பெயரடை + பெயரடை + பெயர் > பெயர்

இவ்வகை ஆக்கத்தில் ஒரு பெயர்ச்சொல்லின் தன்மையைச் சுட்டும் வகையில் இரு பெயரடைகளும் ஒரு பெயர்ச்சொல்லும் இணைந்து ஒருசொல் நீர்மைத்தாய் ஆக்கம் பெறுகின்றன. இந்த வாய்ப்பாட்டு அமைப்பு முறையில் பத்துப்பாட்டில் உள்ள சொற்களைத் தொகுத்து ஆராயும் பொழுது பத்துக்கும் மேற்பட்ட சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. சான்றுகளாகச் சிலவற்றைக் கீழே காணலாம்.

தொல்+முது+கடவுள் > தொன்முதுகடவுள் (இறைவன்) (மது.41)
முது+வெள்+இலை > முதுவெள்ளிலை (ஓர் ஊர்) (மது.119)

பெரிய+இளம்+பெண்டிர் > பேரிளம்பெண்டிர் (எழுவகைப் பருவ மங்கையருள் ஒருவகையினர்) (மது.465)
தொல்+மா+இலங்கை > தொன்மாவிலங்கை (பழைய இலங்கை) (சிறு.119)
நல்+மா+இலங்கை > நன்மாஇலங்கை (ஒரு நகரம்) (சிறு.120)
திரு+மா+வளவன் > திருமாவளவன் (சோழமன்னன்) (பட்.299)

இச்சொற்களும் இவை போன்றவையும் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள முச்சொல் கூட்டாக்கச் சொற்களாகும். இவற்றில் 'பேரிளம்பெண்டிர்' என்பதில் உள்ள 'பெண்டிர்' என்ற பெயர் மட்டும் 'இர்' விகுதி பெற்று ஆக்கம் பெற்ற சொல்லாகும். இ. மறைமலை அவர்களின் சிந்தனையில் நோக்கும் பொழுது இரு தனிச்சொற்களும் ஒரு ஒட்டுவழிச்சொல்லும் இணைந்த பெயராக்கமாக இதைக் கருதலாம். இவ்வகையில் மதுரைக்காஞ்சியில் மிகுதியான சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. மற்ற நெடும்பாட்டுகளில் குறிப்பிடும்படியான எண்ணிக்கையில் ஆக்கம் பெறவில்லை எனலாம். இதுவும் சற்று குறைந்த விளைவாக்கம் கொண்ட வாய்ப்பாட்டு அமைப்பு முறையாகப் பத்துப் பாட்டில் பயின்றுள்ளது.

### பெயர் + பெயரடை +பெயர் > பெயர்

இரண்டு பெயர்ச்சொற்களுக்கு இடையில் ஒரு பெயரடை இடம்பெற்று முச்சொல் கூட்டாக இணைவது இவ்வகையாகும். பத்துப்பாட்டில் உள்ள முச்சொல் கூட்டுகளைத் தொகுத்து ஆராயுமிடத்து சில இடங்களில் மட்டும் இவ்வகை ஆக்கம் நிகழ்ந்துள்ளதைக் காணமுடிகிறது. சான்றாக,

வடபெருங்கல் (மேருமலை) (மது.70)

என்ற ஒருசொல் மட்டும் வடதிசையில் உள்ள பெரிய மேருமலையைக் குறிப்பதாக மதுரைக்காஞ்சியில் இடம்பெற்றுள்ளது. மற்ற நெடும் பாட்டுகளில் இவ்வாய்ப்பாட்டு அமைப்பு முறையில் சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதாக அறியமுடியவில்லை.

### பெயர் + வினை + பெயர் > பெயர்

இரண்டு பெயர்ச்சொற்களுக்கு இடையில் ஒரு வினைச்சொல் இடம்பெற்று சொற்கள் ஆக்கம் பெறுவது முச்சொல் கூட்டுகளில் ஒன்றாக உள்ளது. பெயர்ச்சொற்களுக்கு இடையில் வினைச்சொல் இடம்பெறினும் அது பெயர்ச்சொல்லாக ஆக்கம் பெறுவது குறிப்பிடத்தக்கது. இவ்வகையில் பத்துப்பாட்டில் 15க்கும் மேற்பட்ட சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. சான்றாகச் சில சொற்களைக் காணலாம்.

பழம்+முதிர்+சோலை > பழமுதிர்சோலை (திருத்தலம்) (திரு.317)
மயிர்+குறை+கருவி > மயிர்குறைகருவி (கத்திரிக்கோல்) (பொரு.29)
அடி+புதை+அரணம் > அடிபுதையரணம் (செருப்பு) (பெரு.69)
ஆல்+அமர்+செல்வன் > ஆலமர்செல்வன் (சிவன்) (சிறு.97)
நூல்+அறி+புலவர் > நூலறிபுலவர் (கற்றுதேர்ந்த அறிஞர்) (நெடு.76)
புலம்+பெயர்+மாக்கள் > புலம்பெயர்மாக்கள் (தம் நாடு விட்டு அயலகம் செல்பவர்) (பட்.277)
அறம்+கூறு+அவையம் > அறங்கூறவையம் (நீதி போதிக்கும் இடம்) (மது.492)

இச்சொற்களும் இவை போன்றவையும் இவ்வாய்ப்பாட்டு அமைப்பில் உருவாக்கம் பெற்ற சொற்களுக்குச் சான்றுகளாகச் சுட்டலாம். இச்சொற்கள் பல்வேறு பொருண்மைகள் சார்ந்து ஆக்கம் பெற்றுள்ளதைப் மேலுள்ள பொருள்களை உற்றுநோக்கும் பொழுது அறிந்துகொள்ள முடிகின்றது.

**வினை + பெயர் + பெயர் > பெயர்**

ஒரு வினையடியுடன் இரண்டு பெயர்ச்சொற்கள் இணைந்து ஒரு பெயர்ச்சொல் ஆக்கம் பெறுவதை இவ்வாய்ப்பாடு விளக்குகிறது. இந்த வாய்ப்பாட்டு அமைப்பு அடிப்படையில் பத்துப்பாட்டில் உள்ள சொற்களைத் தொகுத்து நோக்கும் பொழுது ஒரு சில சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

தொடு+தோல்+அடியர் > தொடுதோலடியர் (செருப்பு அணிந்தவர்) பட்.265)
அழு+குரல்+கூகை > அழுகுரற்கூகை (ஆந்தை) (பட்.258)
உயர்+நிலை+இதணம் > உயர்நிலைஇதணம் (பரண்) (மலை.204)
உயர்+நிலை+உலகம் > உயர்நிலையுலகம் (வீட்டுலகம்) (மது.179,471)

இச்சொற்களை மேற்காணும் வாய்ப்பாட்டு அமைப்பு முறைக்குச் சான்றாகச் சுட்டலாம். இவ்வகை ஆக்கம் வினைத்தொகையுடன் ஒரு பெயர்ச்சொல் சேர்ந்து ஆக்கம் பெறுவதாகவும் கருத இடமளிக்கிறது. இதைத் 'தொகைச்சொல் + தனிச்சொல்' என்னும் வாய்ப்பாட்டு அமைப்பு முறையில் இ.மறைமலை அடக்குவார். இவ்வகை ஆக்கமும் குறிப்பிடும்படியான எண்ணிக்கையில் நடை பெறவில்லை.

மூன்றுசொல் கூட்டுகள் பற்றிப் பத்துப்பாட்டில் ஆராய்ந்து நோக்கிய விடத்து ஒரு பெயரடையும் இரண்டு பெயர்களும் இணைந்து ஒரு பெயர்ச் சொல் ஆக்கம் பெறுதல் விளைவாக்கம் கொண்ட ஒன்றாக விளங்குகிறது.

அடுத்த நிலையில் இரு பெயர்களுக்கு இடையில் ஒரு வினைச்சொல் இடம் பெற்று ஒரு பெயர்ச்சொல் ஆக்கம் பெறுவது விளைவாக்கம் கொண்டுள்ளது. மற்ற வாய்ப்பாட்டு அமைப்பு முறைகள் அதிக விளைவாக்கம் கொண்டவையாகக் காணப்படவில்லை.

மூன்றுசொல் கூட்டாக்கம் பத்துப்பாட்டில் பரவலாகக் காணப்படுவதை அறிந்து கொண்டதன் மூலம் பத்துப்பாட்டுப் புலவர்களின் மொழிப்புலமை யையும் சொல்லாக்கத் திறத்தையும் உணர்ந்து கொள்ளமுடிகிறது. பத்துப் பாட்டில் முச்சொல் கூட்டுகள் பெயர், வினை, பெயரடை ஆகிய மூன்று சொற்களும் மாறி மாறி இணைவதன் மூலம் நடைபெற்றுள்ளதைக் காண முடிகிறது. அடுத்து நான்கு சொற்கள் இணைந்து சொல்லாக்கம் நிகழும் தன்மை ஆராயப்படுகிறது.

பத்துப்பாட்டில் நான்கு தனிச்சொற்கள் இணைந்து ஒரு சொல் ஆக்கம் பெறும் உத்தி குறிப்பிடத்தக்க அளவு நிகழவில்லை. எனினும் சில சொற்கள் மட்டும் ஆக்கம் பெற்றுள்ளன. பத்துப்பாட்டில் பத்துக்கும் மேற்பட்ட சொற்கள் இவ்வகையில் ஆக்கம் பெற்றுள்ளதை அறியமுடிகிறது. பத்துப் பாட்டில் நான்கு வகையான வாய்ப்பாடுகளின் அடிப்படையில் நான்கு சொல் கூட்டு நிகழ்வது பற்றி முன்னரே வகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளது. அவற்றின் படி கீழே காணலாம்.

### பெயரடை + பெயர் + பெயரடை + பெயர் > பெயர்

பெயரடையும் பெயரும் முறையே இரண்டு முறை அடுக்கி வந்து சொற்கள் ஆக்கம் பெறுகின்றன. இவை நான்கு தனிச்சொற்களாக இருப்பினும் ஒருசொல் போல் பயன்படுத்தபடுவதால் இங்குத் தொகுத்து ஆராயப் பட்டுள்ளன. பத்துப்பாட்டில் சில சொற்கள் இவ்வாய்ப்பாட்டு அமைப்பில் இடம்பெற்றுள்ளன. சான்றாக,

> தொல்+ஆணை+நல்+ஆசிரியர் > தொல்லாணைநல்லாசிரியர் (சமயக் கணக்கர்) (பட்.170)
>
> பல்+சாலை+முது+குடிமி > பல்சாலைமுதுகுடிமி (மன்னின் பெயர்) (மது.759)
>
> பல்+வரி+கொடும்+சிறை > பல்வரிகொடுஞ்சிறை (கருடன்) (திரு.150)

ஆகிய மூன்று சொற்களைச் சுட்டிக் காட்டலாம். இவை முறையே சமயக் கணக்கர், மன்னின் பெயர், கருடன் ஆகிய பொருள்களைக் குறிக்கும் சொற்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**பெயர் + வினை + பெயரடை + பெயர் > பெயர்**

இவ்வாய்ப்பாட்டு அமைப்பில் பத்துப்பாட்டில் பெரும்பாணாற்றுப் படையில் ஒருசொல் ஆக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது. அதைச் சான்றாக நோக்கலாம்.

பொன்+துஞ்சு+வியன்+நகர் > பொன்துஞ்சு வியன்நகர் (கோயில்)
(பெரு.440)

கோயில் என்ற பொருளைக் குறிக்க கடியலூர் உருத்திரங்கண்ணனார் நான்கு சொற்களைச் சேர்த்து ஒரு கூட்டுச்சொல்லைக் கையாண்டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**பெயர் +பெயர் +பெயரடை + பெயர் > பெயர்**

மூன்று+புரி+நுண்+ஞாண் > மூன்றுபுரிநுண்ஞாண் (பூணூல்) (திரு.183)

**பெயர் + பெயர் + வினை + பெயர் > பெயர்**

வாள்+தோள்+கோத்த+காளை> வாள்தோள்கோத்தகாளை (ஏவலன்)
(நெடு.182)

இந்த இரு வாய்ப்பாட்டு அமைப்பு முறைகளில் இருசொற்கள் பத்துப்பாட்டில் ஆக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது. மேற்காணும் இருசொற்களும் இவ் வாய்ப்பாட்டு அமைப்பிற்குச் சான்றுகளாகும். இவை முறையே பூணூல், ஏவலன் ஆகிய பொருள்களைக் குறிக்க ஆக்கம் பெற்றுள்ளன.

பத்துப்பாட்டின் நடையியலை ஆராய்ந்த பா. வீரப்பன் அவர்கள் கூட்டுச் சொற்களின் முக்கியத்துவத்தையும் உருவாக்கம் பெறும் தன்மையினையும் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

> *கூட்டுச்சொற்கள் உண்டாகும் பொழுது சேருகின்ற சொற்கள் விகுதிகள்/ வேற்றுமை உருபுகளை இழந்து சேருகின்றன. இவை விரித்துப் பொருள் கொள்ளப்படும் போது சிறப்பான பொருளைத் தந்து நிற்கின்றன. இவ்வகையில் கூட்டுச்சொற்கள் கவிதையில் கருத்துச் செறிவுக்குக் காரணமாக அமைகின்றன*[12]

என்று குறிப்பிடுகின்றார். இதன் மூலம் செய்யுள் உருவாக்கத்தில் கூட்டுச் சொற்களின் முக்கியத்துவத்தையும் பயன்பாட்டையும் உணர்ந்துகொள்ள முடிகின்றன.

மேலும் இவ்வாறு ஆக்கம் பெறும் சொற்கள் இசைமைக்காகவும் குறிப்பட்ட சூழலைக் கற்பவர் மனதில் ஏற்படுத்தவும் பயன்படுத்தப்படுகின்றன[13] என்றும்

புதுச் சொல்லாக்கத்திற்கு வழி வகுத்த கூட்டுச்சொற்கள் பெரும்பாலும் சமயத் தேவைகளை நிறைவு செய்யும் போக்கில் அமைவதைக் கடவுட்கடன் (பொரு.52), கடவுட்பள்ளி (மது.467), தவப்பள்ளி (பட்.54) போன்ற சொற்கள் காட்டுகின்றன[14] என்றும் குறிப்பிடுகின்றார். ஆனால் இவர் கருத்து முற்றிலும் ஏற்புடையதாக இல்லை எனலாம். பல நிலைகளில் பொருள்தரும் சொற்களாக ஆக்கம் பெற்றுள்ள சொற்களில் 50% சொற்கள் வேண்டுமானால் சமயச் சார்புடையவை என்று ஏற்றுக்கொள்ளலாம். மற்றவை பலவகையான பொருண்மைகளில் ஆக்கம் பெற்றுள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது. இதுபோன்ற தன்மைகளில் பத்துப்பாட்டில் கூட்டுப் பெயராக்கம் பயன்பட்டுள்ளதை அறியமுடிகிறது. பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள இக்கூட்டுச்சொல் அமைப்புகள் தற்காலத்தில் தேவைக்கு ஏற்ப சொற்களை ஆக்கிக்கொள்ளப் பயன்படுவதையும் தற்காலச் சொல்லாக்கத்திற்கு மூலமாக விளங்குவதையும் அறியமுடிகிறது.

**கூட்டு வினைச்சொல்லாக்கம்**

சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் அனைவருமே பெரும்பான்மையும் பெயர்ச்சொல்லாக்கம் பற்றியும் மிகக் குறைவாக வினையாக்கம் பற்றியும் சிந்தித்துள்ளனர் எனலாம். இருப்பினும் மொழியியல் அறிஞரான ச. அகத்தியலிங்கம் அவர்கள் சொல்லாக்கம் பற்றியும் சிந்தித்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. இவர் கூட்டு வினைகள் ஆக்கம் பெறுவது பற்றி மிக விரிவாக ஆராய்ந்துள்ளார். அவ்வாறு ஆராயுமிடத்து கூட்டு வினைகள் ஆக்கம் பெறுவது பற்றி,

> *வினைகளாகக் கடன் பெறுவதுடன் மட்டுமன்றிப் பலவேறு பெயர்களுடனும் பொருத்தமான சில வினைகளை இணைத்துப் புதிய புதிய வினைகளை உருவாக்குகிறோம். இவற்றில் காணப்படும் பெயர்கள் தமிழ்ச் சொற்களாக மட்டுமின்றிப் பிறமொழிச் சொற்களாகவும் உள்ளன. ஆனால் அவற்றுடன் வரும் வினைச்சொற்கள் அனைத்துமே தமிழ்ச்சொற்கள். பெயர் சொற்களிலும் பலவேறு வகைப் பெயர்களைக் காணலாம். இவ்வாறு வரும் வினைச்சொற்களைக் கூட்டுவினைச் சொற்கள் (compound verb) என்று கூறலாம்*[15]

என்று குறிப்பிடுகின்றார். மேலும் இக்கருத்தின் வழி, பிறமொழிச் சொற்களில் வினைகள் கடன் பெறுவதும் கூட்டுவினைகளில் வரும் வினைகள் தமிழுக்கே உரியது என்றும் குறிப்பிடுவதை உணர்ந்துகொள்ள முடிகிறது. சான்றுகளாக

வெட்கப்படு, துன்பப்படு, மணம்செய் என்பது போன்ற கூட்டுவினைச் சொற்களை எடுத்துக்காட்டியுள்ளார்.

கூட்டு வினையாக்கம் நிகழும் தன்மையினை வாய்ப்பாட்டு அமைப்பின் வழி விளக்கியுள்ளார்.[16] அவ்வாய்ப்பாடுகளைக் கீழே காணலாம்.

| | |
|---|---|
| பெயர் + வினை | > வினை (ஆசைப்படு) |
| வினை + வினை | > வினை (காத்திரு) |
| இடைச்சொல் + வினை | > வினை (முன்னேறு) |
| ஒலிக்குறிப்புச் சொல் + வினை | > வனை (படபடத்தது) |

ஆகிய நான்கு வாய்ப்பாட்டு அமைப்பு நிலைகளில் கூட்டுவினைகள் ஆக்கம் பெறும் என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும் கூட்டு வினையாக்கம் குறித்துப் பொற்கோ, வே. சீதாலட்சுமி, இ. மறைமலை, சு. சக்திவேல், ச. இராசேந்திரன், எச். சித்திரபுத்திரன், பழ. முத்து வீரப்பன் போன்றோர் விளக்கியுள்ள செய்திகள் முன்னரே சுட்டப் பட்டுள்ளதை நினைவில் கொண்டு பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள கூட்டு வினையாக்கச் சொற்கள் தொகுத்து ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள கூட்டு வினைச்சொற்களைத் தொகுத்து நோக்கும் பொழுது நான்கு வகையான வாய்ப்பாட்டு அமைப்புகளில் கூட்டு வினைகள் ஆக்கம் பெற்றுள்ளதை அறியமுடிகிறது. அதாவது,

| | |
|---|---|
| பெயர் + வினை | > வினை |
| வினை + வினை | > வினை |
| பெயர் + இடைச்சொல் + வினை | > வினை |
| பெயர் + பெயர் + வினை | > வினை |

ஆகிய அமைப்புகளில் வினைச்சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. இதில் முதல் இரண்டு வாய்ப்பாட்டு அமைப்புகளும் இருசொல் கூட்டு வினையாக்கம் என்ற தன்மையிலும் இறுதியில் உள்ள இரண்டும் பலசொல் கூட்டு வினையாக்கம் என்ற தன்மையிலும் அமைந்துள்ளதைக் காணலாம். இவ்வாய்ப்பாடுகளின் அமைப்பில் சான்று காட்டும் நோக்கில் சில சொற்களை எடுத்துக்காட்டமுடிகிறது.

### இருசொல் கூட்டுவினையாக்கம்

கூட்டு வினையாக்கத்தை இருவகையாகப் பகுத்துக் காணமுடிகிறது. அவை இருசொல் கூட்டுவினை, பலசொல் கூட்டுவினை என்பன. முதலில் இருசொல் கூட்டு வினைகள் பற்றி ஆராயப்படுகிறது.

**பெயர் + வினை > வினை**

பண்+அமைத்து > பண்ணமைத்து (பண்கள் பிறக்கச்செய்தல்) (மலை.2)
புலம்+பெயர் > புலம்பெயர் (இடம் மாறுதல்) (மலை.392)
கொள்ளை+சாற்றி > கொள்ளைசாற்றி (விலை கூறுதல்) (பெரு.64)
கள்+ அடு > கள்ளடு (கள் சமைத்தல்) (பெரு.331)
கடை+அடைத்து > கடையடைத்து (வாயிலை மூடுதல்) (சிறு.138)
பதன்+அறிந்து > பதனறிந்து (காலமறிந்து) (பொரு.62)
கை+எறிந்து > கையெறிந்து (கையைத் தட்டிவிடுதல்) (மது.419)
குடி+அகற்றி > குடியகற்றி (குடிகளைப் பெருக்குதல்) (மது.766)
களம்+படுத்த > களம்படுத்த (போர்க்களத்தில் கொன்று வீழ்த்தல்) (நெடு.171)
கை+தொழுது > கைதொழுது (கைகளைக் குவித்துத் தொழுதல்) (குறி.209)
வளம்+பெருக்கி > வளம்பெருக்கி (செல்வத்தைப் பெருக்குதல்) (பட்.284)

இச்சொற்களும் இவை போன்று ஆக்கம் பெற்ற சொற்களும் பெயர்ச் சொற்களுடன் வினைச்சொற்கள் இணைந்து ஆக்கம் பெறும் இருசொல் கூட்டு வினையாக்கத்திற்குச் சான்றுகளாக அமைகின்றன. பத்துப்பாட்டில் வினையாக்கம் குறைவாக நிகழ்ந்துள்ள போதிலும் பெயரும் வினையும் இணைந்து ஆக்கம் பெறும் வாய்ப்பாட்டு அமைப்பு வினைகள் விளைவாக்கம் கொண்டவையாகக் காணப்படுகிறது. மேலும் இவ்வமைப்பில் ஆக்கம் பெற்றுள்ள சொற்கள் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

**வினை + வினை > வினை**

இரண்டு தனிவினைகள் இணைந்து கூட்டுவினைகளாக வடிவமாற்றம் பெறுகின்றன. இந்த வாய்ப்பாட்டு அமைப்பில் இரு வினைகள் இணைந்து வருவதில் ஒன்று 'துணைவினை' என்று வழங்கப்படுகிறது. பத்துப்பாட்டில் இவ்வாய்ப்பாட்டு அமைப்பில் சில சொற்களைச் சான்று நோக்கில் காட்டப்பட்டுள்ளன.

பார்த்திருக்கும் (எதிர்நோக்கி இருத்தல்) (பெரு.110)
காத்திருக்கும் (காவல் செய்து இருத்தல்) (பெரு.273)
ஓடியாடவும் (ஓடி விளையாடுதல்) (பட்.295)

இச்சொற்கள் மூன்றும் இருசொல் கூட்டு வினையாக்கத்திற்குச் சான்றாக

அமைகின்றன. இந்த வடிவ ஆக்கம் விளைவாக்கம் இல்லா ஒன்றாகக் காணப்படுகிறது.

### பலசொல் கூட்டு வினையாக்கம்

பல சொற்கள் இணைந்து கூட்டு வினைகள் ஆக்கப்படுகின்றன. ஆனால் இது விளைவாக்கம் இல்லா ஒன்றாக விளங்குகிறது. பத்துப்பாட்டில் இவ்வகையில் இரு வினைகள் ஆக்கம் பெற்றுள்ளன. அவை பெயர் + பெயர் + வினை > வினை, பெயர் + இடைச்சொல் + வினை > வினை என்ற இரு வாய்ப்பாட்டு அமைப்புகளில் காணப்படுகின்றன.

நெஞ்சாற்றுப்படுத்த (முல்.81)
நூழிலாட்டி (மலை.87)

இச்சொற்கள் முறையே நெஞ்சைப் போகிற வழியிலே போகவிடுதல், கொன்று குவித்தல் என்னும் பொருள்களில் ஆக்கம் பெற்றுள்ளன. பலசொல் கூட்டுவினையாக்கத்தில் பத்துப்பாட்டில் மூன்றுசொல் கூட்டு வினைகளே இடம்பெற்றுள்ளன எனலாம். நான்கு சொற்கள் இணைந்து கூட்டு வினையாக்கம் நடைபெற்றதாக அறியமுடியவில்லை.

பத்துப்பாட்டில் கூட்டுச் சொல்லாக்கம் இருபிரிவுகளில் நடைபெற்றுள்ளது. அவை, கூட்டுப் பெயராக்கம், கூட்டு வினையாக்கம் என்பனவாம். இவற்றையும் இருசொல் கூட்டு, பலசொல் கூட்டு என்னும் தன்மையில் பகுத்துக் காணமுடிகிறது. தற்காலத்தில் காணப்படும் கூட்டுச் சொல்லாக்கச் சிந்தனைகளைப் பத்துப்பாட்டில் ஒப்புநோக்கி ஆராயும் பொழுது பல கூட்டாக்க அமைப்புகள் இடம்பெற்றுள்ளதை அறிய முடிகின்றது. அக்கூட்டாக்க அமைப்புகள் அனைத்தும் தற்காலத்தில் உள்ள சொல்லாக்கச் சிந்தனைகளுக்கு அடிப்படையாக அமைந்துள்ளன என்பதை உணர்ந்துகொள்ள முடிகின்றது.

### தொகுப்புரை

- சொல்லாக்க உத்திகள் பலவற்றில் கூட்டுச்சொற்கள் உருவாக்குவதும் ஒன்றாகும்.
- கூட்டுச் சொல்லாக்கத்திற்கு அடிப்படையாக மரபிலக்கணங்களில் உள்ள தொகை வகைகள் காணப்படுகின்றன.
- கூட்டுச் சொல்லாக்கத்தை இருசொல் கூட்டாக்கம், பலசொல் கூட்டாக்கம் என இருவகையாகப் பகுத்துக் காணமுடிகிறது.

- இருசொல் கூட்டாக்கம் மரபிலக்கணங்களில் காணப்படும் தொகையாக்கத்தின் தன்மையில் உள்ளது.
- பலசொல் கூட்டாக்கம் பற்றி மரபிலக்கணங்கள் வரையறை ஏதும் கூறவில்லை. ஆனால் தொல்காப்பிய உரையில் நச்சினார்க்கினியர் பலசொல் கூட்டாக்கம் பற்றி விளக்கமளித்துள்ளார்.
- சொல்லாக்கச் சிந்தனையாளர்களிடம் கூட்டுச்சொல்லாக்கம் பரவலாகக் காணப்படுவதை அறியமுடிகிறது.
- கூட்டுச் சொல்லாக்கம் பற்றிப் புதுமையான நோக்கில் எச். சித்திரபுத்திரன் குறிப்பிட்டுள்ளதைக் காணமுடிகிறது.
- பத்துப்பாட்டில் கூட்டுச்சொற்கள் பற்றிப் பா. வீரப்பன் தம் ஆய்வின் ஒரு பகுதியாக ஆராய்ந்துள்ளது குறிப்பிடத்தக்கது.
- அ. லெட்சுமணன் சங்க இலக்கிய கூட்டுச்சொற்கள் என்னும் கட்டுரையில் சான்று காட்டும் நோக்கில் கூட்டுச்சொற்களை ஆராய்ந்துள்ளார்.
- பத்துப்பாட்டில் இருசொல் கூட்டாக்கம் மிகுதியாகவும் பலசொல் கூட்டாக்கம் குறைவாகவும் நிகழ்ந்துள்ளன.
- இருசொல் கூட்டாக்கத்தில் இருபெயர் இணைதல், பெயரடையும் பெயரும் சேர்தல் என்னும் அமைப்பில் மிகுதியான சொற்கள் பத்துப்பாட்டில் ஆக்கம்பெற்றுள்ளன.
- இருசொல் கூட்டாக்கத்தில் உரிச்சொற்களும் பயன்படுவதைப் பத்துப் பாட்டில் காணமுடிகிறது.
- இருசொல் கூட்டாக்கத்தில் வினையும் பெயரும் இணைந்து ஆக்கம் பெறுவதை மரபிலக்கணப்படி வினைத்தொகை அமைப்பில் காணமுடிகிறது.
- பலசொல் கூட்டாக்கத்தில் பெயரடையுடன் இருபெயர்கள் இணைதல், இருபெயர்களுக்கு இடையில் வினை இடம்பெற்று இணைதல் ஆகிய இருவகை ஆக்கம் விளைவாக்கம் கொண்டதாகப் பத்துப்பாட்டில் காணமுடிகிறது.
- கூட்டுப் பெயராக்கத்தில் இருசொல் கூட்டில் வடிவ அமைப்பு (வாய்ப்பாடு) குறைவாகவும் பலசொல் கூட்டில் மிகுதியாகவும் உள்ளதைப் பத்துப்பாட்டில் காணலாம்.
- பத்துப்பாட்டில் வினையாக்கம் பெயரும் வினையும் இணைதல் என்னும் தன்மையில் அதிகமாகக் காணப்படுகிறது.

- பத்துப்பாட்டில் உள்ள கூட்டுச் சொல்லாக்கங்களை ஆராய்ந்த பொழுது பெயராக்கம் மிகுதியாகவும் வினையாக்கம் குறைவாகவும் நிகழ்ந்துள்ளதை அறியமுடிகிறது.
- பத்துப்பாட்டில் கூட்டுச் சொல்லாக்கத்தில் இடைச்சொற்களின் பயன்பாடு குறிப்பிடும்படி இல்லை எனலாம்.
- பத்துப்பாட்டில் பெயரடையாக்கம் நிகழ்ந்துள்ளதாக அறியமுடியவில்லை.
- பத்துப்பாட்டில் கூட்டுப் பெயராக்கங்கள் பெயர், பெயரடை, வினை, உரிச்சொல் ஆகிய நான்கு சொற்களின் சேர்க்கை அடிப்படையில் நிகழ்ந்துள்ளன.
- பத்துப்பாட்டில் கூட்டு வினையாக்கங்கள் பெயர், வினை, இடைச்சொல் ஆகிய மூன்று சொற்களின் சேர்க்கை அடிப்படையில் நிகழ்ந்துள்ளன.
- பத்துப்பாட்டின் புலவர்கள் அனைவரும் கூட்டாக்கச் சிந்தனையில் சிறந்தவர் களாகவும் கூட்டாக்கத்தின் முன்னோடிகளாகவும் இருப்பதை அறிய முடிகிறது.
- தற்காலத்தில் உள்ள கூட்டுச் சொல்லாக்கத்திற்கு அடிப்படையாகப் பத்துப்பாட்டில் உள்ள கூட்டுச்சொற்கள் அமைகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. இ. மறைமலை, சொல்லாக்கம், பக்.69-70.
2. மேலது, ப.70.
3. ச. இராசேந்திரன், தமிழில் சொல்லாக்கம், பக்.247-264.
4. மேலது, ப.247.
5. மேலது, ப.264.
6. பொற்கோ, இலக்கண உலகில் புதிய பார்வை, தொகுதி 2, ப.84.
7. மேலது, ப.82.
8. இ. மறைமலை, சொல்லாக்கம், ப.69.
9. எச். சித்திரபுத்திரன், சொல்லும் பொருளும், பக்.25-26.
10. இ. மறைமலை, சொல்லாக்கம், பக்.81.
11. மேலது, ப.81.
12. பா. வீரப்பன், சங்க இலக்கிய நடை, ப.109.
13. மேலது, ப.108.
14. மேலது, ப.109.
15. ச. அகத்தியலிங்கம், மொழியியல், சொல்லியல், வினையியல், ப.25.
16. மேலது, பக்.57-62.

சொல்லாக்க வகைப்பாடுகள் பலநிலைகளில் காணப்படினும் ஒட்டுவழியில் புதிய சொற்கள் ஆக்கம் பெறுவது என்பது ஒருவகையாக விளங்குகின்றது. இந்த ஒட்டுவழி ஆக்கம் இருவகைகளில் நிகழ்கின்றன. அவை முன்னொட்டாக்கம், பின்னொட்டாக்கம் என்பனவாம். இதில் முன்னொட்டாக்கம் தமிழில் மிகக் குறைவாகவே காணப்படுகின்றன. ஆனால், பின்னொட்டாக்கம் அதிக விளைவாக்கம் உள்ளதாகக் காணப்படுகின்றது. இந்தப் பின்னொட்டாக்கத்தை 'விகுதிவழி ஆக்கம்' என்றும் வழங்குவர். இரு பெயர்களும் பொருத்த முடையதாகவே விளங்குகின்றது. ஏனெனில் பின்னுருபுகள் இணைவதால் சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் பின்னொட்டாக்கம் என்று குறிப்பிடுகின்றனர். அதேபோல் பின்னுருபுகளை இலக்கண விதிப்படி நோக்குகையில் விகுதிகள் எனும் பெயர் பெறுகின்றது. அதன் அடிப்படையில் விகுதிவழிச் சொல்லாக்கம் என வழங்கப்படுகின்றது. இவண் விகுதிவழிச் சொல்லாக்கம் எனப் பயன்படுத்த காரணம் என்னவெனில் பழந்தமிழ் இலக்கியங்களில் ஒன்றான பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள சொல்லாக்கங்களை ஆராய்வதாகும்.

பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள விகுதிவழிச் சொல்லாக்கங்களைப் பகுத்து ஆராயும் முன், அவ்விகுதிகள் குறித்து இலக்கணிகள், மொழியியல் அறிஞர்கள், சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் ஆகியோரின் கருத்துகளை ஆய்வின் தெளிவு கருதித் தொகுத்து நோக்கப்படுகின்றது.

## 'விகுதி' சொல் விளக்கம்

தமிழ்ப்பேரகராதி விகுதி என்பதற்குப் பகுபதவுறுப்பினுள் இறுதி நிலையான உறுப்பு; Termination, ending of a word என்று நன்னூல் கூறும் வரையறையைச் சான்றுடன் எடுத்துக்காட்டியுள்ளது. இது தவிர மேலும் இரண்டு பொருள்களைத் தமிழ்ப்பேரகராதி தந்துள்ளது. அப்பொருட்கள் இரண்டும் ஆய்விற்குத் தொடர்பின்றி உள்ளதால் இவ்விடம் தவிர்க்கப் பட்டுள்ளது.

விகுதிகள் பற்றிக் கூறுமிடத்துத் தொல்காப்பியர் வினைமுற்று ஈறுகள் என்று குறிப்பிட்டு, அவற்றை வினைமுற்றுகளின் வகைபாடுகளின் தன்மையில்

விளக்கியுள்ளார். தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில் வினையியல் பகுதியில் சில நூற்பாக்களில் விகுதிகள் பற்றிப் பேசியுள்ளார். தெளிவு கருதி அந்நூற்பாக்களைக் கீழே நோக்கலாம்.

அவைதாம்,
அம்ஆம் எம்ஏம் என்னுங் கிளவியும்
..........................................
..................................................
பன்மை யுரைக்குந் தன்மைச் சொல்லே (தொல்.சொல்.204)

அன்ஆன் அள்ஆள் என்னும் நான்கும்
ஒருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே (தொல்.சொல்.207)

அர்ஆர் பஎன வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே (தொல்.சொல்.208)

அஆ வஎன வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை (தொல்.சொல்.218)

அவற்றுள்,
முன்னிலைக் கிளவி
இஐ ஆயென வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும் (தொல்.சொல்.225)

இர்ஈர் மின்னென வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரணைய என்மனார் புலவர் (தொல்.சொல்.226)

மேற்காணும் நூற்பாக்களின் வழி அம், ஆம், எம், ஏம், அன், ஆன், அள், ஆள், அர், ஆர், ப, அ, ஆ, வ, இர், ஈர், மின், இ, ஐ, ஆய் ஆகிய விகுதிகள் என்னென்ன பொருளில் வினைமுற்று ஈறுகளாகச் செயல்படுகின்றன என்பதைத் தொல்காப்பியர் தெளிவுபடுத்தியுள்ளார். மேலும் 205, 209, 217, 219, 222, 223 ஆகிய நூற்பாக்களிலும் விகுதிகள் குறித்துப் பேசியுள்ளார்.

தொல்காப்பியர் விகுதி வகைகள் பற்றித் தனித்துக் கூறாது விடுத்ததைக் கருத்தில் கொண்டும் தமிழ்மொழி அமைப்பில் விகுதிகளின் முக்கியத்துவம் அறிந்தும் பவணந்தியார் விகுதிகளைத் தனித்து வகைப்படுத்தி விளக்கியுள்ளார்.

பொதுவாகப் பகுபத உறுப்புகளைக் குறிப்பிடுமிடத்தில் பகுதிக்கு அடுத்து விகுதியைக் கூறியுள்ளதைக் கொண்டு விகுதியின் முக்கியத்துவத்தை அறியமுடிகின்றது.

பகுதி விகுதி யிடைநிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும் (நன்.133)

இந்த நூற்பாவில் பகுபத உறுப்புகளில் விகுதிக்குரிய தன்மையை வெளிப்படுத்தியுள்ளார். அதேபோல் விகுதியின் வகைகளைப் பற்றி,

அன்ஆன் அள்ஆள் அர்ஆர் பம்மார்
அஆ குடுதுறு என்ஏன் அல்அன்
அம்ஆம் எம்ஏம் ஓமோ டும்மூர்
கடதற ஐஆய் இம்மின் இர்ஈர்
ஈயர் கயவு மென்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினும் சிலவே (நன்.140)

இந்நூற்பாவில் விகுதிகள் அதிகப் பெரும்பான்மை வினைசார்ந்தும் சில பெயர் சார்ந்தும் வருவன எனச் சுட்டுகின்றார். நன்னூலுக்குக் காண்டிகையுரை எழுதிய ஆறுமுக நாவலர் இந்நூற்பாவிற் கூறப்பட்ட விகுதிகளைப் பின்வருமாறு பகுத்துத் தெளிவாக உரை எழுதியுள்ளார்.

### (1) குறிப்பு வினைமுற்று விகுதிகள்

அன், ஆன், அள், ஆள், அர், ஆர், அ, கு, து, று, என், ஏன், அம், ஆம், எம், ஏம், ஓம், ஐ, ஆய், இ, இர், ஈர் என்னும் இருபத்திரண்டு விகுதிகள் குறிப்பு வினைமுற்றில் வரும் என்பார்.

### (2) பெயர் விகுதிகள்

பெயரினும் சில என நூற்பா ஈற்றில் குறிப்பிட்டுள்ளதால் இவ்விகுதிகளுள் அன், ஆன், அள், ஆள், அர், ஆர், மார், அ, து, இ, என்னும் பத்தோடு, மான், மன், கள், வை, தை, கை, பி, முன், அல், ன், ள், ர், வ் என்னும் பதின்மூன்றும் பெயர்ச்சொற்களில் பயின்றுவரும் விகுதிகளாகும் என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும் தெரிநிலை வினைப் பெயரெச்ச விகுதிகள், குறிப்புவினைப் பெயரெச்ச விகுதிகள், தெரிநிலை வினையெச்ச விகுதிகள், குறிப்பு வினையெச்ச விகுதிகள், தொழிற்பெயர் விகுதிகள், பண்புப்பெயர் விகுதிகள், பிற விகுதிகள் என்னும் நிலைகளில் பகுத்துக் கூறியுள்ளார் என்பதைத் தெளிவாக விளக்கி

ஆறுமுக நாவலர் உரை எழுதியுள்ளார். நன்னூலார் பிறவும் என்று கூறியதன் பொருளாகவும் அந்நூற்பாவின் சாரமாகவும் "வினையின் விகுதி பெயரினுஞ் சில என்றதனாலும்; பிறவும் என்றதனாலும்; பலவகைப்பட்ட வினைகளுக்கும் பெயர்களுக்கும் இவ் விகுதிகளுள் அடங்கியும் அடங்காமலும் வரும் விகுதிக ளெல்லாங் கொள்ளப்படும்"[1] என்று ஆறுமுக நாவலர் குறிப்பிடுகின்றார். இந்த இரு நூல்களை அடிப்படையாகக் கொண்டு பிற இலக்கண நூல்கள் அனைத்தும் விகுதிகள் பற்றிப் பேசியுள்ளன எனலாம்.

தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் கிளைமொழிகளிலும் பல சொற்கள் சொல்லாக்க விகுதிகளைப் பெற்று வருகின்றன எனக் குறிப்பிடுகின்றார். 'மை' என்னும் விகுதி பெயர்ச்சொற்களுடனும் பயின்று வருதல் பற்றித் தெளிவாக விளக்கியுள்ளதைக் காணமுடிகின்றது.[2] இந்த 'மை' விகுதி பிற்காலத்தில் 'மல்' என்பதாக மாற்றம் பெற்று வழங்குவதையும் எடுத்துக்காட்டியுள்ளார்.

தற்காலத்தில் வழங்கிவரும் சில விகுதிகள் பற்றிக் குறிப்பிடும் அவர் "*சமஸ்கிருத மொழியோடு ஒப்புமையாக்கமாகப் பல புதிய விகுதிகள் வருகின்றன. மேலும் அரிய பழைய வடிவங்களும் தொடர்ந்து போற்றப்பெற்று வழக்கில் வருகின்றன*"[3] என்று கூறுகின்றார். இக்கருத்தின் வழிக் கால மாற்றத்திற்கு ஏற்ப விகுதிகளும் உருவாகி வருகின்றன எனவும் பழைய விகுதிகளில் சில மிகுந்த செல்வாக்கு காரணமாக வழக்கில் உள்ளது எனவும் அறிந்துகொள்ள முடிகின்றது. சான்றாக,

சாலி - புத்திசாலி
காரன் - வேலைக்காரன்
அரவு - தோற்றரவு

ஆகிய மூன்று வகை விகுதிகளைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

மொழியியல் அறிஞர் ச. அகத்தியலிங்கம் அவர்கள் பின்னொட்டுகள் பற்றி,

> *அடிச்சொற்களின் பின்னால் இணைக்கப்படும் ஒட்டுகளைப் பின்னொட்டு என அழைப்பர். தமிழ்மொழியில் ஒட்டுக்கள் அனைத்தும் பின்னொட்டுக்களாகவே உள்ளன. பொதுவாக இலக்கணப் பொருள் அனைத்தும் பின்னொட்டுக் களாலேயே உணர்த்தப்படுகின்றன. ஒரு சில இடங்களில் வேறு சில நிலை காணப்படினும், ஒட்டுகளின் ஆட்சியே இம்மொழியில் அதிகம். கால இடைநிலைகள், எதிர்மறை இடைநிலைகள், விகுதிகள் போன்றவை பின்னொட்டுக்களாகும்*[4]

என்று குறிப்பிடுகின்றார். இங்கு விகுதிகள் பின்னொட்டுகளாகச் செயல்படும் என்பதை உணர்த்தியுள்ளார். மேலும் ஒட்டுக்களை இருநிலைகளில் பகுத்துக் கூறியுள்ளார். அவை,

(1) திரிவொட்டுக்கள் (Inflectional Suffixes)

(2) ஆக்கவொட்டுக்கள் (Derivational Suffixes)

என்பனவாம். இவற்றில் திரிவொட்டுக்கள் இலக்கண மரபு நிலையிலும் ஆக்கவொட்டுக்கள் சொல்லாக்க நெறிமுறையிலும் அமைகின்றன.

ஆக்கவொட்டுக்களான -ப்பு, -ஐ ஆகிய இரண்டையும் எடுத்துக்காட்டி நட, கொல் ஆகிய இரண்டுடன் சேரும் பொழுது நடப்பு, கொலை என வினைவடிவிலிருந்து பெயர் வடிவத்திற்கு மாற்றம் பெறுவதைச் சுட்டியுள்ளார். ஆக்கவொட்டுக்களின் தன்மை பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

> *ஆக்கவொட்டுக்கள் பொதுவாக அடிச்சொற்களுடன் (stem) இணைந்து, வேறுவகையான சொற்களை உருவாக்கும். இத்தகைய மாற்றங்களையே ஆக்கப்பாடு(Derivational) எனக் கூறுவர். ஒருவகைச் சொல்லிலிருந்து இன்னொரு வகைச் சொல்லை உருவாக்கும் மாற்றத்தையே இப்பெயரால் அழைக்கின்றனர்.*[5]

இவ்வாறு கூறுவதன் மூலம் ஆக்கவொட்டுக்களின் தேவையை அறிய முடிகின்றது.

ஒட்டுக்கள் குறித்துப் பல நிலைகளில் ஆராய்ந்த ச. அகத்தியலிங்கம் அவர்கள் ஒட்டுக்களை/விகுதிகளை இரண்டு தன்மையில் பகுத்துக் கூறியுள்ளார். அவை, பெயராக்க விகுதிகள், வினையாக்க விகுதிகள் என்பன.

பெயராக்க விகுதிகளாக அன், ஆன், வன், ஞன், காரன், மான், அவன், அள், த்தி, ஆத்தி, ச்சி, அச்சி, ஐ, ஆள், ஆட்டி, மாட்டி, காரி, அவள், வி, அம்மாள், அர், ஆர், வர், ஞர், இர், கள், க்கள், அவர் ஆகியவற்றையும் வினையாக்க விகுதிகளாகத் தமிழ்மொழி சார்ந்து 'இ' என்பதையும் வடமொழி சார்ந்து அம், அனை, அனம், அணம், அணை, ஐ ஆகியவற்றையும் ஆக்க விகுதிகள் என்று குறிப்பிட்டுள்ளார்.

தற்கால மொழியியல் சார்ந்த ஆய்வுகளில் ஈடுபட்டு வரும் பொற்கோ அவர்கள் "*விகுதிகளைச் சேர்த்துச் சொற்களை ஆக்குதல் தமிழில் தொன்று தொட்டுக் கையாளப்பட்டு வந்த ஒரு சிறந்த சொல்லாக்க உத்தி எனலாம்*"[6] என்று குறிப்பிடுகின்றார்.

இவர் சொல்லாக்க விகுதிகளாக அம், அன், அள், அர், அல், இயல், இல், உள், ஐ, காரன், காரி, காரர், கை, படி, பாடு, பு, மதி, மான், மானம், மை, வி, வு

முதலியனவற்றைக் குறிப்பிடுகின்றார். மேலும் இதுபோன்ற விகுதிகள் காலந்தோறும் ஏராளமான புதுச்சொற்களை உருவாக்கித் தமிழின் சொற்களஞ்சியத்தை விரிவுபடுத்தியுள்ளன எனவும் சுட்டுகின்றார்.

சு. இன்னாசி அவர்கள் விகுதிகளைப் பெயர்ச்சொற்களுடனும் வினைச்சொற்களுடனும் இணைத்துப் புதிய சொற்களை ஆக்க இயலும் என்று கூறுகின்றார். சான்றாக,

மனை + வி > மனைவி
கோ + இல் > கோயில்

என்பது போன்றவற்றைக் காட்டியுள்ளார். தல், அல், இ, சி, மை, கை, வு, காரன், காரி, சாலி, வான் போன்றவற்றை விகுதிகளாகச் சுட்டியுள்ளார்.

பெயர், வினைச்சொற்கள் மட்டுமன்றி இடை மற்றும் உரிச்சொற்களுடனும் பாலறி விகுதிகளைச் சேர்த்துச் சொற்களை உருவாக்கலாம் என்று குறிப்பிடுகின்றார்.

இடைச்சொல் - பிற + ன் > பிறன்
உரிச்சொல் - சிவப்பு + இ > சிவப்பி

இது போன்று ஆக்கிக்கொள்ளலாம் என்பது அவர் கருத்தாக அமைகின்றது.[7]

இராம. சண்முகம், விகுதிகளை இரண்டு வகையாகப் பிரித்துக் கூறுகின்றார். அவை பகுதிப்பொருள் விகுதி, பொதுவிகுதி என்பன.

(1) சொல்லுக்குள்ளேயே நிகழும் அச்சிறு மாற்றங்கள் நிகழ்வதுப் பகுதிப் பொருள் விகுதி பெறல். எ.கா. குழந்தை > கொழுந்து.

(2) ஓர் அடிச்சொல்லோடு மற்றோர் அடிச்சொல்லோ, தனியே பொது விகுதியோ சேர்ந்து புதிய பகுதிகள் தோன்றுதல்.

எ.கா. தலைப்படு, கடைபிடி.

விகுதிகளைத் தன்மை விகுதி, முன்னிலை விகுதி, பெயர் விகுதி என மூன்று வகைகளாகப் பிரித்துக் கூறுவார் மாகறல் கார்த்திகேய முதலியார். அடுத்து மோசூர். வேங்கடசாமி ஐயர் அ, அடம், அம், அரவு, அர், அல்.......... என்பது போன்று 102 விகுதிகளைத் தொகுத்து விளக்கியுள்ளார். அவர் இந்நூலுக்கு 'விகுதி விளக்கம்' என்று பெயரிட்டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அம், அர், அல், அன், இ, இல், ஐ ஆகிய ஏழு விகுதிகள் குறித்துத் தமிழ்ச் சொல்லமைவு என்னும் நூலில்

விளக்கியுள்ளார். இந்த ஏழு விகுதிகளையும் பழந்தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியங்கள் தொடங்கிச் சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற வற்றிலும் பக்தி இலக்கியங்களிலும் சான்றுகளை எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.

ஒட்டுவழிச் சொல்லாக்கம் என்னும் பிரிவில் இ. மறைமலை அவர்கள் விகுதிகளைப் பெயருடன் சேரும் விகுதிகள், வினையுடன்/எச்சத்துடன் சேரும் விகுதிகள், பெயருடனும் வினையுடனும் சேரும் விகுதிகள் எனப் பகுத்து விளக்கியுள்ளார். இவ்வாறு பகுத்துக் கூறியவற்றில் பின்வரும் விகுதிகளைப் பற்றி ஆராய்ந்துள்ளார்.

காரன், காரர், ஆள், ஆளர், ஆளி, இயல், தாரர், நர், அகம், மானம், காரி, ஞர், இ, பு, கை, வை, வு, அம், அல், மை, இடு, படு என மொத்தம் 22 வகையான விகுதிகளைக் குறிப்பிட்டுள்ளார். இவற்றில் பெரும்பான்மை தற்காலம் சார்ந்து பயன்படுத்தப்பட்ட விகுதிகள் அதிகமாக இடம்பெற் றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

சொல்லாக்கங்களைப் பலநிலைகளில் பகுத்து ஆராய்ந்த ச. இராசேந்திரன் பின்னொட்டாக்கம் குறித்தும் விகுதிகளின் வகைப்பாடுகள் பற்றியும் விரிவாக ஆராய்ந்துள்ளார். பின்னொட்டாக்கம் எனப்படும் விகுதிகள் கொண்டு நடைபெறும் இவ்வகை ஆக்கம் அதிக விளைவாக்கம் கொண்டது என்பார். இவர் பின்வரும் விகுதிகளை வரிசைப்படுத்தி விளக்கியுள்ளார்.

காரன், காரி, காரர், ஆளர், ஆள், ஆளி, தாரர், தாரி, நர், ஞர், இ, இயல், அகம், தல், த்தல், அல், கல், க்கல், கை, க்கை, ஆமை, காமை, ப்பு, வு, வை, மானம், அம், மம், பாடு, ஈடு, ஆகிய 29 வகை விகுதிகளை விளக்கியுள்ளார். இவ்விகுதிகள் வகைப்படுத்தல் மற்றும் தேர்ந்தெடுத்தல் என்பது மற்ற சொல்லாக்கச் சிந்தனையாளர்களிடமிருந்து சற்று மாறுபட்ட சிந்தனையில் செயல்பட்டுள்ளார் என அறியலாம். மேலும் இவ்விகுதிகளைப் பெயருடன் சேர்ந்து ஆக்கம் பெறும் விகுதிகள், வினையுடன் சேர்ந்து ஆக்கம் பெறும் விகுதிகள் எனப் பகுத்துக் கூறியுள்ளார்.

நன்னூலாரின் கலைச்சொல்லாக்கத்தை ஆராய்ந்த வே. சீதாலட்சுமி அவர்கள் விகுதிகள் சேர்த்துச் சொற்களை ஆக்கிக்கொள்வது பற்றி விளக்கியுள்ளார். அதாவது,

*பெயராகவோ, வினையாகவோ அமையும் பகாப்பதங்களுடன் விகுதி சேர்த்துச் சொற்களை உருவாக்குவது இச்சொல்லாக்க முறைகளில்*

*ஒன்றாகும். இவ்வகையில் பெயராக்க விகுதிகளைச் சேர்த்துப் பெயர்களும், வினையாக்க விகுதிகளைச் சேர்த்து வினைச்சொற்களும் ஆக்கப்படுகின்றன*[8]

என்று குறிப்பிடுகின்றார்.

விகுதிவழி ஆக்கம் பற்றிக் குறிப்பிடும் இவர் சில விகுதிகளை வகைப் படுத்தியுள்ளார். அவை அம், அல், வு, ஐ, கை, சி, து, தல், தி, மை, பு, வை, அன் என்பன போன்ற விகுதிகள் வினையடிகளுடன் சேர்ந்து பெயர்களை உருவாக்குகின்றன என்றும் காரன், காரி, காரர், சாலி, ஆளர், ஆளன், ஆளி, நர் ஆகிய விகுதிகளைக் கருத்தா விகுதிகள் என்றும் கூறியுள்ளார்.

அடுத்து, கருவி விகுதியாக 'இ' என்பதும் வினையாக்க விகுதியாக இ, உ ஆகியன அமைவதையும் சுட்டிக்காட்டியுள்ளார். மேலும் அடிச்சொற் களுடன் இவ்விரு விகுதிகளும் இணைந்து விகுதிவழிச் சொல்லாக்கம் நிகழ்வதைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

பழந்தமிழில் சொல்லாக்க நெறிகள் என்னும் ஆய்வுக்கட்டுரையில் க.பாலசுப்பிரமணியன், தொல்காப்பியரின் சொல்லாக்கச் சிந்தனைகளை வகைப்படுத்தி விளக்கியுள்ளார். அதில் உருபு அல்லது வடிவமாற்றம் என்ற பிரிவில் விகுதிகளைச் சேர்த்துச் சொற்களை ஆக்குதல் பற்றி விளக்கியுள்ளார். இந்த வகைச் சொல்லாக்க முறைக்கும் தொல்காப்பியர் அடிப்படையாக விளங்குகிறார் என்பதை இவர் ஆய்வின் மூலம் அறியமுடிகிறது.

ஒரு சொல் எவ்வித மாற்றமும் இன்றிப் பெயராகவும் வினையடியாகவும் கொள்ளப்படுவதைச் சூன்ய விகுதி பெறுதல் என்று சுட்டுகின்றார். மேலும் ப்பு, த்து, கு, இன், அம், அல், கை ஆகிய விகுதிகளைப் பயன்படுத்தி தொல்காப்பியர் சொற்களை ஆக்கி வழங்கியுள்ளார் எனவும் ஆராய்ந்து வெளிப் படுத்தியுள்ளார்.

பால்காட்டும் பெயராக்க உருபுகள் என்னும் கட்டுரையில் அ. காமாட்சி பல்வேறு வகையான சொற்களோடு விகுதிகள் இணைந்து பெயராக்கம் நடைபெறுவதைக் குறிப்பிடுகின்றார். அவ்விடம் அன், ஆர், இ, வன், வி, ஆள், ஆளி, ஆளன், ஆன், நர், னர், ஞர், வாதி, காரன், காரர், காரி, கிழார், பிள்ளை, அவன், அவள், அவர், அவர்கள், அது, அவை(கள்), ஓர், ஒன், இ ஆகியவற்றை விகுதிகளாக வகைப்படுத்தியுள்ளார்.

ஆ. வேலுப்பிள்ளை சில விகுதிகளை வகைப்படுத்திச் சொல்லாக்கம் நடைபெறுவதை விளக்குகின்றார். அவ்வாறு வகைப்படுத்திய விகுதிகளை நோக்கலாம்.

தல், த்தல், அல், அம், ஐ, மை, கை, க்கை, பு, ம்பு, ப்பு, சி, ச்சி, தி, து, த்து, வு, சை, கு, ங்கு, ய், இ, று, ஏன், ஓம், ஆய், ஈர், அன், ஆன், ஆள், ஆர், அர், ஓர், அர்கள், ஆர்கள், அ, காரன், காரி, சாலி, வான், மான், வந்தர் ஆகியவற்றை விகுதிகளாகத் தொகுத்துத் தெளிவுபடுத்தியுள்ளார்.

இரா. இளங்குமரன் அவர்கள் தேவநேயப்பாவாணரின் சொல்லாய்வுகளை ஆய்வு செய்து நோக்குமிடத்துப் பாவாணரின் விகுதிவழி ஆக்கம் பற்றிய சிந்தனைகளைச் சுட்டுகின்றார்.

> *மண் என்னும் சொல் மணலைக் குறித்தற்கு அல்லீறு பெற்று மணல் என்றானதையும் கம்பு என்னுஞ் சொல் மரக்கோலைக் குறியாது கனிய(உலோகக்) கோலைக் குறித்தற்கு இகரவீறு பெற்றுக் கம்பி யென்றானதையும் பக்கத்தையும் இருப்பையும் குறிக்கும் மருங்கு என்னும் சொல் மருங்குல் என உல்லீறு பெற்றுத் தனிப்பட்ட இருப்பைக் குறிப்பதையும் எடுத்துரைப்பார்*[9]

என்று பாவாணர் கூறுவதை எடுத்துக்காட்டியுள்ளார். இக்கருத்தை உற்றுநோக்கும் பொழுது பாவாணர் விகுதிவழி ஆக்கம் பற்றிய தெளிவான சிந்தனையுடையவர் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது. மேலும் அல், இ, உல், ப்பு, வை, ம்பு, அகம், அம், வு, அன், சு, ச்சி, ஆம், ஆய் என்பது போன்ற விகுதிகள் குறித்துப் பாவாணர் விளக்கம் தந்துள்ளதைக் காணமுடிகின்றது.

சொல்லாக்கச் சிந்தனையில் மிகுந்த ஈடுபாட்டுடன் செயல்பட்டுவரும் எச். சித்திரபுத்திரன் இதுவரை யாரும் வகைப்படுத்திக் கூறாத எண்ணிக்கையில் 18 வகையாகப் பகுத்துக் கூறியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. சொல்லாக்கச் சிந்தனையில் தொடந்து செயல்பட்டு வரும் இவர் விகுதிவழிச் சொல்லாக்கம் பற்றி ஆக்கம், திரிபு, பின்னொட்டாக்கம் ஆகிய மூன்று பிரிவுகளில் விளக்கியுள்ளார். இதில் ஆக்கம், பின்னொட்டாக்கம் ஆகிய இரண்டு பிரிவுகளில் ஆக்கச்சொல் விகுதிகள் பற்றியும் விகுதிகளாகச் சிலவற்றையும் சான்றுகளுடன் சுட்டிக்காட்டி விளக்கம் தந்துள்ளார்.

விகுதிகளாகச் சுட்டியுள்ளதைப் பின்வருமாறு காணலாம். அவை அல், ப்பு, க்கை, ச்சி, வி, வு, இ என்பவற்றை ஆக்கம் என்ற பிரிவின் கீழும் இ, அம், வு, நர், மை, ஆயம், இயம் ஆகியவற்றைப் பின்னொட்டாக்கம் என்பதன் கீழும் வகைப்படுத்திக் கூறியுள்ளார். இருப்பினும் இவ்வொட்டாக்கம் குறித்து, இவர் விரிவாக ஆராயவில்லை என்ற எண்ணம் தோன்றக்கூடும். இது அதிக விளைவாக்கம் கொண்ட ஒரு சொல்லாக்க வகை என்பது அனைவரும் அறிந்த ஒன்று என்ற நோக்கில் சுருங்கக் கூறியுள்ளார் எனலாம்.

சு. சக்திவேல் மற்றும் ச. இராசேந்திரன் ஆகிய இருவரும் 'சொற்கள்' என்னும் தம் நூலின் ஒரு பகுதியாகச் சொல்லாக்க வகைப்பாடுகள் பற்றி ஆராய்ந்துள்ளனர். அதில் பின்னொட்டாக்கம் தமிழில் பரவலாகக் காணப்படும் சொல்லாக்க முறை எனச் சுட்டியுள்ளனர். பல பின்னொட்டுக்கள் தமிழில் பயன்படுத்தப்படுகின்றன என்று கூறுகின்றனர். அவ்விகுதிகளை மூன்று நிலைகளில் பகுத்துக் கூறியுள்ளனர். அவை,

உயர்திணைப் பெயராக்க விகுதிகளாகக் காரன், ஆளன், ஈனன், சீலன், சந்தன், வந்தன், ஆட்டி, வதை, வதி, ஆள், ஆளி, சாலி, வாதி, மாணி, மான், தாரி, ஏறி, காரர், ஆளர், ஈனர், சீலர், வந்தர், அன், ஆன், ஒன், அள், அத்தி, ஆத்தி, த்தி, ச்சி, இ, ஐ, அர், ஆர், ஓர் ஆகியவற்றைக் கூறியுள்ளனர்.

தொழிற்பெயர் விகுதிகளாகத் தல், த்தல் ஆகிய இரண்டையும் சுட்டுகின்றனர்.

வினையடிப் பெயராக்க விகுதிகளாகக் கை, க்கை, வு, ப்பு, க்கு, அல், க்கல், ச்சல், ச்சு, தி, ச்சி, சி, வி, இ, ஐ, வை, மை, அம், த்தம், த்தை ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு இருவரும் விகுதிகளை ஆக்கச்சொற்களின் பெயர்த் தன்மையில் வகைப்படுத்திக் கூறியுள்ளதைக் காணமுடிகின்றது.

சங்க இலக்கியத்தில் ஒருபொருட் சொற்கள் என்னும் தலைப்பில் ஆய்வை நிகழ்த்திய க. அன்பழகன், சங்க இலக்கிய ஆக்க விகுதிகளாகச் ச. அகத்தியலிங்கம் குறிப்பிடும் சில விகுதிகளை எடுத்துக் காட்டியுள்ளார். அவ்விகுதிகள் சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ளது குறித்து ஒரு ஆய்வுக் கட்டுரையும் எழுதியுள்ளார். அவ்விகுதிகளைப் பின்வருமாறு காணலாம்.

அருவத்தை, ஐ, அகம், அம், அல், அவு, இ, உள், கை, க்கை, சி, ச்சில், ச்சி, தி, பு, ப்பு, ம், மை, வை, வல், வி, வு, அர், அரை, ஆர், காடு, ட்டம், ட்டு, டு, டை, ப்பை, வாய் ஆகிய விகுதி வகைகள் சங்க இலக்கியங்களில் பயின்றுள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

பின்னொட்டுகளில் ஒன்றாக விளங்கும் விகுதிகளை வகைப்படுத்துவதில் பல்வேறு வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஒவ்வொரு அறிஞர்களும் ஒரு எண்ணிக்கை அளவை கொண்டு காணப்படுகின்றனர். எவ்வாறு இருப்பினும் பெரும்பான்மையானோர் ஒரு சில குறிப்பிட்ட விகுதிகளை வகைப்படுத்துவதில் ஒன்றுபட்டுக் காணப்படுகின்றனர் என்பதை மேலே ஆராய்ந்த தரவுகளின் அடிப்படையில் அறிந்துகொள்ள முடிகின்றது.

மேற்காணும் தரவுகளைத் தொகுத்து ஆராய்ந்து அறிந்ததன் அடிப்படையில் பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள விகுதிவழிச் சொல்லாக்கங்களைத் தொகுத்துப் பின்வருமாறு ஆராயப்படுகிறது.

சொல்லாக்களில் பலவகை காணப்படினும் பின்னொட்டாக்கம்/ விகுதிவழிச் சொல்லாக்கம் அதிக விளைவாக்கம் கொண்டது என்பது அனைவரும் அறிந்த ஒன்றாகும். அந்தக் கருத்தின் அடிப்படையில் பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள சொல்லாக்க அமைப்புகளைத் தொகுத்து ஆராயும் பொழுது அது உண்மை என்பதை ஐயமின்றித் தெளியமுடிகிறது. பத்துப்பாட்டில் உள்ள சொற்களைத் தொகுத்துப் பிரித்து ஆராய்ந்ததில் கூட்டுச் சொல்லாக்கத்திற்கு அடுத்த நிலையில் அதிக அளவில் நிகழ்ந்துள்ளது விகுதிவழிச் சொல்லாக்கம் என அறிந்துகொள்ள முடிந்தது.

இந்த விகுதிவழிச் சொல்லாக்கம் தமிழ்மொழிச் சொற்களுடனும் பிறமொழிச் சொற்களுடனும் விகுதிகள் இணைவதால் புதிய சொற்கள் ஆக்கம் பெறுவதும், அவ்வாறு ஆக்கம் பெறும் சொற்கள் பொருள்மாற்றம் பெற்றும் பொருள்மாற்றம் இன்றியும் காணப்படுவதை அறியமுடிகின்றது. பத்துப்பாட்டு முழுவதும் சொற்களைத் தொகுத்தும் பகுத்தும் விகுதிவழி ஆக்கம் பெற்ற சொற்களை ஆராய்ந்த பொழுது பல்வேறு விகுதிகளின் சேர்க்கையால் சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது. ஒவ்வொரு புலவர்களும் தங்கள் சொல்லாக்கச் சிந்தனைகளை வெளிப்படுத்தியுள்ளனர்.

பத்துப்பாட்டில் விகுதிவழிச் சொல்லாக்க நெறிமுறையில் 350க்கும் மேற்பட்ட சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. அவ்வாறு ஆக்கம் பெற்ற சொற்களின் அடிப்படையில் அச்சொற்களில் ஆக்க விகுதிகளாக 29 விகுதிகள் செயல்பட்டுள்ளன. அவ்விகுதிகள் ஒவ்வொரு நெடும்பாட்டிலும் ஒவ்வொரு எண்ணிக்கையில் காணப்படுகின்றன. அந்நெடும்பாடல்களை இயற்றிய புலவர்களின் சொல்லாக்கச் சிந்தனையின் தன்மைக்கு ஏற்பவும் தேவை கருதியும் ஆக்க விகுதிகளைப் பயன்படுத்தியுள்ளனர் என உய்த்துணர முடிகின்றது.

பத்துப்பாட்டில் மொத்தம் 29 ஆக்க விகுதிகள் மூலம் ஆக்கச்சொற்கள் உருவாகியுள்ளன. இவ்விகுதிகள் அனைத்தும் ஒவ்வொரு பாட்டிலும் அமைந்துள்ள எண்ணிக்கையைக் கீழே காணலாம்.

திருமுருகாற்றுப்படை - 12 விகுதிகள்

அம், அல், அகம், அர், அன், ஆளர், இர், இல், நர், ந, வ, மை.

பொருநராற்றுப்படை - *12* விகுதிகள்

*அம், அல், அகம், அர், அன், இர், இ, நர், ந, வ,வி, ஞர்.*

சிறுபாணாற்றுப்படை - *13* விகுதிகள்

*அம், அல், அகம், அர், அன், இ, இசில், இர், இல், இயல், ஞர், நர், வி.*

பெரும்பாணாற்றுப்படை - *20* விகுதிகள்

*அம், அல், அகம், அர், அன், ஆர், ஆளர், இ, இசில், இர், இல், கை, ஞர், நர், ஓர், ப்பு, பு, ஐ, வி, வை.*

முல்லைப்பாட்டு - *7* விகுதிகள்

*அம், அகம், அர், ஆளர், இ, ஞர், நர்.*

மதுரைக்காஞ்சி - *17* விகுதிகள்

*அம், அல், அகம், அர், அன், ஆளர், இ, இயர், இயல், இயம், இர், ஓர், ந, நர், ஞர், மர், வி,*

நெடுநல்வாடை - *6* விகுதிகள்

*அம், அல், அகம், அர், இர், இயல்.*

குறிஞ்சிப்பாட்டு - *12* விகுதிகள்

*அம், அல், அகம், அர், அன், இ, இர், இசில், ஐ, ஞர், தி, நர்.*

பட்டினப்பாலை - *11* விகுதிகள்

*அம், அகம், அர், ஆளர், இ, இர், இல், ஐ, கை, ஞர், பு.*

மலைபடுகடாம் - *17* விகுதிகள்

*அம், அல், அகம், அர், அன், இ, இர், இல், இயல், ஞர், நர், மை, வை, கை, ச்சி, ஐ, பு.*

இப்பத்து நெடும்பாட்டுகளில் இடம்பெற்றுள்ள இவ்விகுதிகளைத் தொகுத்து வகைப்படுத்தி ஆராயும் பொழுது அகம், அம், அர் ஆகிய மூன்று விகுதிகள் மட்டும் அனைத்துப் பாட்டுகளிலும் பயின்றுவந்து சொற்களை ஆக்குவதில் துணைபுரிந்துள்ளன.

அதாவது, இவ்விகுதிகள் இடம்பெற்ற பாடல்களின் எண்ணிக்கை விவரம்.

'அகம், அம், அர்' விகுதிகள்

பத்துப்பாட்டுகளிலும் இடம்பெற்றுள்ளன.

'இர்' விகுதி

முல்லைப்பாட்டு நீங்கலாக ஒன்பது பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

'அல்' விகுதி

முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை நீங்கலாக எட்டுப் பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

'இ, ஞர்' விகுதி

திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை நீங்கலாக எட்டுப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

'நர்' விகுதி

நெடுநல்வாடை, பட்டினப்பாலை நீங்கலாக எட்டுப் பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

'அன்' விகுதி

முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, பட்டினப்பாலை நீங்கலாக ஏழு பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

'இல்' விகுதி

திருமுருகாற்றுப்படை,சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, பட்டினப்பாலை, மலைபடுகடாம் ஆகிய ஐந்து பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

'ஆளர்' விகுதி

திருமுருகாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை ஆகிய ஐந்து பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

'இயல்' விகுதி

சிறுபாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, மலைபடுகடாம் ஆகிய நான்கு பாடல்களில் பயின்றுள்ளது.

'வி' விகுதி

சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, மதுரைக்காஞ்சி ஆகிய நான்கிலும் பயின்றுள்ளது.

'இசில்' விகுதி

சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, குறிஞ்சிப்பாட்டு ஆகிய மூன்றிலும் இடம்பெற்றுள்ளது.

'ஐ' விகுதி

பெரும்பாணாற்றுப்படை, குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம் ஆகிய மூன்றிலும் இடம்பெற்றுள்ளது.

'கை' விகுதி

பெரும்பாணாற்றுப்படை, பட்டினப்பாலை, மலைபடுகடாம் ஆகிய மூன்றிலும் இடம்பெற்றுள்ளது.

'ந' விகுதி

திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, மதுரைக்காஞ்சி ஆகிய மூன்றிலும் பயின்றுள்ளது.

'பு' விகுதி

பெரும்பாணாற்றுப்படை, பட்டினப்பாலை, மலைபடுகடாம் ஆகிய மூன்றிலும் இடம்பெற்றுள்ளது.

'ஓர்' விகுதி

பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி ஆகிய இரண்டிலும் இடம் பெற்றுள்ளது.

'மை' விகுதி

திருமுருகாற்றுப்படை, மலைபடுகடாம் ஆகிய இரண்டிலும் இடம் பெற்றுள்ளது.

'வ' விகுதி

திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை ஆகிய இரண்டிலும் இடம்பெற்றுள்ளது.

'வை' விகுதி

பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் ஆகிய இரண்டிலும் இடம்பெற்றுள்ளது.

பெரும்பாணாற்றுப்படையில் 'ஆர்' விகுதியும் மதுரைக்காஞ்சியில் 'இயம், இயர், மர், ஆகிய விகுதிகளும் மலைபடுகடாமில் 'ச்சி' விகுதியும் குறிஞ்சிப்பாட்டில் 'தி' விகுதியும் பெரும்பாணாற்றுப்படையில் 'ப்பு' விகுதியும் முறையே ஆக்க விகுதிகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இவ்வாறு பயின்றுள்ள விகுதிகளைப் பகுத்து நோக்கும் பொழுது முன்னர்க் குறிப்பிடப்படுள்ளதைப் போன்று **29** விகுதிகள் பத்துப்பாட்டில் காணப்படுகின்றன. அவற்றைப் பின்வருமாறு அகர நிரல்படுத்தப்பட்டுள்ளன.

அகம், அம், அர், அல், அன், ஆர், ஆளர், இ, இசில், இயம், இயர், இயல், இர், இல், ஐ, ஓர், க்கை, கை, ச்சி, ஞர், தி, ந, நர், ப்பு, பு, மர், மை, வ, வி, வை என்னும் இவ்வகர நிரலில் விரிவாக ஒவ்வொன்றாக ஆராயப்பட்டுள்ளன.

## 'அகம்' விகுதி

அகம் என்னும் சொல்லிற்கு வீடு, மனம், ஞானம், உள் எனப் பல பொருள் உண்டு. ஆனால், இச்சொல் வேறு ஒரு சொல்லின் முன் அல்லது பின் என்னும் இருநிலைகளில் சொல்லாக்கத்தில் செயல்படுகின்றது. முன்னொட்டாக வருவது அதிக விளைவாக்கம் இல்லை. எனினும் இவ்விடம் பின்னொட்டு என்னும் நிலையில் ஆராய்வதால் பின்னுருபு/விகுதி என்ற தன்மையில் நோக்குவோம். பின்னொட்டாக வரும் பொழுது 'இடம்' என்னும் பொதுப்பொருளில் பெயருடன் சேர்ந்து பெயராக்கம் நிகழ்கின்றது.

அகம் என்பது முழுச்சொல் விகுதியாகச் செயல்படுகின்றது. இதைச் சொல் என்று கொள்ளாமல் விகுதி என்று ஏன் கருதவேண்டும் என்ற வினாவை முன்வைத்த இ. மறைமலை அவர்கள், அதற்கான விடையாக "*இவை மீண்டும் மீண்டும் விகுதிகளைப் போலவே செயல்பட்டுப் பல சொற்களை உருவாக்கத் துணைபுரிகின்றன*"[10] என்று குறிப்பிடுகின்றார். இவரே அகம் பற்றிப் பேசுமிடத்து 'வாற்றுபர்கு' என்ற மேலைநாட்டு அறிஞர் கூறும் கருத்தை எடுத்துக்காட்டியுள்ளார். அதை நோக்குதல் பயனளிக்கும் என்பதால் கீழே காணலாம்.

(1) பெரும்பாலான விகுதிகள் தொடக்கத்தில் முழுச் சொற்களாகவே இருந்தன.

(2) வரலாற்றுக் கண்ணோட்டத்தில் ஆய்ந்தால் தொகைச் சொல்லாக்கத்திற்கும் ஒட்டுவழிச் சொல்லாக்கத்திற்கும் தெளிவான எல்லைக்கோடு கிடையாது.

(3) தொகைச் சொல்லில் இடம்பெற்றுள்ள ஒரு பெயர்ச்சொல் காலப் போக்கில் தன்னுடைய பொருளில் நலிவடைந்து விகுதி என்னும் அளவில் குறுகி விடுகிறது.

என்று வாற்றுபர்கு குறிப்பிடும் இக்கருத்துகள் வழிக் கால மாற்றத்திற்கு ஏற்ப விகுதிகள் உருவாகி வரும் நிலையை எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளது.

அகம் என்பது உருபு அல்ல ஒரு பெயர்ச்சொல் என்று சி. இலக்குவனார் 'தொல்காப்பிய ஆராய்ச்சி' என்னும் நூலில் விவாதித்துள்ளார். அதேபோல் சு. சக்திவேல் மற்றும் ச. இராசேந்திரன் ஆகிய இருவரும் அகம் என்பது ஒரு பொதுப்பெயர் என்றே சுட்டுகின்றனர். சான்றாகத் 'தலைமையகம்' என்பது இரண்டு பொதுப்பெயர்களின் சேர்க்கை என்று 'சொற்கள்'[11] என்னும் நூலில் குறிப்பிடுகின்றனர். எனினும் தொல்காப்பியம் தொடங்கிப் பிற்கால இலக்கண நூல்கள் வரை அகம் என்பது ஏழாம் வேற்றுமை உருபுகளில் ஒன்று என்பதைச் சுட்டிக்காட்டியுள்ளன.

> *கண்கால் புறமகம் உள்ளுழை கீழ்மேல்*
> ........................................................
> ........................................................
> *அன்ன பிறவும் அதன்பால என்மனார்* (தொல்.சொல். 83)

என்று தொல்காப்பியமும்

> *கண்கால் கடைஇடை தலைவாய் திசைவயின்*
> ..................................................................
> ..................................................................
> *உள் அகம் புறம்இல் இடப்பொருள் உருபே* (நன். 302)

என்று நன்னூலும் குறிப்பிடுகின்றன. இதைப் போன்றே தொன்னூல் விளக்கம் உரைக்குறிப்பு (ப.89), இலக்கண விளக்கம் (பக்.186-193) ஆகிய இடங்களில் 'அகம்' என்பது ஓர் உருபு என்றே சுட்டப்பட்டுள்ளது. இவ்விடங்களில் அகம் இடப்பொருள் பற்றிய உருபாகச் சுட்டப்பட்டுள்ளளது.

இலக்கண நூல்களில் இடம்பெற்றுள்ள கருத்துகளையும் இ. மறைமலை, வாற்றுபர்கு ஆகியோரின் கருத்துகளையும் நோக்கும் பொழுது அகம் என்பது ஓர் உருபு என்றே துணியலாம். ஏனெனில் கால மாற்றத்திற்கு ஏற்ப தொல்காப்பியர் காலத்தில் வேற்றுமை உருபாகவும் பெயர்ச் சொல்லாகவும் இருந்த அகம் தற்போது பின்னுருபாகச் செயல்பட்டுப் பல சொற்களை ஆக்குவதால் உருபு என்றே கொள்ளுதல் பொருத்தமுடையதாகும். தொல்காப்பியம் மற்றும் பிற இலக்கண நூல்களும் குறிப்பிடும் இடப்பொருள் விகுதியாக விளங்குகின்றது என்பதை நினைவில் கொள்ளவேண்டும்.

இக்கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு பத்துப்பாட்டில் பயின்றுள்ள அகம் விகுதியின் வழி ஆக்கம் பெற்றுள்ள சொற்களைத் தொகுத்து ஆராயலாம்.

| | | |
|---|---|---|
| சிலம்பகம் | (மலையிடம்) | (திரு.40, மது.299) |
| குன்றகம் | (மலையிடம்) | (திரு.195, மலை.344) |
| உள்ளகம் | (உள்ளிடம்) | (பெரு.6, குறி.61) |
| வையகம் | (உலகம்) | (சிறு.92, முல்.57, நெடு.1) |
| விடரகம் | (மலையிடம்) | (குறி.261) |
| விடரகம் | (குகையிடம்) | (மது.308, மலை.366) |
| வரைப்பகம் | (கோட்டகம்) | (பொரு.240) |
| பூணகம் | (அணியிடம்) | (சிறு.26) |
| வயிற்றகம் | (வயிற்றிடம்) | (சிறு.58) |
| வியலகம் | (விரிந்த இடம்) | (சிறு.112) |
| கதுப்பகம் | (மயிரிடம்) | (பெரு.485) |
| கல்லகம் | (கற்றையிடம்) | (மது.290) |
| அவையகம் | (அவையிடம்) | (மது.508) |
| பிணியகம் | (சிறைக்கோட்டம்) | (பட்.222) |
| நீரகம் | (கடல் சூழ்ந்த உலகம்) | (மலை.81) |

மேற்காணும் சொற்களில் அகம் விகுதி இருபது இடங்களில் பயின்று வந்துள்ளது. அகம் விகுதி முறையே சிலம்பு, குன்று, உள், வை, விடர், வரை, பூண், வயிறு, வியல், கதுப்பு, கல், அவை, பிணி, நீர் ஆகிய அடிச்சொற்களுடன் சேர்ந்து இடப்பொருளில் பயன்பாட்டு நிலையில் ஆக்கச் சொற்களை உருவாக்கியுள்ளது. இச்சொற்கள் அனைத்தும் இடப்பொருளில் பயின்றுள்ளன. எனினும் 'விடரகம்' மட்டும் மலையிடம், குகையிடம் என்னும் இருப்பொருளில் பபயன்படுத்தப்பட்டுள்ளது. இப்பொருள் இரண்டும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையதால் உரையாசிரியர் உரை எழுதும் முறையில் ஏதேனும் குழப்பம் ஏற்பட்டிருக்கும் என்ற ஐயமும் தோன்றுகிறது.

அடுத்துக் 'காழகம்' என்ற சொல் திருமுருகாற்றுப்படையில் (திரு.184) ஆடை என்ற பொருளிலும் சிறுபாணாற்றுப்படை (சிறு.6), மதுரைக்காஞ்சி (மது.598) ஆகிய இரண்டிலும் கரிய இடம் என்ற பொருளிலும் பட்டினப் -பாலையில் (பட்.191) கடாரம்(பர்மா) என்ற பொருளிலும் பயின்று வந்துள்ளது. இச்சொற்களில் இடப்பொருளில் மூன்று இடங்களிலும் ஆடை என்னும் பொருளில் ஓரிடத்திலும் வழங்கப்பட்டுள்ளது.

திருமுருகாற்றுப்படையில் மட்டும் இடம்பெற்றுள்ள காழகம் (ஆடை) சற்று முரண்பாடாக உள்ளது. பத்துப்பாட்டிற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியரும் பொ.வே. சோமசுந்தரனாரும் கலிங்கம் (ஆடை) என்றே குறிப்பிட்டுள்ளனர்.

குறிப்பாகப் பொ.வே. சோமசுந்தரனார் பத்துப்பாட்டுக்கு (திருமுருகாற்றுப்படை) உரை எழுதும் முறையில் இருவகையான உரைமுறை களைப் பயன்படுத்தியுள்ளார். அவை கருத்துரை, அரும்பதஉரை என்பன. அதில் அரும்பத உரையில் காழகம் - ஆடை என்று பொருள் விளக்கம் அளித்துள்ளார்.[12] பத்துப்பாட்டில் மொத்தம் 16 சொற்களுடன் 25 இடங்களில் அகம் விகுதி பயின்றுள்ளது. அதில் 24 இடங்களில் இடப்பொருளிலும் ஓரிடத்தில் மட்டும் ஆடையைக் குறிப்பதாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. மேலும் இச்சொற்கள் அனைத்தையும் பகுத்து நோக்கும் பொழுது 'வையகம்' என்ற சொல்லாக்கம் மட்டும் 'வை' என்னும் வினையுடன் அகம் விகுதி சேர்ந்து ஆக்கம் பெற்றதாகும். மற்றவை அனைத்தும் பெயரடியுடன் அகம் விகுதி சேர்ந்து ஆக்கச்சொற்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

### 'அம்' விகுதி

அம் என்னும் விகுதி குறித்துத் தொல்காப்பியரும் (தொல்.சொல்.204) நன்னூலாரும் (நன்.140) குறிப்பிட்டுள்ளனர். 'அம்' விகுதி பெற்று ஆக்கம் பெற்ற சொற்களை இரண்டு வகையான இயல்பு கொண்டவையாகப் பார்க்கமுடிகிறது.

(1) வினை, பெயரடிகளுடன் அம் விகுதி சேர்ந்து புதிய சொற்களை உருவாக்குதல்.

(2) பொருள் மாற்றம் இல்லாமல் அம் விகுதி பெற்று வருவன (பகுதிப் பொருள் ஏற்பவை).

என்னும் இவ்விரு தன்மைகளில் பத்துப்பாட்டில் அம் விகுதி கொண்டு ஆக்கம் பெற்ற சொற்களைத் தொகுத்து நோக்கப்பட்டுள்ளன.

பத்துப்பாட்டில் அம் விகுதி பெற்று ஆக்கம் பெற்ற சொற்களைத் தொகுத்து ஆராயும் பொழுது பொருள்மாற்றம் இன்றிப் பகுதிப்பொருள் விகுதி என்னும் தன்மையிலேயே அதிகமாகச் சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. அதற்கான சான்றுகளாகச் சிலவற்றை அறியமுடிகிறது.

| | | | |
|---|---|---|---|
| உலகு + அம் | > உலகம் | (பூமி) | (திரு.1,124,பொரு.176) |
| கான் + அம் | > கானம் | (காடு) | (திரு.9, சிறு.225) |
| நெஞ்சு + அம் | > நெஞ்சம் | (மனம்) | (திரு.65,100) |
| அடுக்கு + அம் | > அடுக்கம் | (மலை) | (திரு.42) |
| முரசு + அம் | > முரசம் | (இசைக்கருவி) | (திரு.121) |

| | | |
|---|---|---|
| குன்று + அம் | > குன்றம் (மலை) | (திரு.266) |
| வான் + அம் | > வானம் (ஆகாயம்) | (பொரு.236) |
| முத்து + அம் | > முத்தம் (ஆபரணப்பொருள்) | (சிறு.57) |
| அரவு + அம் | > அரவம் (பாம்பு) | (சிறு.103) |
| கதவு + அம் | > கதவம் (கதவு) | (சிறு.80) |
| எஃகு + அம் | > எஃகம் (ஈட்டி) | (பெரு.119) |

இவையும் இவை போன்ற சொற்களும் 'அம்' விகுதி பெறாமலும் பெற்றும் எவ்வித மாற்றமும் இன்றி ஒரே பொருளை உணர்த்தி நிற்கின்றன. இச்சொற்களில் வரும் அம் விகுதி பொருள் இன்றி இணைந்துள்ளதைக் காணலாம். அம் விகுதி பொருள் இன்றி இணைவது குறித்து,

*தனக்கென்று தனியே பொருள் இல்லாமல் பகுதியின் பொருளையே தனக்கும் பொருளாகக் கொண்டு விளங்கும் சில விகுதிகளைப் பகுதிப்பொருள் விகுதி என்பர். குன்றம் என்பதிலுள்ள 'அம்' விகுதிக்குத் தனியே பொருள் ஒன்றும் இல்லை. குன்று என்பதன் பொருளே குன்றம் என்பதற்கும் பொருளாம்.*[13]

என்று பொற்கோ கூறும் கருத்து மேலும் தெளிவுபடுத்துவதை உணரலாம்.

அடுத்துப் பொருள்மாற்றம் அடைந்து ஆக்கம் பெற்றுள்ள சொற்களைப் பகுத்து நோக்கலாம்.

| | | |
|---|---|---|
| சின் + அம் | > சினம்(சின்ன) | (மது.48, குறி.159) |
| | (கோபம்) | (சிறு.168) |
| நய + அம் | > நயம்(விருப்பு) | (மது.650) |
| ஆய் + அம் | > ஆயம்(மகளிர் குழு) | (பெரு.311) |
| இயக்கு + அம் | > இயக்கம்(குழு) | (மலை.374) |
| சுற்று + அம் | > சுற்றம்(உறவு) | (பெரு.21) |

இது போன்ற தன்மைகளிலும் பத்துப்பாட்டில் 'அம்' விகுதி இணைந்து சொற்கள் உருவாக்கம் பெற்றுள்ளன.

மேலும் 'தமிழ்ச் சொல்லமைவு' என்னும் நூலில் விகுதிகள் சிலவற்றை விளக்கும் வே. வேங்கடராஜூலு அவர்கள் 'அம்' விகுதியால் ஆக்கம் பெற்ற சொற்களைப் பற்றி விளக்குமிடத்து, நோக்கம் என்னும் சொல்லை எடுத்துக்காட்டி விளக்கம் தரும்பொழுது நோழ்+கு+அம் என்று பகுத்துக் காட்டுகின்றார்.[14] இதைப் போன்றே 'பு' விகுதியும் அம் விகுதிக்கு முன்னர் இடம்பெறுவதைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

இதுபோன்ற அமைப்பு நிலைகளில் நோக்கம்(பொரு.124) பத்துப்பாட்டில் சில சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது. 'அம்' விகுதி சேர்ந்து ஆக்கம் பெற்ற சொற்களைப் பத்துப்பாட்டில் பின்வரும் எண்ணிக்கையில் காணலாம்.

திருமுருகாற்றுப்படை -7, பொருநராற்றுப்படை -4, சிறுபாணாற்றுப் படை -5, பெரும்பாணாற்றுப்படை -12, முல்லைப்பாட்டு - 6, மதுரைக்காஞ்சி -13, நெடுநல்வாடை -8, குறிஞ்சிப்பாட்டு - 9, பட்டினப்பாலை -7, மலைபடு கடாம் -15 ஆகிய எண்ணிக்கையில் மொத்தம் 86 க்கும் மேற்பட்ட சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. சொல்லாக்கத்தில் 'அம்' விகுதி விளைவாக்கம் உள்ள பெயராக்க விகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது என்று ச. இராசேந்திரன் கூறும் கருத்து உண்மை என்பதைப் பத்துப்பாட்டை ஆராயும் பொழுது அறிந்துகொள்ள முடிகின்றது.

## 'அர்' விகுதி

தொல்காப்பியரும் (தொல்.சொல்.208) நன்னூலாரும் (நன்.140) 'அர்' என்ற விகுதியைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். தொல்காப்பியர் 'அர்' என்பது படர்க்கைப் பன்மை வினைமுற்று ஈறு என்பார். நன்னூலாரும் இக்கருத்தையே பின்பற்றிக் கூறியுள்ளார்.

பத்துப்பாட்டில் 'அர்' விகுதி துணைகொண்டு ஆக்கம் பெற்ற சொற்களைத் தொகுத்து நோக்கும் பொழுது மூன்று விதமான ஆக்க அமைப்புகளைக் காணமுடிகின்றது. அவை,

(1) பெயருடன் அர் விகுதி சேர்தல்
(2) வினையடியுடன் அர் விகுதி சேர்தல்
(3) பெயரடையுடன் அர் விகுதி சேர்தல்

என்பனவாம். இத்தன்மைகளில் 'அர்' விகுதி இணைந்து சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதைப் பகுத்து ஆராய இடமளிக்கிறது.

தலைமை + அர் > தலைமையர் (திரு.134)
பரிசில் + அர் > பரிசிலர் (திரு.273)
விறலி + அர் > விறலியர் (பொரு.110)
காவல் + அர் > காவலர் (சிறு.47,63)
உழவு + அர் > உழவர் (சிறு.190)
தலை + அர் > தலைவர் (முல்.20)

காதல் + அர் > காதலர் (மது.663)
செவிலி + அர் > செவிலியர் (நெடு.153)

இச்சொற்கள் அனைத்தும் பெயருடன் 'அர்' விகுதி சேர்ந்து ஆக்கம் பெற்றவையாகும்.

அடுத்து வினையடியுடன் 'அர்' விகுதி சேர்ந்து ஆக்கம் பெற்ற சொற்களாக,

தெவ்வு + அர் > தெவ்வர் (பொரு.120, 133)
அகவு + அர் > அகவர் (பொரு.220)
பகை + அர் > பகைவர் (பெரு.450)
தொழு + அர் > தொழுவர் (நெடு.49)
முடுக்கு + அர் > முடுக்கர் (மலை.213)

இவையும் இவை போன்றவற்றையும் சான்றாகச் சுட்டலாம். இதே போல் பெயரடைகளுடன் 'அர்' விகுதி சேர்ந்து சொற்கள் ஆக்கப்படுகின்றன. அதாவது,

இரு + அர் > இருவர் (திரு.178)
நன் + அர் > நன்னர் (முல்.17)

இது போன்ற அமைப்புகளில் சொற்கள் ஆக்கப்படுவதை எடுத்துக்காட்டலாம். இதில் எண்ணுப்பெயரடையுடனும் பண்புப் பெயரடையுடனும் 'அர்' விகுதி சேர்ந்து சொற்கள் ஆக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. 'அர்' விகுதி இணைவால் பத்துப்பாட்டில் 58 க்கும் மேற்பட்ட சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன.

இந்த 'அர்' விகுதி இணைவில் குறிப்பிடத்தகுந்த ஒரு செய்தி என்னவெனில், இரண்டு விகுதிகள் இணையும் தன்மையில் இறுதியாக அர் விகுதி அமையும் என்பதாகும். குறிப்பாக இல், இ, மை போன்ற விகுதிகளின் இணைவால் ஆக்கம் பெற்ற சொற்களுடன் அர் விகுதி சேர்ந்து சொல்லாக்கம் நடைபெற்றுள்ளதைப் பின்வரும் சான்றுகள் மூலம் தெளிவுபடுத்தப் பட்டுள்ளது.

தலை + மை + அர் > தலைமையர் (திரு.134)
ஆண் +மை + அர் > ஆண்மையர் (மது.645)
பரிசு + இல் + அர் > பரிசிலர் (திரு.273)
விறல் + இ + அர் > விறலியர் (பொரு.110)

இச்சொற்கள் அனைத்தும் இரு விகுதிகள் இணைவால் ஆக்கம் பெற்றவையாகும்.

இரு விகுதிகளில் இறுதியாக இடம்பெறுவது அர் விகுதி ஆகும். பன்மை பொருளை உணர்த்தும் விகுதியாக இது அமையும் என்பதை நினைவில் கொண்டு நோக்கினால் உண்மை விளங்கும் என்பதில் ஐயம் இல்லை. இது போன்ற தன்மைகளில் 'அர்' விகுதி சேர்ந்து பத்துப்பாட்டில் சொல்லாக்கம் நிகழ்ந்துள்ளதைக் காணமுடிகின்றது.

## 'அல்' விகுதி

தொழிற்பெயர் விகுதிகளில் ஒன்றாக நன்னூலார் 'அல்' என்ற விகுதியைக் குறிப்பிட்டுள்ளார்.

> அன்ஆன் .......... ........... .........
> ............. ........... ........ அல் அன்
> ............. ...................... .............
> வினையின் விகுதி பெயரினும் சிலவே (நன்.140).

இந்த 'அல்' விகுதி பற்றித் தொல்காப்பியர் ஏதும் குறிப்பிட்டதாக அறியமுடியவில்லை. இ. மறைமலை, ச. இராசேந்திரன், எச். சித்திரபுத்திரன் போன்றோர் எவ்வித குறிப்புகளையும் அளிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இதன் அடிப்படையில் பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள 'அல்' விகுதி வழிச் சொல்லாக்கங்கள் பகுத்து நோக்கப்பட்டுள்ளன.

பத்துப்பாட்டில் முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை ஆகிய இரண்டு பாடல்களைத் தவிர்த்து மற்ற எட்டு பாடல்களில் 'அல்' விகுதி பயின்றுள்ளது. இந்த எட்டு பாடல்களிலும் 15 சொற்கள் 22 இடங்களில் அல் விகுதி பெற்று பயின்றுள்ளது. அல் விகுதி இணைவால் ஆக்கம் பெற்ற சொற்களை மூன்று நிலைகளில் பகுத்து நோக்கலாம். அவை, வினையடியின் பொருளை உணர்த்தும் தொழிற்பெயர் வடிவங்கள், வினையடியின் பொருளில் இருந்து பெயர்ச் சொற்களின் பொருளை உணர்த்தும் வடிவங்கள், பெயரடியுடன் அல் விகுதி சேர்ந்து பொருள் மாற்றம் இன்றி வரும் வடிவங்கள் என்பனவாம்.

| | |
|---|---|
| அஞ்சு + அல் | > அஞ்சல் (திரு.291, குறி.181) |
| தெரி + அல் | > தெரியல் (பொரு.144, சிறு.161, மது.473,718) |
| அரி + அல் | > அரியல் (பெரு.281) |
| ஆடு + அல் | > ஆடல் (நெடு.67) |
| செப்பு + அல் | > செப்பல் (குறி.12) |
| மன்று + அல் | > மன்றல் (குறி.21) |
| அசை + அல் | > அசையல் (குறி.180) |

அடுக்கு + அல் > அடுக்கல் (மலை.19)
சாய் + அல் > சாயல் (மலை.61)
ஆற்று + அல் > ஆற்றல் (மலை.73)
நோக்கு + அல் > நோக்கல் (மலை.240)
தூற்று + அல் > தூற்றல் (மலை.363)

இச்சொற்கள் அனைத்தும் வினையடியுடன் 'அல்' விகுதி சேர்ந்து ஆக்கம் பெற்று வினையடியின் வினைப்பொருளைத் தொழிற்பெயரின் வடிவத்தில் வெளிப்படுத்துகின்றன.

பிணை + அல் > பிணையல் (மாலை) (திரு.30, மலை.349)
தேறு + அல் > தேறல் (கள்ளின் தெளிவு) (சிறு.237, மலை.179)
முனி + அல் > முனியல் (வெறுப்பு) (குறி.243)
ஊக்கு + அல் > ஊக்கல் (ஊக்கம்) (மது.743)

இச்சொற்கள் அல் விகுதி பெற்று பொருள்மாற்றத்தோடு ஆக்கம் பெற்றவை ஆகும்.

அடுத்து 'அல்' இணைந்தும் பொருள்மாற்றம் இல்லாமல் ஆக்கம் பெறும் சொற்களும் பத்துப்பாட்டில் உள்ளன. அதற்குச் சான்றாகத் 'தொடையல் (பொரு.18, குறி.115)' என்பதைச் சுட்டிக்காட்டலாம்.

'அல்' விகுதி இணைவால் பல சொற்கள் வினை வடிவிலிருந்து பெயர் வடிவத்திற்கு மாற்றம் அடைந்து பொருள்மாற்றம் இன்றி இடம்பெற்றுள்ளன. 'அம்' பொருள்மாற்றம் இன்றி வடிவ மாற்றத்தில் மட்டும் ஆக்க விகுதியாகச் செயல்பட்டதை முன்னர்க் கண்டோம். இரண்டையும் ஒப்பு நோக்கும் பொழுது பொருள் நிலையில் மாற்றம் இன்றியும் வடிவ நிலையில் அல் மட்டும் வினைவடிவத்திலிருந்து பெயர் வடிவத்திற்கு மாற்றம் பெற்றுள்ளன. இதன் அடிப்படையில் 'அம்' விகுதி போன்று 'அல்' விகுதியையும் பகுதிப்பொருள் விகுதியாகக் கொள்ளமுடிகிறது.

### 'அன்' விகுதி

இலக்கண நூல்களில் விகுதியாக இடம்பெறும் 'அன்' விகுதிக்கும் சொல்லாக்கத்தில் இடம்பெறும் 'அன்' விகுதிக்கும் வேறுபாடு உள்ளது. இலக்கண நூல்களில் வருவது திரிபு நிலையில் சொற்களை ஆக்கிப் பொருள் மாற்றம் இன்றி இலக்கண அமைப்பில் மாற்றம் செய்வதாகும். ஆனால், சொல்லாக்கத்தில் பயன்படுத்தப்படும் 'அன்' விகுதி பொருள்மாற்றதுடன் சொற்களை ஆக்கும் பெயராக்க விகுதி எனலாம். இங்குச் சொல்லாக்கத்

தன்மையில் செயல்படும் 'அன்' விகுதியே ஆய்வுப்பொருளில் எடுத்துக் கொள்ளப்படுகிறது. ஆண்பால் ஆக்கப்பெயர்களை மட்டும் உருவாக்கம் செய்வதில் 'அன்' விகுதி பயன்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

'அன்' விகுதி இணைவால் ஆக்கம் பெறுவதை மூன்று நிலைகளில் பகுத்து அறியலாம்.

(1) பெயருடன் அன் விகுதி சேர்தல்
(2) பெயரடையுடன் அன் விகுதி சேர்தல்
(3) பெயருடன் இடைச்சொல் மற்றும் அன் விகுதி சேர்தல்

இந்த மூன்று பகுப்புகளின் அடிப்படையில் பத்துப்பாட்டில் அன் விகுதி சேர்ந்து ஆக்கம்பெற்றுள்ள சொற்களைத் தொகுத்து ஆராயலாம்.

## 1. பெயருடன் அன் விகுதி சேர்தல்

| | |
|---|---|
| வேல் + அன் | > வேலன் (திரு.222) |
| ஆடை + அன் | > ஆடையன் (திரு.206) |
| கொடி + அன் | > கொடியன் (திரு.211) |
| நாடு + அன் | > நாடன் (சிறு.107, பெரு.103, மது.524) |
| திரை + அன் | > திரையன் (பெரு.37) |
| இடை + அன் | > இடையன் (பெரு.175) |
| தலை + அன் | > தலைவன் (மது.772, மலை.569) |

இச்சொற்களும் இவை போன்று பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள சொற்களையும் பெயருடன் அன் விகுதி இணைவால் ஆக்கம் பெற்றவை எனச் சுட்டிக்காட்டலாம்.

'தலைவன்' என்பதில் இடம்பெற்றுள்ள அன் விகுதியைத் தலை+வன் எனப் பிரித்து 'வன்' என்பதை ஒரு விகுதியாகச் ச. அகத்தியலிங்கம் குறிப்பிட்டுள்ளார். ஆனால், இங்குத் தலை+வ்+அன் என்னும் தன்மையில் அணுகப்பட்டுள்ளது.

## 2. பெயரடையுடன் அன் விகுதி சேர்தல்

பெயர்ச்சொற்களுக்கு அடையாகச் செயல்படும் சில சொல் வடிவங்களுடன் அன் விகுதி இணைந்து சொற்கள் ஆக்கப்படுகின்றன. இந்த முறையில் பத்துப்பாட்டில் ஆக்கம் நிகழ்ந்துள்ளது என்பதை அறிய சில சான்றுகளைக் காணலாம்.

சிறு + அன் > சிறுவன் (பொரு.130)
நன் + அன் > நன்னன் (மது.618)

இச்சொற்கள் இரண்டும் பண்பை உணர்த்தும் அடைகளான சிறு, நன் ஆகியவற்றுடன் அன் விகுதி இணைந்து தோற்றம் பெற்றுள்ளன.

### 3. பெயருடன் இடைச்சொல் மற்றும் அன் விகுதி சேர்தல்

அன் விகுதி இணைவால் நிகழும் ஆக்கத்தில் சில இடங்களில் பெயரடிக்கும் அன் விகுதிக்கும் இடையில் இடைச்சொற்கள் இடம்பெறுகின்ற தன்மையையும் பத்துப்பாட்டில் உள்ள சொற்களில் சில இடங்களில் காணமுடிகின்றது. இந்த அடிப்படையில் திருமுருகாற்றுப்படையில் மூன்று சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. அவை,

காது + இன் + அன் > காதினன் (திரு.207)
கழல் + இன் + அன் > கழலினன் (திரு.207)
கச்சு + இன் + அன் > கச்சினன் (திரு.207)

என்பனவாகும். இந்த மூன்று சொற்களும் பெயருக்கும் அன் விகுதிக்கும் இடையில் ஐந்தாம் வேற்றுமை உருபான 'இன்' என்னும் இடைச்சொல் பயின்று வந்துள்ளது. காது. கழல், கச்சு ஆகிய மூன்றையும் உடையவன் என்னும் பொருள் தரும் சொற்களாக ஆக்கம் பெற்றுள்ளன.

பத்துப்பாட்டில் அன் விகுதி மொத்தம் 26 இடங்களில் 21 சொற்களில் பயின்று வந்துள்ளது. முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, பட்டினப்பாலை ஆகிய மூன்றிலும் பெயராக்க விகுதியாகப் பயின்று வரவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. மற்ற ஏழு பாட்டுகளிலும் 'அன்' பெயராக்க விகுதியாகச் செயல்பட்டுள்ளதை அறியமுடிகின்றது. மேலும் 'நாடன்' என்னும் சொல் மட்டும் பத்துப்பாட்டில் பரவலாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்த அன் விகுதி பெயராக்க விகுதியாகச் செயல்படுவதைப் பத்துப்பாட்டில் காணமுடிகின்றது.

### 'ஆர்' விகுதி

'ஆர்' என்பதை இலக்கண நிலையில் விளைவாக்கம் உள்ள விகுதியாகக் காண இயலும். ஆனால், ஆக்கப்பெயர் விகுதியாக விளைவாக்கம் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. பத்துப்பாட்டில் இவ்விகுதியின் செயல்பாட்டை நோக்கும் பொழுது ஓர் இடத்தில் மட்டும் ஆக்கப்பெயர் விகுதியாகச் செயல்பட்டுள்ளது.

சிறு + ஆர் > சிறார் (பெரு.223, 248)

இச்சொல் சிறுவர்கள் என்னும் பொருளை உணர்த்தும் சொல்லாக ஆக்கம் பெற்றுள்ளது. மேலும் இச்சொல் அளபெடை தன்மையில் அமைந்துள்ளது என்பதையும் குறிப்பிட வேண்டும். எட்டுத்தொகை நூல்களில் இச்சொல் பரவலாகக் காணப்படுகிறது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். பெரும்பாணாற்றுப்படையில் 'சிறாஅர் (பெரு.227, 248)' இவ்வாறு அளபெடைச் சொல்லாக அமைந்துள்ளது. பண்பை உணர்த்தும் பெயரடையுடன் 'ஆர்' விகுதி சேர்ந்து ஆக்கம்பெற்ற இச்சொல், சமகாலத்தில் 'சிறார் இலக்கியம், சிறார் பாடல், சிறார் விளையாட்டு' என்ற தன்மையில் பயன்பாட்டில் உள்ளதை அறிந்துகொள்ள முடிகின்றது.

கடியலூர் உருத்திரங்கண்ணனார் சொல்லாக்க விகுதிகளை அதிகமாகப் பயன்படுத்திச் சொற்களை ஆக்கி வழங்கியவர் என்ற பெருமைக்கும் உரியவராகத் திகழ்கின்றார். பத்துப்பாட்டில் பெரும்பாணாற்றுப்படை தவிர வேறு ஒன்பது பாட்டுகளிலும் இந்த 'ஆர்' பெயராக்க விகுதியாக இடம்பெறவில்லை.

## 'ஆளர்' விகுதி

இலக்கண நூல்கள் 'ஆளர்' என்பதை விகுதியாகக் குறிப்பிடவில்லை. ஆனால், சொல்லாக்கச் சிந்தனையாளர்களில் இ .மறைமலை, ச. இராசேந்திரன், சு. சக்திவேல், வே. சீதாலட்சுமி ஆகியோர் மட்டும் குறிப்பிட்டுள்ளனர். நன்னூலார் 'பிறவும்' என்ற அடிப்படையில் இவ்விகுதி காலமாற்றத்திற்கு ஏற்ப வளர்ச்சி பெற்ற விகுதியாகக் கருதலாம். இவ்விகுதியைக் கருத்தா விகுதி என்று வே. சீதாலட்சுமி குறிப்பிடுகின்றார். ஒரு செயலைச் செய்பவனைக் குறித்து வருவதால் கருத்தா விகுதி எனப்படுகின்றது என்பார்.

பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள விகுதிகளைத் தொகுத்து ஆராயுமிடத்து 'ஆளர்' விகுதி திருமுருகாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை ஆகிய ஐந்து பாடல்களிலும் இடம் பெற்றுள்ளது.

இருபிறப்பு + ஆளர் > இருபிறப்பாளர் (திரு.182)
கா + ஆளர் > காப்பாளர் (பெரு.301, மது.647)
பெருமுது + ஆளர் > பெருமூதாளர் (முல்.54)
அருவா + ஆளர் > அருவாளர் (பட்.275)

இருபிறப்பு என்ற பெயருடன் ஆளர் விகுதி இணைந்து 'இரண்டு பிறப்பினையுடைய அந்தணர்' என்ற பொருளில் பயின்றுள்ளது. அதேபோல்

காப்பாளர் என்ற சொல் ஊர்க்காப்பாளர் (மது.647), மறைகாப்பாளர் (பெரு.301) ஆகிய இரு இடங்களிலும் முறையே ஊரைக்காக்கும் தொழிலைச் செய்பவர்களையும் வேதமாகிய மறையைக் காக்கும் அந்தணர்களையும் குறிப்பதாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. 'கா' என்ற வினையடியுடன் ஆளர் விகுதி சேர்ந்து காப்பாளார் என்ற சொல் ஆக்கம் பெற்றுள்ளது. முல்லைப்பாட்டில் இரு பெயரடைகளுடன் இணைந்து வயதில் முதிர்ந்தவர்களைக் குறிக்கும் சொல்லாக உருவாக்கம் பெற்றுள்ளது. பட்டினப்பாலையில் 'அருவாநாட்டினர்' என்ற பொருளில் பயன்பட்டுள்ளது. இச்சொற்கள் நான்குடனும் 'ஆளர்' விகுதி 'நபர்' என்ற பொருளை உணர்த்தும் விகுதியாகச் செயல்பட்டுள்ளது.

தற்காலத்தில் விளைவாக்கம் கொண்ட பெயராக்க விகுதியாகப் பயன்பாட்டில் உள்ளது. தொழிற்பெயர் சொற்களுடன் இணைந்து, "*ஆளுதல் அல்லது இயக்குதல், சிறப்புத்தன்மை, தொழில் ஆகியவற்றை இவ்விகுதி குறிக்கிறது*"[15] என்று இ. மறைமலை குறிப்பிடுகின்றார். சான்றாக,

| | |
|---|---|
| ஆளுதல் அல்லது இயக்குதல் | > செயலாளர் |
| சிறப்புத்தன்மை | > கொடையாளர் |
| தொழில் | > ஏற்றுமதியாளர் |

என்பது போன்ற சொற்களை எடுத்துக்காட்டியுள்ளார். இதேபோல் செயலாளர், பொறியாளர், பணியாளர், விற்பனையாளர் போன்ற சொற்களைச் சுட்டிக்காட்டி, இவற்றில் வரும் 'ஆளர்' விகுதி குறித்து, "*பெயருக்குத் தக்கவாறு செய்தல்; செயலாற்றுதல்; பணியாற்றுதல்; கையாளுதல்; இயக்குதல்; உரிமை, உடைமை இவற்றைக் குறிப்பீடு செய்யும்*"[16] என்று ச. இராசேந்திரன் குறிப்பிடுகின்றார்.

இவ்விகுதியை ஆள்+அர் எனப் பிரித்துப் பார்க்க இடம் தரினும் பிரித்துப் பார்த்தல் சரியன்று என்று வே. சீதாலட்சுமி கருதுகின்றார். ஆளர் என்பதைப் பிரித்து நோக்கினால் இலக்கண அடிப்படையில் வரும் ஆள், அர் ஆகிய விகுதிகளாக மாற்றம் அடைந்துவிடும். எனவே ஆக்கவிகுதி என்ற அடிப்படையில் பிரித்து நோக்காது ஒன்றாகவே கொள்ளவேண்டும். பத்துப்பாட்டில் நான்கு சொற்களில் ஐந்து இடங்களில் பயின்று வந்துள்ள 'ஆளர்' விகுதி தற்காலத்தில் அதிக பரவலாக்கம் பெற்று விளைவாக்கம் உள்ள விகுதியாகக் காணப்படுகின்றது.

## 'இ' விகுதி

'இ' என்பதை விகுதியாகத் தொல்காப்பியரும் (தொல்.சொல்.225) நன்னூலாரும் (நன்.140) குறிப்பிடுகின்றனர். தொல்காப்பியர் முன்னிலை

ஒருமை வினைமுற்று ஈறாகவும் நன்னூலார் பெயரினுஞ் சில என்று கூறுமிடத்தும் 'இ' விகுதியாக வழங்கப்பட்டுள்ளது. மொழியியல் அறிஞர் ச. அகத்தியலிங்கம் 'இ' வினையாக்க விகுதியாகச் செயல்படுகின்றது என்கிறார். குறிப்பாகத் தமிழில் 'இ' விகுதிகள் மூலம் வினையாக்கம் நிகழ்வது குறைவு என்றும் வடமொழிப் பெயர்கள் வழி அதிகம் நடைபெறுகிறது என்றும் குறிப்பிடுகின்றார்.[17] மேலும் ச. இராசேந்திரன் 'இ' விகுதியானது பெண்பாற் பெயர் விகுதியாகவும் 'நபர்' என்பதைக் குறிக்கும் விகுதியாகவும் கருவிப்பெயராக்க விகுதியாகவும் செயல்படுகின்றது என்பார்.[18]

இ. மறைமலை அவர்கள் "*பொற்கோ குறிப்பிடும் மூடி, கொள்ளி, நொண்டி ஆகிய சொற்களைப் போல வினையடியும் இகர விகுதியும் சேர்ந்து உருவாகிய சொற்கள் ஆட்சித்துறைச் சொல்லாக்கத்தில் குறிப்பிடத்தக்க அளவு உள்ளன*"[19] என்பார் என்று சுட்டுகின்றார். இதன் அடிப்படையில் நோக்கும் பொழுது பத்துப்பாட்டில் இதுபோன்ற ஆக்கப் பெயர்கள் இடம்பெற்றுள்ளன.

பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள 'இ' விகுதி ஆக்கச் சொற்கள் இருவகைகளில் காணப்படுகின்றன. அவை,

(1) வினையுடன் இ விகுதி சேர்தல்
(2) பெயருடன் இ விகுதி சேர்தல்

என்பனவாம்.

### 1. வினையுடன் இ விகுதி சேர்தல்

| | |
|---|---|
| உருள் + இ | > உருளி (சக்கரம்) (பெரு.47) |
| தோன்றி + இ | > தோன்றி (மலர்) (முல்.97) |
| நாறு + இ | > நாறி (மலர்) (குறி.94) |
| ஞெகிழ் + இ | > ஞெகிழி (தீக்கடைக்கோல்)(மலை.446) |

இச்சொற்கள் அனைத்தும் வினையுடன் 'இ' விகுதி சேர்ந்து பெயர் வடிவம் பெற்றவையாகும். இதில் 'ஞெகிழி' என்பது 'தீக்கடைக்கோல்' என்ற பொருளில் இருந்து மாற்றம் பெற்றுத் தற்காலத்தில் 'பிளாஸ்டிக்' என்ற பொருளில் பயன்படுத்தப்படுகிறது. ஞெகிழ்தல் என்ற தன்மையில் இப்பொருள் மாற்றம் கொண்டு தற்காலத்தில் வழக்கில் உள்ளது.

### 2. பெயருடன் இ விகுதி சேர்தல்

பெயர்ச்சொற்களுடன் 'இ' விகுதி இணைந்து சொல்லாக்கம் நிகழ்வதை இருநிலைகளில் நோக்கலாம். அவை, பெயரிலிருந்து பெயரும், பெயரிலிருந்து வினை வடிவங்களும் தோன்றுதல் ஆகும்.

விறல் + இ > விறலி (ஆடுமகள்) (பொரு.110, சிறு.30, மது.218)
கோள் + இ > கோளி (மரம்) (பெரு.407)
அலர் + இ > அலரி (மலர்) (முல்.10, குறி.149,197, மலை.195)
எழில் + இ > எழிலி (முகில்) (முல்.5)
சிமில் + இ > சிமிலி (நூலுறி) (மது.483)
குமிழ் + இ > குமிழி (நீர்க்குமிழி) (மலை.213,474)
வான் + இ > வானி (மலர்) (குறி.69)

இவை அனைத்தும் பெயருடன் 'இ' விகுதி இணைந்து பொருள்மாற்றம் பெற்று ஆக்கம்பெற்ற சொற்களாகும்.

பெயருடன் 'இ' விகுதி இணைந்து வினைப்பொருள் தரும் வடிவங்களாக,

கவின் + இ > கவினி (அழகுற்று) (மது.326)
இயல் + இ > இயலி (இயங்கி) (மது.666)

இவை இரண்டும் அமைந்துள்ளன.

வினையடியுடன் 'இ' விகுதி சேர்ந்து வினைப்பொருள் தரும் வடிவமாகக் குறிஞ்சிப்பாட்டில் ஒரு சொல் இடம்பெற்றுள்ளது.

வாழ் + இ > வாழி (வாழ்வாயாக) (குறி.1)

இவ்வாறு 'இ' விகுதி பல நிலைகளில் பெயர்ச்சொற்களுடனும் வினையடிகளுடனும் இணைந்து பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை ஆகிய இரண்டும் தவிர மற்ற எட்டு பாட்டுகளில் 23க்கும் மேற்பட்ட இடங்களில் பயின்று வந்துள்ளது. பத்துப்பாட்டில் 'இ' விகுதி இணைவால் குறிப்பிடத்தகுந்த அளவு சொல்லாக்கம் நிகழ்ந்துள்ளது.

### 'இசில்' விகுதி

சங்க இலக்கிய ஒருபொருட் பல சொல்லாக்கத்தில் விகுதிகள் என்னும் கட்டுரையில் க. அன்பழகன் 'இசில்' என்பதை ஒரு விகுதியாக வரையறை செய்துள்ளார்.[20] இவ்விகுதி குறித்து, இலக்கண நூல்களிலும் சொல்லாக்கச் சிந்தனையாளர்களும் எந்தச் செய்திகளையும் வழங்கவில்லை.

இவ்விகுதியின் இணைவால் பத்துப்பாட்டில் மட்டும் அன்றி எட்டுத்தொகை நூல்களிலும் ஒரே சொல் மட்டும் ஆக்கம் பெற்றுள்ளது எனலாம். பத்துப்பாட்டில் சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, குறிஞ்சிப்பாட்டு ஆகிய மூன்றிலும் ஒரே சொல் ஆக்கம் பெற்றுள்ளது.

அடு + இசில் > அடிசில் (உணவு) (சிறு.241, பெரு.476, குறி.204)

இந்தச் சொல் மட்டும் இவ்விகுதி இணைவால் ஆக்கம் பெற்றுள்ளது. இங்கு 'இசில்' என்பதை க. அன்பழகனின் கருத்துப்படி விகுதியாகக் கொண்டு ஆராயப்பட்டுள்ளது.

## 'இயர்','இயல்' விகுதி

இவ்விரு விகுதிகளின் இணைவால் பத்துப்பாட்டில் உள்ள சொற்களைத் தொகுத்து நோக்கும் பொழுது சில சொற்களே ஆக்கம் பெற்றுள்ளது எனலாம். இவ்விகுதிகளில் 'இயர்' குறித்து நன்னூலார் தெரிநிலை வினையெச்ச விகுதி என்று குறிப்பட்டுள்ளார். பிற்கால வளர்ச்சியில் இவை இரண்டும் விகுதிகளாக இடம்பெற்றுள்ளன.

இவற்றில் 'இயர்' என்பது விளைவாக்கம் குறைந்ததாகவும் 'இயல்' என்பது தற்காலத்தில் அதிக விளைவாக்கம் உள்ளதாகவும் காணப்படுகின்றது.

துளங்கு + இயல் > துளங்கியல் (சிறு.262, மலை.43)
அரசு + இயல் > அரசியல் (மது.134)
மென்மை + இயல் > மெல்லியல் (நெடு.98,157)
மயில் + இயல் > மயிலியல் (பட்.149)

இந்த நான்கு சொற்களும் முறையே வினையடி, பெயர், பெயரடை, பெயர் ஆகியவற்றுடன் 'இயல்' விகுதி சேர்ந்து ஆக்கம் பெற்றவையாகும். இதேபோல் 'இயர்' விகுதி சேர்ந்து பாட்டுப் பாடும் மகளிரான பாணிச்சியரைக் குறிக்கும் சொல்லாக,

பாட்டு + இயர் > பாட்டியர் (பாணிச்சியர்) (மது.749)

பாட்டை இயற்றுபவர் என்ற தன்மையில் ஆக்கம் பெற்றுள்ளது எனலாம். இவற்றில் 'இயர்' என்ற விகுதி மதுரைக்காஞ்சியில் மட்டும் இடம்பெற்றுள்ளது. 'இயல்' விகுதி சிறுபாணாற்றுப்படை, மலைபடுகடாம், மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை ஆகிய நான்கிலும் இடம்பெற்றுள்ளது.

## 'இர்' விகுதி

தொல்காப்பியர் முன்னிலைப் பன்மை வினைமுற்று ஈறாகவும் (தொல்.சொல்.226) நன்னூலார் (நன்.140) குறிப்பு வினைமுற்று விகுதியாகவும் குறிப்பிட்டுள்ளனர். மொழியியல் அறிஞர்களான பொற்கோ, ச. அகத்தியலிங்கம், சூ. இன்னாசி போன்றோரும் இவ்விகுதி பற்றிக் குறிப்பிடு கின்றனர். சொல்லாக்கச் சிந்தனையாளர்களான இ. மறைமலை, ச. இராசேந்திரன், எச். சித்திர புத்திரன் போன்றோரும் கூறியுள்ளனர். இவர்களின் கருத்துகளை அடிப்படையாகக்

கொண்டு பத்துப்பாட்டை அணுகும் பொழுது இரண்டு சொற்கள் மட்டும் 'இர்' விகுதி பெற்று ஆக்கம் பெற்றுள்ளன.

மகள் + இர் > மகளிர் (திரு.147, பெரு.312, சிறு.117)
பெண்டு + இர் > பெண்டிர் (பெரு.251, மது.166, மலை.320)

இச்சொற்கள் இரண்டும் பெண்களைக் குறிப்பதாக ஆக்கம் பெற்றுள்ளன. இதில் 'மகளிர்' என்ற சொல் முல்லைப்பாட்டு தவிர மற்ற ஒன்பது பாட்டுகளில் 29 இடங்களில் பயின்றுள்ளது. 'பெண்டிர்' என்ற சொல் பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, மலைபடுகடாம் ஆகிய மூன்றிலும் இடம்பெற்றுள்ளது. இவ் விகுதி வழிஆக்கம் பத்துப்பாட்டில் குறைவாகவே நிகழ்ந்துள்ளது.

**'இல்' விகுதி**

இலக்கண நூல்களில் 'இல்' என்னும் விகுதி வகை குறிப்பிடப்பட வில்லை. எனினும் நன்னூலார் 'அன் முதலாக ஈயர் கயவு மென்பனவும் பிறவும்'(நன்.140) என்று குறிப்பிட்டுள்ளார். இங்குப் 'பிறவும்' என்று குறிப்பிட்டதால் 'இல்' என்னும் விகுதி பிறவும் என்ற தன்மையில் இடம் பெறுவதைக் காணலாம்.

சொல்லாக்க விகுதிகள் குறித்து ஆராய்ந்து வகைப்படுத்தியவர்களில் பொற்கோ, சூ. இன்னாசி, வே. வேங்கடராஜூலு போன்றோர் 'இல்' என்பதை ஆக்கப்பெயர் விகுதியாகக் குறிப்பிட்டுள்ளனர். சூ. இன்னாசி அவர்கள் 'கோயில்' என்ற சொல் 'இல்' விகுதி வழி ஆக்கம் பெற்ற சொல்லாகச் சுட்டியுள்ளார்.

பத்துப்பாட்டில் உள்ள சொல்லாக்க விகுதிகளைத் தொகுத்து நோக்கியதில் மேற்கண்ட அறிஞர்கள் கருத்துப்படி 'இல்' விகுதி இடம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. பெயரடியுடனும் வினையடி யுடனும் 'இல்' விகுதி இணைந்து பத்துப்பாட்டில் நான்கு சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன.

பரிசு + இல் > பரிசில் (திரு.273,295, சிறு.28,261, மலை.181,492)
தூண்டு + இல் > தூண்டில் (பெரு.285, பட்.80, மலை.456)
மன்று + இல் > மன்றில் (மலை.492)
வா + இல் > வாயில் (மலை.491)

இவற்றில் 'பரிசில்' என்பது 'பரிசு' என்ற பெயருடன் சேர்ந்து பொருள்மாற்றம் இன்றி ஆக்கம் பெற்றுள்ளது. மற்ற மூன்று சொற்களும் முறையே தூண்டு, மன்று, வா ஆகிய வினையடிகளுடன் இணைந்து ஆக்கம் பெற்றுள்ளன.

பரிசில் என்பது திருமுருகாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, மலைபடுகடாம் ஆகிய மூன்றிலும் முறையே இரண்டு இடங்களில் பயின்று வந்துள்ளது. மற்ற ஏழு பாட்டுகளிலும் இடம்பெறவில்லை. தூண்டில் என்ற சொல் பெரும்பணாற்றுப்படை, பட்டினப்பாலை, மலைபடுகடாம் ஆகிய மூன்றிலும் முறையே ஓரிடத்திலும் மலைபடுகடாமில் மன்றில், வாயில் ஆகியன முறையே ஓரிடத்திலும் பயின்று வந்துள்ளன. மொத்தமாகப் பத்துப்பாட்டை நோக்கும் பொழுது 11 இடங்களில் 'இல்' விகுதி பெயராக்க விகுதியாகச் செயல்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. மேலும் வே. வேங்கடராஜூலு முதனிலைக்கும் 'இல்' விகுதிக்கும் இடையே 'து' சேர்தல் உண்டு என்பார். இத்தன்மையில் பத்துப்பாட்டில் சொல்லாக்கம் நிகழ்ந்துள்ளதாக அறியமுடியவில்லை.

## 'ஐ' விகுதி

முன்னிலை ஒருமை வினைமுற்று ஈறாகத் தொல்காப்பியரும் (தொல்.சொல்.225) தொழிற்பெயர் விகுதியாக நன்னூலாரும் (நன்.140) குறிப்பிடுகின்றனர். இலக்கண நிலையில் இவர்கள் கூறும் 'ஐ' விகுதி ஆக்க விகுதியாகவும் செயல்படுவதைச் ச. அகத்தியலிங்கம், பொற்கோ, ஆ. வேலுப்பிள்ளை, ச. இராசேந்திரன், வே. வேங்கடராஜூலு போன்றோர் சுட்டுகின்றனர். இவர்களின் கருத்துநிலை அடிப்படையில் பத்துப்பாட்டை அணுகும் பொழுது பல இடங்களில் 'ஐ' ஆக்க விகுதியாகச் செயல் பட்டுள்ளதைக் காணமுடிகின்றது.

கோடு + ஐ > கோடை (பருவ காலம்) (பெரு.272)
தட்டு + ஐ > தட்டை (கிளிக்கடி கருவி) (குறி.43, மலை.9)
தொடு + ஐ > தொடை (மாலை) (குறி.118)
பண் + ஐ > பணை (குதிரை லாயம்) (பட்.31)

இவையும் இவை போன்றவையும் பெயரடிகளுடனும் வினையடிகளுடனும் 'ஐ' விகுதி இணைந்து பல சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. பெரும்பாலும் 'ஐ' விகுதி சேர்ந்து பெயராக்கங்களே நடைபெறுகின்றன. 'அடைதல்' என்பதில் உள்ள வினையடி அடு + ஐ - அடை என்ற தன்மையில் பிரித்து நோக்குகையில் பல வினையடிகளே பெயராகப் பயன்பாட்டில் உள்ளது என்பது நாம் அறிந்த ஒன்றாகும். எனவே வினையடியாக இருப்பினும் அவை 'ஐ' விகுதி பெற்று ஆக்கம் பெற்றவையாக இருப்பின் பெயர்ப் பொருளில்

கணக்கிட்டு நோக்கவேண்டும். இருப்பினும் இவ்விகுதி வழி ஆக்கம் குறைவாகவே உள்ளது.

**'ஓர்' விகுதி**

நன்னூலார் 'பிறவும்' என்று குறிப்பிட்டதனால் 'ஓர்' என்பதை விகுதியாக நோக்கிச் சில சொல்லாக்கங்களைப் பகுத்து ஆராய்ந்துள்ளனர் சொல்லாக்கச் சிந்தனையாளர்கள். ஆ. வேலுப்பள்ளை, சு. சக்திவேல் மற்றும் ச.இராசேந்திரன் போன்றோர் 'ஓர்' என்பதை ஆக்க விகுதியாகக் கருதி யுள்ளனர். பெரியோர், முன்னோர், பின்னோர் என்பது போன்ற சொற்களை எடுத்துக்காட்டி, இவை 'ஓர்' விகுதி இணைவால் ஆக்கம் பெற்றவை என்று குறிப்பிடுகின்றனர். இதன் அடிப்படையில் பத்துப்பாட்டை ஆராயும் பொழுது சில சொற்கள் இவ்விகுதி இணைவால் ஆக்கம் பெற்றுள்ளன. அவை,

நூல் + ஓர் > நூலோர் (குதிரை நூல் வல்லோர்) (பெரு.487)
மேல் + ஓர் > மேலோர் (பாகர்) (மது.381)

என்பனவாகும். இவையும் இவை போன்றவற்றையும் சான்றாகச் சுட்டலாம். பெரும்பாணாற்றுப்படையிலும் மதுரைக்காஞ்சியிலும் முறையே நூலோர், மேலோர் ஆகிய இரண்டு மட்டும் இடம்பெற்றுள்ளன என்பது குறிப்பிடத் தக்கது. மற்ற எட்டு பாடல்களில் 'ஓர்' விகுதி ஆக்கத்தை அறிய முடியவில்லை. இது விளைவாக்கம் அற்ற ஓர் சொல்லாக்க விகுதியாக உள்ளதை இதன் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது.

**'கை/க்கை' விகுதிகள்**

நன்னூலார் பெயரினும் சில என்று குறிப்பிட்டுள்ளதை விளக்குமிடத்து ஆறுமுக நாவலர் 'கை' என்பதை விகுதியாகக் குறிப்பிட்டுள்ளார். இது பற்றிச் சொல்லாக்கச் சிந்தனையாளர்களில் ச. அகத்தியலிங்கம், சூ. இன்னாசி, ச. இராசேந்திரன், வே. சீதாலட்சுமி, க. பாலசுப்பிரமணியன், அ. காமாட்சி, ஆ. வேலுப்பிளை, சு. சக்திவேல் ஆகியோர் கூறும்பொழுது ஆக்க விகுதி என்று குறிப்பிட்டுள்ளனர். அதேபோல் 'க்கை' என்பதை ஆக்கவிகுதியாகச் ச. அகத்தியலிங்கம், சு. சக்திவேல், ச. இராசேந்திரன், அ.காமாட்சி, எச். சித்திர புத்திரன், ஆ. வேலுப்பிள்ளை ஆகியோர் குறிப்பிட்டுள்ளனர். இவர்களின் கருத்தை அடிப்படையாகக் கொண்டு பத்துப்பாட்டில் உள்ள சொற்களைத் தொகுத்து ஆராயும்பொழுது சில இடங்களில் இவ்விகுதி பயின்று வந்துள்ளதைக் காணமுடிகின்றது. அவற்றில் 'கை' விகுதி பெற்றவையாக,

ஈ + கை > ஈகை (கொடை) (மலை.72)
பூன் + கை > பூட்கை (வலிமை) (திரு.247)

இதுபோன்ற சொற்களைச் சுட்டிக்காட்டலாம். அடுத்து, 'க்கை' விகுதி பெற்ற சொற்களாக,

வெறு + க்கை > வெறுக்கை (திரு.263, பெரு.434)
வாழ் + க்கை > வாழ்க்கை (பெரு.40,136, பட்.204)

ஆகியவற்றைக் குறிப்பிடலாம். இது போன்ற ஆக்கங்களும் பத்துப்பாட்டில் விளைவாக்கம் அற்றே காணப்படுகின்றன.

## 'ச்சி' விகுதி

இலக்கண நூல்களில் இவ்விகுதி குறித்துச் செய்தி இடம்பெறவில்லை. இருப்பினும் நன்னூலார் 'பிறவும் (நன்.140)' என்று கூறுவதன் அடிப்படையில் 'ச்சி' என்பதையும் விகுதியாகச் சொல்லாக்க அறிஞர்கள் ஏற்று, சொற்களை ஆக்கும் முறை பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். ச. அகத்தியலிங்கம், ஆ. வேலுப்பிள்ளை, எச். சித்திரபுத்திரன் போன்றோர் இவ்விகுதி பற்றிக் கூறியுள்ளனர். இவர்கள் கருத்தின் வழி பத்துப்பாட்டை அணுகும் பொழுது மலைபடுகடாமில் ஓரிடத்தில் மட்டும் பயின்றுள்ளதை அறியமுடிகின்றது.

சூழ் + ச்சி > சூழ்ச்சி (ஆராய்ச்சி) (மலை.62)

இச்சொல் 'சூழ்' என்ற வினையடியுடன் 'ச்சி' விகுதி சேர்ந்து பெயராக வடிவ மாற்றம் பெற்றும் 'ஆராய்ச்சி' என்ற பொருளில் பயின்று வந்துள்ளது. இது போன்ற ஆக்கங்கள் தற்காலத்தில் வழக்கில் இருப்பினும் பெண்பால் பெயர்களை ஆக்கும் விகுதியாகச் செயல்படுவதை உணரலாம். ஆனால், அதிக விளைவாக்கம் அற்ற ஓர் பெயராக்க விகுதியாக விளங்குவதைக் காணமுடிகிறது.

## 'ஞர்' விகுதி

விகுதி வகைப்பாடுகளில் 'ஞர்' என்பது இலக்கண நூல்களில் இடம்பெறவில்லை என்ற போதிலும் நன்னூலார் 'பிறவும்' என்று குறிப்பிட்டதன் தன்மையில் 'ஞர்' என்பதை ஆக்க விகுதியாகப் பெரும் பான்மையான சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் குறிப்பிட்டுள்ளனர். இவ்விகுதியின் பயன்பாடு தற்காலத்தில் பலவாக இருப்பினும், சங்க இலக்கிய காலத்திலும் இதன் பயன்பாடு இருந்துள்ளதைப் பத்துப்பாட்டில் உள்ள சொற்களைத் தொகுத்து ஆராய்ந்து பார்க்கையில் அறிந்துகொள்ள முடிகின்றது.

பத்துப்பாட்டில் இவ்விகுதியின் பயன்பாடு குறைவாகவே காணப்படுகிறது, இருந்தபொழுதும் சில விகுதிகள் ஒன்றிரண்டு இடங்களில் மட்டுமே செயல்பட்டு வந்துள்ளன. அவைபோல் அன்றி **20**க்கும் மேற்பட்ட இடங்களில் **6** சொற்களில் பயின்று ஆக்க விகுதியாகச் செயல்பட்டுள்ளது. பத்துப்பாட்டில் இவ்விகுதி திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை தவிர மற்ற எட்டு நெடும்பாட்டுகளில் இடம்பெற்றுள்ளது. அச்சொற்களைப் பின்வருமாறு காணலாம்.

இளை + ஞர் > இளைஞர் (பொரு.*100*, முல்.*36*, மது.*311*, குறி.*129*)
வினை + ஞர் > வினைஞர் (சிறு.*257*, பெரு.*211,223*, மது.*262*)
களை + ஞர் > களைஞர் (பெரு.*213*)
வலை + ஞர் > வலைஞர் (பெரு.*274*, மது.*256*, பட்.*197*)
அறி + ஞர் > அறிஞர் (மது.*481*, குறி.*18*, மலை.*287*)
விலை + ஞர் > விலைஞர் (மது.*405*, பட்.*198*)

இச்சொற்கள் அனைத்தும் இ. மறைமலை, ச. இராசேந்திரன் போன்றோர் குறிப்பிடுவது போன்று ஐ, இ ஆகிய எழுத்துக்களில் முடியும் சொற்களில் பயின்றுள்ளதைக் காணமுடிகின்றது. இவற்றில் 'அறி' என்பது மட்டும் 'இ'கரத்தில் முடியும் சொல்லாகவும் மற்றவை 'ஐ'காரத்தில் முடியும் சொல்லாகவும் அமைந்துள்ளன. இளை, அறி, ஆகிய இரண்டும் வினையடி களாகவும் மற்றவை பெயரடியாகவும் விளங்குவதை அறியலாம். எனவே, 'ஞர்' விகுதி பெயர் மற்றும் வினைச்சொற்களுடன் இணைந்து 'நபர்' என்ற பொருளைக் குறிக்கும் சொல்லாக்க விகுதியாக, மனிதர்களைக் குறிக்கும் பெயர்களை ஆக்கப் பயன்படுவதைக் காணலாம்.

இந்த 'ஞர்' விகுதியால் ஆக்கம் பெறும் சொற்களின் தன்மையை 'நர்' என்ற விகுதியின் தன்மையில் ஆக்கம் பெறும் சொற்களின் தன்மையோடு ஒப்பிட்டு நோக்கிய இ. மறைமலை அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

> *அறியுநர் என்று சங்க இலக்கியங்களில் வழங்கிய சொல் இன்று அறிஞர் என்று வழங்கப்படுகின்றது. எனவே ஐ, இ ஆகிய எழுத்துக்களில் முடியும் 'நர்' விகுதி தான் 'ஞர்' விகுதியாக மாறுகிறதோ என்ற ஐயம் ஏற்படுகிறது*[21]

இக்கருத்தை உற்றுநோக்கும் பொழுது அவரின் கருத்தை ஏற்றுக்கொண்டால் மக்களின் மொழி உச்சரிப்பு தன்மையால் அவ்வாறு மாறுவற்கான சாத்தியப்பாடுகள் மிகுதியாக காணப்படுகிறது என்பதையும் மறுத்துவிட முடியாது. தற்காலத்தில் இரண்டு ஆக்க விகுதிகளும் பயன்பாட்டில் உள்ளது

என்பதையும் நாம் நினைவில் கொள்ளவேண்டும். 'ஞர்' விகுதி சங்க இலக்கியம் தொடங்கி இன்றுவரை மனிதர்களின் பெயர்களை ஆக்கும் விகுதியாக மட்டும் செயல்பட்டு வருகின்றது என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

## 'தி' விகுதி

தொழிற்பெயர் விகுதிகளில் ஒன்றாக நன்னூலார் குறிப்பிடுவதாக ஆறுமுக நாவலர் தம் உரையில் சுட்டியுள்ளார். இவ்விகுதியை ஆக்க விகுதியாகச் சொல்லாக்க அறிஞர்கள் கூறுகின்றனர். இதற்குச் சான்றாக 'மறதி' என்பது போன்ற சொற்களை எடுத்துக்காட்டியுள்ளார். இவ்விகுதி பத்துப்பாட்டில் ஓரிடத்தில் மட்டும் பெயராக்க விகுதியாகச் செயல் பட்டுள்ளதைக் காணமுடிகின்றது.

கெடு + தி > கெடுதி (*குறி.144*)

'கெடு' என்ற வினையடியுடன் 'தி' விகுதி சேர்ந்து தீயவை என்ற பொருள் தரும் சொல்லாக ஆக்கம் பெற்றுள்ளது. மற்றொரு சொல்லாக ஆக்கம் பெறினும் அதன் மூலச்சொல்லான 'கெடு' எனும் வினையடியின் பொருளோடு தொடர்புடைய பொருள் தரும் சொல்லாகவே உள்ளது.

தற்காலத்தில் 'தி' விகுதி குறிப்பிடப்படும்படி வளர்ச்சி பெறவில்லை. சங்க இலக்கியக் காலத்தைப் போன்றே 'தி' விகுதியின் வளர்ச்சி இன்றும் உள்ளது. பகுதி, விகுதி, தொகுதி என்பது போன்று சில சொற்களே ஆக்கம் பெற்றுள்ளன. இவ்விகுதி விளைவாக்கம் இல்லா ஒன்று எனல் பொருத்த முடையதாகும்.

## 'ந' 'வ' விகுதிகள்

இவ்விரண்டு விகுதிகளையும் சேர்த்து விளக்கக் காரணம் என்னவெனில் இவை விளிப்பெயர்களில் இடம்பெற்றுள்ள விகுதிகளாகக் காணப்படுகின்றன. 'ந' மற்றும் 'வ' முறையே 'நர்', 'வர்' என்ற விகுதிகளின் கடை குறைந்து விளிப்பெயர் ஏற்கும் விகுதிகளாக மாற்றம் பெற்றுள்ளன.

பத்துப்பாட்டில் இவ்விகுதிகள் பயின்றுவந்துள்ளன. 'ந' விகுதி பெற்று ஒரு சொல்லும் 'வ' விகுதி பெற்று மூன்று சொற்களும் முறையே மூன்று, நான்கு இடங்களில் பயன்பாட்டில் உள்ளதைக் காணமுடிகின்றது.

பொரு + ந > பொருந (*திரு.276, பொரு.3, மது.138*)

பொருநர் என்ற பெயர்ச்சொல் 'ர்' என்னும் கடை குறைந்து 'பொருந' என்னும் விளிப்பெயர்த் தன்மையில் அமைந்துள்ளது. திருமுருகாற்றுப்படை,

பொருநராற்றுப்படை, மதுரைக்காஞ்சி ஆகிய மூன்றிலும் இச்சொல் பயின்று வந்துள்ளது. அதேபோல் 'வ' என்ற விகுதியாக மூன்று சொற்களில் பயின்றுள்ளது.

சிறு + வ > சிறுவ (திரு.258)
தலை + வ > தலைவ (திரு. 260, பொரு.57)
கிழ + வ > கிழவ (பொரு.63)

இச்சொற்கள் முறையே சிறு, தலை, கிழ ஆகிய மூன்றுடன் 'வ' விகுதி இணைந்து விளிப்பெயராக ஆக்கம் பெற்றுள்ளன. 'வன்' என்பதில் 'ன்' குறைந்து இவ்வாறு ஆக்கம் பெற்றுள்ளன. 'சிறுவ' என்பது சிறிய குழந்தை என்னும் பொருளிலும் தலைவ, கிழவ என்பது தலைவன் என்ற பொருளிலும் பயின்று வந்துள்ளன. இதுபோன்ற ஆக்கங்கள் தற்காலத்தில் இருப்பதாகக் காணமுடியவில்லை. ஏனெனில் இவை செய்யுள் மரபிற்கு மட்டும் உரிய ஓர் சொல்லமைப்பு தன்மையில் உள்ளது எனலாம். தற்காலத்தில் விளிப்பெயர்கள் பயன்பாட்டில் இன்மையே இவ்விகுதிகள் பயன்பாட்டில் இல்லாமைக்குக் காரணமாகும்.

## 'நர்' விகுதி

இலக்கண நூல்களில் 'நர்' விகுதி வெளிப்படையாகக் குறிப்பிடப் படவில்லை. இருப்பினும் விகுதி வகைகளைப் பட்டியலிட்டுக் காட்டும் நன்னூலார் குறிப்பிட்ட விகுதிகளை வகைப்படுத்திக் கூறிவிட்டு, கால மாற்றத்திற்கு ஏற்ப விகுதிகளின் வளர்ச்சி மாறும் என்பதால் 'பிறவும்' என்று குறிப்பிட்டுள்ளார், ஆனாலும், 'நர்' என்ற விகுதி சங்க இலக்கியங் களிலேயே பரவலாக்கம் பெற்ற ஒன்றாக இருக்கையில் ஏன் பவணந்தியார் உள்ளிட்ட இலக்கண நூலாசிரியர்கள் அதை விகுதியாகப் பதிவு செய்யவில்லை எனத் தெரியவில்லை.

'நர்' விகுதி பற்றி இ.மறைமலை, ச. இராசேந்திரன், பொற்கோ போன்றோர் குறிப்பிட்டுள்ளனர். இவ்விகுதி வினையடிகளுடன், வினையெச் சங்களுடன் இணைந்து சொற்களை ஆக்குகின்றது என்று கூறுகின்றனர். ச. இராசேந்திரன் அவர்கள் 'நபர்' என்ற பொருள் கொண்டு பயன்படுவதாகச் செயல்படுகின்றது என்பார். இ. மறைமலை அவர்கள் வினையெச்சங்களுடன் இணையும் பொழுது மகர ஒற்று மறைந்துவிடும் என்பார். இவ்வாறு பல நிலைகளில் 'நர்' விகுதி பற்றிப் பரவலாகக் கருத்துகள் நிலவுவதைக் காணமுடிகின்றது.

இக்கருத்துகளின் அடிப்படையில் பத்துப்பாட்டில் உள்ள சொற்களைத் தொகுத்து ஆராயும்பொழுது 'நர்' விகுதியின் செயல்பாடு 40க்கும் மேற்பட்ட இடங்களில் காணப்படுவதை அறியமுடிகின்றது. 'நர்' விகுதியால் ஆக்கம் பெற்ற சொற்களைச் சான்றாக,

| | |
|---|---|
| உறு + நர் | > உறுநர் (திரு.4) |
| செறு + நர் | > செறுநர் (திரு.5, மது.152) |
| பொரு + நர் | > பொருநர் (திரு.69, சிறு.203, மது.99) |
| நசையு + நர் | > நசையுநர் (திரு.270, பொரு.66) |
| வதியு + நர் | > வதியுநர் (முல்.80, மலை.492) |
| பகர் +நர் | > பகர்நர் (மது.117,506,513) |
| ஓம்பு + நர் | > ஓம்புநர் (மலை.426) |
| கழியு + நர் | > கழியுநர் (பெரு.66) |
| புனை + நர் | > புனைநர் (மது.512) |
| புகழு + நர் | > புகழுநர் (மலை.73) |
| இயங்கு + நர் | > இயங்குநர் (மலை.18) |

இச்சொற்களும் இவை போன்றவையும் 'நர்' விகுதியால் ஆக்கம் பெற்ற சொற்களுக்கு எடுத்துக்காட்டலாம். இ. மறைமலை அவர்களின் கருத்துப்படி இச்சொற்களை நோக்கும் பொழுது பொரு, அரி, பகர், கடை, புனை, முடி ஆகிய வினையடிகளுடன் 'நர்' விகுதி இணைந்து ஆக்கம் பெற்றுள்ளதையும் மற்றவை வினையெச்ச வடிவங்களுடன் 'நர்' விகுதி இணைந்து ஆக்கம் பெற்றுள்ளதையும் காணமுடிகின்றது. இந்த இருநிலைகளில் பத்துப்பாட்டில் 'நர்' விகுதியால் சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன.

பத்துப்பாட்டில் 'நர்' விகுதியால் ஆக்கம் பெற்ற சொற்களாக மேற்கூறப்பட்டதுடன் சேர்த்து மொத்தம் 27 சொற்கள் 40க்கும் மேற்பட்ட இடங்களில் பயின்றுள்ளன. நெடுநல்வாடை, பட்டினப்பாலை ஆகிய இரண்டும் தவிர மற்ற எட்டுப் பாடல்களிலும் 'நர்' விகுதி பயின்றுள்ளது. திருமுருகாற்றுப்படை முதலாக முறையே 6, 1, 1, 1, 1, 9, 2, 11 என்ற எண்ணிக்கையில் 'நர்' விகுதியால் சொல்லாக்கம் நிகழ்ந்துள்ளதை அறியமுடிகின்றது. 'அம்' விகுதிக்கு அடுத்த நிலையில் பத்துப்பாட்டில் அதிக விளைவாக்கம் கொண்டது 'நர்' விகுதி ஆகும்.

தற்காலத்தில் இயக்குநர், ஓட்டுநர், நடத்துநர், மருந்தாக்குநர் என்பது போன்று 'நர்' விகுதியின் இணைவால் சொற்கள் ஆக்கம் பெற்றுப் பயன்பாட்டில் உள்ளன.

## 'ப்பு/பு' விகுதி

தொழிற்பெயர் விகுதியாகவும் தெரிநிலை வினையெச்ச விகுதியாகவும் 'பு' பயின்று வரும் என்பது நன்னூலார் கருத்து என்று ஆறுமுகநாவலர் குறிப்பிடுகின்றார். ஆனால், 'ப்பு' என்பது சொல்லாக்க அறிஞர்கள் வகுத்துக்கொண்ட விகுதி வகைப்பாடுகளில் அடங்கும். இலக்கண நூல்களில் 'ப்பு' விகுதியாக இடம்பெறவில்லை. இவ்விரு விகுதிகளையும் ஆக்க விகுதிகளாகச் ச. அகத்தியலிங்கம், ச. இராசேந்திரன், ஆ. வேலுப்பிள்ளை, எச். சித்திரபுத்திரன் ஆகியோர் குறிப்பிடுகின்றனர்.

இவர்களின் விகுதி பகுப்பு அடிப்படையில் பத்துப்பாட்டை அணுகும் பொழுது சில சொற்கள் இவ்விகுதிகளின் துணையுடன் ஆக்கம் பெற்றுள்ளன என்று அறியமுடிகின்றது.

*வரை + ப்பு > வரைப்பு (உலகு) (பெரு.18)*

என 'ப்பு' விகுதி இணைந்து 'உலகு' என்ற பொருளிலும்

*கண் + பு > கண்பு (சம்பங்கோரை) (பெரு.220)*
*பணி + பு > பணிபு (அடக்கம்) (பட்.274)*
*காண் + பு > காண்பு (காட்சி) (மலை.315)*

ஆகிய மூன்று சொற்களும் கண், பணி, காண் ஆகிய சொற்களுடன் 'பு' விகுதி இணைந்து புதிய சொற்களாக ஆக்கம் பெற்றுள்ளன. இவ்விகுதி பெயருடனும் வினையடியுடனும் சேர்ந்து பெயர்ச்சொற்களை ஆக்கும் என்பதை இதன் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது.

'பு', 'ப்பு' இரண்டிற்கும் இலக்கண நிலையில் நோக்கும் பொழுது புணர்ச்சியில் வல்லொற்று இரட்டிப்பு என்னும் தன்மையில் பார்க்கமுடிகிறது. ஆனால் சொல்லாக்கத்தில் பொருள் மாற்றம் கருதி இரண்டையும் தனித்தனி விகுதிகளாகப் பிரித்துள்ளனர்.

தற்காலத்தில் 'பு' விகுதியைக் காட்டிலும் 'ப்பு' விகுதி பயன்பாட்டில் மிகுதியாகக் காணப்படுகின்றது. சான்றாகப் படிப்பு, அறிவிப்பு, இருப்பு, உழைப்பு, அமைப்பு என்பது போன்ற சொற்களைக் பட்டிலிட்டுக் காட்டமுடியும். இவ்விரு விகுதிகளில் 'ப்பு' விளைவாக்கம் உள்ள விகுதி ஆகும்.

## 'மர்' விகுதி

இவ்விகுதி இலக்கண நிலையில் 'குறுகல் விகாரம்' என்ற தன்மையில் 'மார்' விகுதி 'மர்' என்ற வடிவத்தில் விகுதியாகப் பயின்றுள்ளது. 'மார்'

விகுதியைப் பெயர்ச்சொற்களில் பயின்று வரும் விகுதியாக நன்னூலார் குறிப்பிடுகின்றார். தற்கால ஆக்க விகுதிகளில் 'மர்' என்னும் விகுதி இடம் பெறவில்லை. பத்துப்பாட்டில் இரு சொற்களில் பயின்று வந்துள்ளது. அவை,

காண் + மர் > காண்மர் (காண்பவர்) (மது.513)
கொள் + மர் > கொண்மர் (கொள்பவர்) (மது.514)

என்பனவாகும். இச்சொற்கள் இரண்டும் மதுரைக்காஞ்சியில் பயின்றுள்ளன. இவ்விகுதி விளைவாக்கம் இல்லா விகுதியாகும்.

**'மை' விகுதி**

பண்புப்பெயர் விகுதிகளில் ஒன்றாக இலக்கண நிலையில் பயன்றுவரும் 'மை' விகுதி சொல்லாக்க நிலையில் பெயராக்க விகுதியாகவும் செயல்பட்டு வருவதை அறிந்துகொள்ள முடிகின்றது. இவ்விகுதி பற்றி இ. மறைமலை, ச. அகத்தியலிங்கம், சூ. இன்னாசி, பொற்கோ போன்றோர் குறிப்பிடுகின்றனர்.

இத்தன்மையின் அடிப்படையில் பத்துப்பாட்டில் உள்ள சொற்களைத் தொகுத்து நோக்கும் பொழுது இரு சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. அவை,

தலை + மை > தலைமை (திரு.134)
ஆண் + மை > ஆண்மை (மலை.423)

இச்சொற்கள் இரண்டும் தலை, ஆண் ஆகிய பெயர்ச்சொற்களுடன் 'மை' விகுதி இணைந்து பண்புப்பொருள் குறிக்கும் சொற்களாக ஆக்கம் பெற்றுள்ளன. இவ்விகுதி தற்காலத்தில் பெண்மை, உரிமை, குடிமை, தனிமை, நுண்மை, பெருமை என்பது போன்ற சொற்களை உருவாக்குவதில் பயன்பாட்டில் உள்ளதை அறியமுடிகின்றது.

மலைபடுகடாமில் இடம்பெற்றுள்ள 'ஆண்மை' என்ற சொல்லிற்கு ஒப்புமையாக்கமாகத் தற்காலத்தில் 'பெண்மை' என்ற சொல் வழங்கி வருவதாக அறியமுடிகிறது.

**'வி' விகுதி**

தொழிற்பெயர் விகுதிகளில் ஒன்றாக 'வி' என்பதை நன்னூலார் குறிப்பிட்டுள்ளார். இதை ஆறுமுக நாவலர் தெளிவாக்கியுள்ளார். இவ்விகுதியைச் சொல்லாக்க விகுதியாகச் சொல்லாக்க அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளார். குறிப்பாகச் ச. அகத்தியலிங்கம், பொற்கோ போன்றோர்

கூறும் கருத்தை அடிப்படையாகக் கொண்டு பத்துப்பாட்டை அணுகும் பொழுது சில இடங்களில் 'வி' விகுதி சொல்லாக்கங்களைக் காணமுடிகிறது.

கேள் + வி > கேள்வி (செவி) (சிறு.228)
புரவி + வி > புரவி (குதிரை) (பெரு.320, மது.660)
கரு + வி > கருவி (தொகுதி) (பெரு.24, பொரு.29,236)

இவையும் இவை போன்ற சொற்களையும் 'வி' விகுதி வழிச் சொல்லாக் கத்திற்குச் சான்றாகச் சுட்டலாம். இவ்விகுதி வழி ஆக்கம் விளைவாக்கம் குறைந்த ஒன்றாக விளங்குவதை அறியமுடிகின்றது.

### 'வை' விகுதி

'வை' என்பதைத் தொழிற்பெயர் விகுதிகளில் ஒன்றாக நன்னூலார் குறிப்பிடுகின்றார். சொல்லாக்க முறையில் இவ்விகுதி ஆக்க விகுதியாகப் பயன்பாட்டில் உள்ளதைப் பல அறிஞர்கள் சுட்டியுள்ளனர். அவர்களின் கருத்துப்படி பத்துப்பாட்டில் உள்ள சொற்களை அணுகும் பொழுது பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் ஆகிய இரண்டிலும் மூன்று சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன.

சிதர் + வை > சிதர்வை (கந்தை) (பெரு.468)
மித + வை > மிதவை (சோறு) (மலை.417)
நட + வை > நடவை (வழி) (மலை.432)

இச்சொற்கள் மூன்றும் முறையே சிதர், மித, நட ஆகிய வினையடிகளுடன் 'வை' விகுதி இணைந்து கந்தை, சோறு, வழி ஆகிய பொருள்களில் பயின்றுள்ளன. இவ்விகுதி விளைவாக்கம் குறைந்த ஆக்க விகுதியாக உள்ளதை அறியமுடிகின்றது.

### தொகுப்புரை

- விகுதிவழிச் சொல்லாக்கம் என்னும் இவ்வியலில் விகுதிகளின் பயன்பாட்டுத் தன்மை கருதி விகுதிகளை இருநிலைகளில் காணமுடிகின்றது. அவை, இலக்கண நிலை, ஆக்க நிலை என்பன.
- சொல்லாக்க விகுதிகளின் வகைப்பாடுகளின் எண்ணிக்கை நிலையில் பல்வேறு வேறுபாடுகள் அறிஞர்களிடையே நிலவுகின்றன.
- விகுதிகளை, அவற்றின் தன்மை கருதி இருநிலைகளில் பகுத்துக் காண முடிகின்றது. அதாவது, பொருள்மாற்றம் இல்லா விகுதிகள் (பகுதிப் பொருள் விகுதிகள்), பொருள்மாற்றம் கொண்ட விகுதிகள் ஆகிய இரு வகைகளாகும்.

- சொல்லாக்கச் சிந்தனையாளர்களின் விகுதி குறித்த செய்திகளைத் தொகுத்து நோக்கும் பொழுது அகம், அம், இ, மை, இயல், கை என்பது போன்ற சில விகுதிகளை அனைவரும் குறிப்பிட்டுள்ளனர்.
- 'இ' என்பது வினையாக்க விகுதியாகச் செயல்படுகின்றது எனச் ச. அகத்தியலிங்கம், பொற்கோ, சு. இன்னாசி ஆகியோர் குறிப்பிடுகின்றனர்.
- தற்காலத்தில் பயன்பாட்டில் உள்ள சொல்லாக்க விகுதிகளைப் பத்துப் பாட்டில் உள்ள விகுதிகளோடு ஒப்புநோக்கி ஆராயும் பொழுது 29 வகையான ஆக்க விகுதிகள் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.
- அகம், அம், அர் ஆகிய மூன்று விகுதிகள் பத்து நெடும்பாடல்களிலும் இடம்பெற்றுள்ளன.
- அம், அர், அல், ஞர், நர் ஆகிய விகுதிகள் அதிக விளைவாக்கம் காண்டவையாகப் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ளன.
- பத்துப்பாட்டில் விகுதிவழியில் பெயராக்கம் மட்டுமே நிகழ்ந்துள்ளதைக் காணமுடிகின்றது.
- பத்துப்பாட்டில் 'அகம்' விகுதி பெயர்ச்சொற்களுடன் மட்டுமே இணைந்து ஆக்கச் சொற்களை உருவாக்கப் பயன்பட்டுள்ளது.
- பத்துப்பாட்டில் 'நர்' விகுதி வினை வடிவங்களுடன் மட்டுமே இணைந்து பெயர்சொற்களை உருவாக்கியுள்ளது
- பத்துப்பாட்டில் வினையாக்கம் விகுதிவழியில் குறிப்பிடும்படியாக நடை பெறவில்லை எனலாம்.
- கவினி, இயலி ஆகிய இரண்டு சொற்கள் மட்டும் 'இ' விகுதி பெற்று வினை வடிவங்களாக ஆக்கம் பெற்றுள்ளன.
- பத்துப்பாட்டின் புலவர்கள் அனைவருமே விகுதி வழி ஆக்கத்தில் தங்களுடைய பங்களிப்பை வழங்கியுள்ளனர்.
- பெரும்பாணாற்றுப்படையில் இருபது விகுதிகளின் துணைகொண்டு சொல்லாக்கம் நடைபெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.
- விளிப்பெயர் விகுதி என்ற தன்மையில் 'ந்', 'வ்' ஆகிய இரண்டும் பயின்றுள்ளன.
- பத்துப்பாட்டில் சொல்லாக்க விகுதிகளாகப் பயன்பட்ட தி, ந, வ ஆகியவை தற்காலத்தில் வழக்கில் இல்லை.

- விகுதிவழி ஆக்கம் பற்றிப் பத்துப்பாட்டில் ஆராயும்பொழுது விகுதிகளின் வளர்ச்சி கால மாற்றத்திற்கு ஏற்ப அமைவதை உணரமுடிகின்றது.
- யாப்பியல் தேவையை நிறைவு செய்யும் பொருட்டுச் சில விகுதிகள் செயல் பட்டுள்ளன.
- பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள சொல்லாக்கத்தில் விகுதிகளின் பங்களிப்பு குறிப்பிடத்தக்க அளவு உள்ளதை அறிந்துகொள்ள முடிகின்றது.
- தற்காலத்தில் நிகழும் விகுதிவழிச் சொல்லாக்கத்திற்கான அடிப்படைகள் பத்துப்பாட்டிலேயே காணப்படுகிறது என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

**அடிக்குறிப்புகள்**

1. நன்னூல், ஆறுமுக நாவலர் உரை, ப.90.
2. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், தமிழ்மொழி வரலாறு, பக்.173-174.
3. மேலது, ப.179.
4. ச. அகத்தியலிங்கம், மொழியியல், சொல்லியல், பெயரியல், பக்.22-23.
5. மேலது, ப.10.
6. பொற்கோ, இலக்கண உலகில் புதிய பார்வை, தொகுதி 2, ப.84.
7. சூ. இன்னாசி, சொல்லியல், பக்.159-60.
8. வே. சீதாலட்சுமி, நன்னூலாரின் கலைச்சொல்லாட்சி, ப.23.
9. இரா. இளங்குமரன், தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள், ப.46.
10. இ. மறைமலை, சொல்லாக்கம், ப.61.
11. சு. சக்திவேல், ச. இராசேந்திரன், சொற்கள், பக்.71-72.
12. பத்துப்பாட்டு முதல் தொகுதி, பொ.வே. சோமசுந்தரனார் உரை, ப.76.
13. பொற்கோ, இலக்கண உலகில் புதிய பார்வை, தொகுதி 1, பக்.89-90.
14. வே. வேங்கடராஜூலு, தமிழ்ச் சொல்லமைவு, ப.50.
15. இ. மறைமலை, சொல்லாக்கம், ப.56.
16. ச. இராசேந்திரன், தமிழில் சொல்லாக்கம், ப.238.
17. ச. அகத்தியலிங்கம், மொழியியல், சொல்லியல், வினையியல், பக்.30-32.
18. ச. இராசேந்திரன், தமிழில் சொல்லாக்கம், ப.240.
19. இ. மறைமலை, சொல்லாக்கம், ப.60.
20. க. அன்பழகன், தொல்காப்பியம் சங்கத் தமிழ் ஒரு பார்வை, ப.228.
21. இ. மறைமலை, சொல்லாக்கம், ப.59.

சொல்லாக்கச் சிந்தனையின் அடிப்படையில் பத்துப்பாட்டை அணுகும்பொழுது பலவகை சொல்லாக்கங்கள் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. அந்தப் பலவகை சொல்லாக்கங்கள் மொழி வளர்ச்சிக்கும் சொற்கோவைப் பெருக்கத்திற்கும் பெரிதும் துணை நிற்கின்றன. அப்படித் துணைபுரியும் சொல்லாக்கக் கூறுகள் இலக்கண அடிப்படை, பிறமொழிச் சொற்களைக் கடன் பெறுதல், இருமொழிச் சொற்கள் இணைத்தல், சொற்களை எளிமை கருதிச் சுருக்கி வழங்குதல் போன்று பலவகையாகக் காணப்படுகின்றன.

இந்தச் சொல்லாக்கக் கூறுகள் ஒவ்வொரு காலத்திற்கு ஏற்பவும் புதிதாகத் தோற்றம் பெற்றும் வழிக்கிழந்தும் காணப்படுவதை அறியமுடிகின்றது. இருப்பினும் தற்காலத்தில் வழக்கில் இருக்கும் சொல்லாக்கச் சிந்தனைகளைப் பத்துப்பாட்டில் ஒப்பிட்டு ஆராயும்பொழுது பல உண்மைகளை விளங்கிக் கொள்ளமுடிகிறது. தற்காலத்தில் பயன்பாட்டில் உள்ள பல சொல்லாக்க வகைகள் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. இவை தற்காலத்தில் உள்ள சொல்லாக்கங்களுக்கு முன்னோடியாகவும் அடிப்படையாகவும் அமைவதை உணரமுடிகிறது.

தற்காலத்தில் சொல்லாக்கச் சிந்தனையாளர்களின் சொல்லாக்க வகைபாடுகளைப் பத்துப்பாட்டில் உள்ள சொற்களைப் பிரித்தறிந்து ஒப்பிட்டுப் பார்க்கையில் பலவகையான சொல்லாக்கங்கள் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ளதை அறியமுடிகின்றது. அவற்றில் பெரும்பான்மை கருதி முன் இயல்களில் ஆராயப்பட்டுள்ள சொல்லாக்கங்கள் தவிர மற்ற சொல்லாக்க வகைகள் இவ்வியலில் பின்வருமாறு ஆராயப்பட்டுள்ளது.

பதினொரு வகைச் சொல்லாக்கங்கள் பத்துப்பாட்டில் பயின்றுள்ளது குறித்து இங்கு நோக்கலாம். அவை,

இரட்டிப்பாக்கம்
கடனாக்கம்
கடன்சொற்களும் வடிவமாற்றமும்(தமிழ்ப்படுத்தம்)
கலப்பாக்கம்

மொழிபெயர்ப்பாக்கம்
மொழிமுதல் நீட்சி சொல்லாக்கம்
அளபெடைச் சொல்லாக்கம்
முன்னொட்டாக்கம்
எளிமையாக்கம்
ஒப்புமையாக்கம்
பதிலீட்டாக்கம்

என்பனவாகும். இந்தப் பதினொரு வகை சொல்லாக்கங்கள் சிறுபான்மை கருதி இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது. இச்சொல்லாக்கங்களை ஒவ்வொன்றாக விரிவாகப் பகுத்துப் பின்வருமாறு ஆராயப்பட்டுள்ளன.

## இரட்டிப்பாக்கம்

மரபிலக்கணங்களில் காணப்படும் இரட்டைக்கிளவி, அடுக்குத்தொடர் ஆகிய இரண்டும் இரட்டிப்பாக்கம் என்னும் சொல்லாக்க உத்தியில் இடம்பெறுவதைக் காணலாம். இவை இரண்டும் பார்ப்பதற்கு ஒன்றுபோல் தோன்றினும் தனிச்சொல் வடிவம், இலக்கணச் செயல்பாடு, தனித்தியங்கும் தன்மை, பொருள் இவற்றில் பெரும் மாறுபாடு கொண்டுள்ளன. இவற்றில் முதலாவதாக அடுக்குத்தொடர் அமைப்பில் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள சொல்லாக்க முறைகள் பகுத்து நோக்கப்பட்டுள்ளன.

## அடுக்குத் தொடர்

வடிவ அமைப்பில் எவ்விதப் பெரும் மாறுபாடும் இன்றி ஒரு சொல் அடுத்தடுத்து இரண்டோ இரண்டிற்கு மேற்பட்ட முறைகளோ பயின்று வரும்பொழுது அடுக்குத்தொடர் உருவாகிறது. அடுக்குத் தொடரின் வருகைமுறையும் அடுக்குகளின் எண்ணிக்கையும், பொருள் வெளிப்பாடும் மரபிலக்கணங்களில் சுட்டப்பெற்றுள்ளன. அடுக்குத்தொடர் இசைநிறையாகவும் அசைநிலையாகவும் பொருளோடு புணர்ந்தும் வரும் என்பதும் மூன்று முறை வரை அடுக்கி வரும் என்பதும் தொல்காப்பியம் பின்வரும் நூற்பாவில் சுட்டியுள்ளதை நோக்கின் தெளியமுடிகிறது.

இசைநிறை அசைநிறை பொருளொடு புணர்தல்என்று
அவைமூன் றென்ப ஒருசொல் அடுக்கே (தொல்.சொல்.411).

அடுக்குத் தொடர்களின் பொருள் தரும் நிலையில் நன்னூல் தொல்காப்பியத் திலிருந்து வேறுபட்டுள்ளது. அடுக்குத்தொடர் விரைவு, வெகுளி, உவகை,

அச்சம், அவலம், கோபம், மகிழ்ச்சி, துன்பம் முதலிய பொருள்களில் வரும் என்றும் இரண்டு முதல் நான்கு முறைகள் வரை அடுக்கி வரும் என்றும் நன்னூல் குறிப்பிடுகின்றது. அதைப் பின்வரும் நூற்பாவில் சுட்டியுள்ளதைக் காணமுடிகிறது.

அசைநிலை பொருள்நிலை இசைநிறைக்கு ஒருசொல்
இரண்டு மூன்று நான்கு எல்லைமுறை அடுக்கும் (நன். 395)

அடுக்குத்தொடர் அமைப்பில் பத்துப்பாட்டில் மொத்தம் 26 தொடர்கள் 31 இடங்களில் பயின்று வந்துள்ளன. பொருநராற்றுப்படையில் ஏழு இடங்களிலும் மதுரைக்காஞ்சியில் ஏழு இடங்களிலும் சிறுபாணாற்றுப்படையில் நான்கு இடங்களிலும் மலைபடுகடாமில் மூன்று இடங்களிலும் பட்டினப்பாலை, முல்லைப்பாட்டு, பெரும்பாணாற்றுப்படை ஆகிய மூன்று நூல்களிலும் முறையே இரண்டு இடங்களிலும் திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை ஆகிய இரண்டு நூல்களிலும் முறையே ஓரிடத்திலும் பயின்று வந்துள்ளன. இந்த 26 தொடர்களில் வேறு வேறு (பட். 214, மது. 617), வயின் வயின் (சிறு. 163, பொரு. 180), அவை அவை (மலை. 267, பொரு. 107), தரத்தர (மது. 426, பொரு. 127), வழி வழி (மது. 194, 324) ஆகிய ஐந்து மட்டும் இரண்டு முறை பயின்று வந்துள்ளன.

பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள அடுக்குத் தொடர்கள் அனைத்தும் இரண்டு முறை அடுக்கி வந்த அமைப்பு நிலைகளிலேயே காணப்படுகின்றன. அவற்றில் சில அடுக்குத்தொடர்கள் வினையடை, பெயரடைகளையும், வேற்றுமை உருபுகளையும், வும், தோறும் போன்ற பின்னுருபுகளையும் ஏற்று வந்துள்ளன. மற்றவை அனைத்தும் இயல்பாகவே இரட்டித்துப் பயின்று வந்துள்ளன.

இரண்டு அடுக்குத்தொடர்களில் 'ஆக' என்னும் ஒட்டு சேர்ந்து இடம்பெற்றுள்ளது. அவை அரணம் அரணமாக (முல். 42), குரல் குரலாக (சிறு. 229) ஆகிய இரண்டும் ஆகும். அரணம் அரணமாக என்ற தொடரில் பொருள் மாற்றம் காணப்படுகின்றது. குரல் குரலாக என்ற தொடர் ஒரு நூலின் பெயர்த்தன்மை என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. 'ஆக' என்னும் ஒட்டு சேர்ந்ததால் இப்பொருள் கொண்டு இங்கு நோக்கப்பட்டுள்ளது.

அடுக்குத்தொடரின் இரண்டாம் சொல்லின் ஈற்றசை போன்று வேற்றுமை உருபுகளும் இடம்பெறுகின்றன. அந்த வகையில் மாநகர் என்ற

பொருளில் பொருநராற்றுப்படையில் ஐந்தாம் வேற்றுமை உருபு 'இன்' சேர்ந்து மா மாவின் (பொரு. 180) ஓரிடத்திலும் நான்காம் வேற்றுமை உருபு 'கு' சேர்ந்து பிறர் பிறர்க்கு (பொரு. 174) ஓரிடத்திலும் என இரண்டு இடங்களில் வேற்றுமை உருபுகள் அடுக்குத்தொடருடன் சேர்ந்து காணப்படுவதை அறியமுடிகின்றது.

மேலும் 'தோறும்', 'உம்', 'த்த' ஆகியனவும் அடுக்குத் தொடரின் இரண்டாம் சொல்லின் இறுதியில் சேர்ந்து காணப்படுவதைப் பின்வரும் சான்றுகள் மூலம் அறியலாம்.

துறை துறைதோறும் (மது. 340) > தோறும்
பிற பிறவும் (பட். 181) > உம்
வண்ண வண்ணத்த (குறி. 114) > த்த

சில சொற்களில் இடைகுறைந்து அடுக்குத்தொடர்களாக அடுக்கி வருவதைக் காணமுடிகின்றது. அந்த வகையில் மதுரைக்காஞ்சியில் 'கொள்ளுதல்' என்ற பொருளில் 'கொள்ளக் கொள்ள' என்ற அடுக்கில் உள்ள சொல்லின் இடை குறைந்து 'கொளக் கொள'(மது. 426) பயின்று வந்துள்ளதைக் காண முடிகின்றது.

அடுக்குத்தொடர்களில் ஒரே சொல் இரண்டு, மூன்று, நான்கு முறை அடுக்கி வரும் என்பது மரபிலக்கணங்களின் நிலைப்பாடாகும். அவற்றில் ஒரே சொல் இரண்டு முறை அடுக்கிவரினும் இரண்டு சொற்களும் பொருள் மாற்றம் பெற்று காணப்படுவதை முல்லைப்பாட்டில் நோக்கலாம். அரணம் அரணமாக (முல். 42) என்பதில் முதல் சொல் 'வில்' என்ற பொருளையும் இரண்டாவது சொல் 'காவல்' என்ற பொருளையும் கொண்டு பயின்றுள்ளது. ஆனால் வடிவ அமைப்பில் அடுக்குத்தொடர் போன்று காணப்படுகின்றது.

திருமுருகாற்றுப்படையிலும் சிறுபாணாற்றுப்படையிலும் முறையே ஒருமுகம் ஒருமுகம் (திரு. 92), ஓதி ஓதி (சிறு. 22) ஆகிய இரண்டும் வடிவத்தில் அடுக்குத்தொடர் போன்று காணப்படுவதால் அடுக்குத்தொடராகக் கணக்கிடப்பட்டுள்ளது. ஆனால், நச்சினார்க்கினியர் பத்துப்பாட்டிற்கு உரை எழுதுகையில் இந்த இரண்டு அடுக்குகளையும் பிரித்து இரண்டு தொடர்களுடன் கொண்டு கூட்டி உரை எழுதியுள்ளார். இருப்பினும் இவை அடுக்குத்தொடர் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

ஒரு சில அடுக்குத் தொடர்கள் பயின்று வரும் இடத்தின் தன்மைக்கு ஏற்பப் பொருள் மாற்றம் பெறுகின்றன. 'வயின் வயின்' என்ற அடுக்கு

சிறுபாணாற்றுப்படையில் 'மனை' என்ற பொருளிலும் பொருநராற்றுப் படையில் 'திடர்' என்ற பொருளிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

மயில் மயில் (சிறு. 16) என்ற சொல் அடுக்கில் முதலில் உள்ள சொல் ஆண் மயிலையும் இரண்டாவது உள்ள சொல் பெண் மயிலையும் குறிப்பதாக இடம்பெற்றுள்ளது.

மேற்கூறப்பட்ட அடுக்குத்தொடர்கள் தவிர வழி வழி (மது. 194, 324), மனை மனை (மது. 423), முறை முறை (நெடு. 177), இடை இடை (குறி.100), ஒருவிர் ஒருவிர் (மலை.218), ஊழின் ஊழின் (பொரு. 106), வைகல் வைகல் (பொரு. 158), காட்டவும் காட்டவும் (முல். 22), வேண்டுப வேண்டுப (பெரு. 444), மகமுறை மகமுறை (பெரு. 478) ஆகியவை அனைத்தும் எவ்வித மாற்றமும் இன்றி இயல்பான நிலையில் அடுக்குத் தொடர்களாகப் பயின்று வந்துள்ளன.

இங்குப் பகுத்து ஆராயப்பட்ட அடுக்குத்தொடர்கள் அனைத்தும் இரட்டிப்பாக்கம் என்ற சொல்லாக்க நெறிமுறையில் அடங்குகின்றன. இந்த அடுக்குத்தொடர்கள் பெரும்பாலும் ஒருவித அழுத்த உணர்வினை வெளிப்படுத்த தவறவில்லை என்பதை மனதில் கொள்ளவேண்டும். இந்த அடுக்குத்தொடர் அமைப்புகள் காலந்தோறும் பயன்பாட்டு நிலையில் உள்ளது என்பதை இலக்கியங்கள் வழியும் மக்கள் வழக்காறுகள் வழியும் அறிந்து கொள்ளமுடியும்.

மேலும் அடுக்குத் தொடர்கள் பற்றிப் பா. வீரப்பன் கூறுவதை நோக்குதல் கூடுதல் தெளிவைத் தரும் என்ற முறையில் அவர் கருத்துகளைச் சுருங்க காணலாம்.

இரட்டிப்பாக்கம் பற்றி அடுக்குச்சொற்கள் என்னும் பெயரில் 45 இடங்களில் பத்துப்பாட்டில் அடுக்குத்தொடர்களைச் சுட்டிக்காட்டியுள்ளார். ஆனால், சில இடங்களில் அடுக்குத்தொடர் அல்லாத சொற்களையும் அடுக்குத்தொடர் எனச் சுட்டியுள்ளார். அதற்குச் சான்றாக,

அடியின் அடி (சிறு. 18)
குறங்கின் குறங்கென (சிறு. 20)
நல்ல நல்லோர் (முல். 18)
சிலம்பிற் சிலம்பும் (நெடு. 100)

என்பது போன்ற அடுக்குச் சொற்களை எடுத்துக்காட்டலாம். ஏன் இவை அடுக்குகளாகக் கொள்ளப்படவில்லை எனில் அடியின் அடி என்பதில் இன் வேற்றுமை உருபு இடையில் பயின்றுள்ளதால் அடுக்குத்தொடராக ஏற்க இயலாத நிலையுள்ளது எனலாம். மேலும் இரட்டிப்பாக்கத்திற்கு முற்றிலும் பொருந்தாத நிலையில் மேற்கண்ட அடுக்குகள் உள்ளது என்பதையும் மனதில் கொண்டு தெளிவான அமைப்பு முறையில் அமைந்துள்ள அடுக்குத் தொடர்களே இரட்டிப்பாக்கம் என்ற சொல்லாக்க வகையில் ஆராயப் பட்டுள்ளன.

**இரட்டைக் கிளவி**

இரட்டித்து வரும் நிலையில் பொருள் உணர்த்தவல்ல சொற்கள் இரட்டைக் கிளவிகளாகும். இரட்டைக் கிளவிகளைத் தனித்தும் பிரித்தும் பார்த்தால் பொருள் தராது. வடிவத்தில் இரு சொற்கள் போலத் தோன்றினாலும் செயல்பாட்டில் இரட்டைக் கிளவி ஒரு தனிச் சொல்லாகும். இரு சொற்கள் இணைந்திருப்பதால் இரட்டைக்கிளவி எனச் சுட்டப் பெறுகின்றது.

மரபிலக்கணங்கள் இரட்டைக் கிளவிகளின் விளக்கத்திற்கு அவற்றின் பிரிக்க இயலாத தன்மையினைச் சுட்டுகின்றன.

இரட்டைக் கிளவி இரட்டிற் பிரிந்தி சையா (தொல்.சொல்.48).

என்று தொல்காப்பியமும், இக்கருத்தையே நன்னூலும்(நூ.396) எடுத்துக் காட்டுகின்றன. இரட்டைக் கிளவியில் இடம்பெறும் தனிச்சொற் களுக்கு வலிந்து பொருள் கொள்ளினும் பொருள் வெளிப்படாது நிற்கும். இரட்டைக் கிளவிகள் இருமுறைக்கு மேல் இரட்டித்து வருவதில்லை. அவை இசை, குறிப்பு, பண்பு ஆகிய பொதுப்பண்புகளை வெளிப்படுத்துவதாகச் செயல்படுகின்றன.

இரட்டிப்பாக்கம் குறித்துப் பத்துப்பாட்டில் ஆராய்ந்த பொழுது இரட்டைக் கிளவிகள் இடம்பெறவில்லை என்பதை அறியமுடிந்தது. பத்துப்பாட்டில் இந்த வகையில் சொல்லாக்கம் நிகழ்த்தப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இந்த இரட்டைக் கிளவி அமைப்பின் தேவை பத்துப்பாட்டு புலவர்களுக்கு இல்லாமல் போனது என்பதும் எண்ணிப்பார்க்க கூடிய ஒன்றாக உள்ளது.

சொல்லாக்க வகைகளில் இரட்டிப்பாக்கம் என்னும் பிரிவில் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள ஆக்கங்களைப் பகுத்து நோக்கியவிடத்து,

*தமிழ் இரட்டிப்புச் சொற்கள் சொற்பொருண்மை நிலையில் பல தனித்தன்மைகளைப் பெற்றுள்ளன. அவற்றுள் பல ஒத்த பொருளையும் கொண்டுள்ளன. பொருள் தொடர்பற்ற நிலையில் சில ஒப்புருச் சொற்களாகவும் (homonyms) செயல்படுகின்றன. இரட்டிப்புச் சொற்கள் குறிப்புப் பொருள் மற்றும் பயன்பாட்டு வரையறையுடனும் காணப்படுகின்றன*[1]

என்று எச். சித்திரபுத்திரன் தரும் கருத்துப்படி பல நிலைகளில் ஒத்துப் போவதைக் காணமுடிகின்றது. எனினும் அவர் அடுக்குத்தொடர், இரட்டைக் கிளவி ஆகிய இரண்டிற்கும் பொதுப்பட கூறியது, பத்துப்பாட்டில் அடுக்குத்தொடர் என்ற இரட்டிப்பாக்கத்திற்கு மட்டும் பொருந்துவதைக் காணமுடிகின்றது.

**கடனாக்கம்**

ஒவ்வொரு மொழியின் வளர்ச்சி நிலையிலும் அம்மொழிச் சூழல் சார்ந்து அவற்றோடு தொடர்புடைய பிறமொழிகளின் தாக்கம் நிகழ்வது தவிர்க்க முடியாத ஒரு செயலாகும். அவ்வாறு ஒரு மொழியின் வளர்ச்சிக்குப் பிறமொழிகளின் பங்கு சூழலுக்கு ஏற்ப அதிகமாகவும் அல்லது குறைவாகவும் காணப்படுவது இயல்பாகும். ஒரு மொழியில் உள்ள சொற்களைத் தேவை கருதித் தம்மொழியில் ஏற்கும் மொழிகள் அந்தந்த மொழிகளின் தன்மைக்கு ஏற்ப மாற்றி அம்மொழிகளின் தூய்மை கெடாத வண்ணம் பாதுகாத்தல் வேண்டும். இப்படிப் பிறமொழிச் சொற்களைத் தேவைக்கு ஏற்ப பயன்படுத்திக் கொள்ளும் முறையைச் சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் 'கடனாக்கம்' என்று குறிப்பிடுகின்றனர். ஏனென்றால் பிறமொழிகளில் இருந்து தம்மொழித் தேவைக்கு ஏற்பக் கடன் பெற்றுத் தம்மொழிக்குக் தக்கவாறு ஆக்கிக் கொள்வதால் இவ்வாறு வகைப்படுத்திக் கூறுகின்றனர். இந்த வகை ஆக்கம் நிகழ்வது குறித்துச் ச. அகத்தியலிங்கம் குறிப்பிடும் கருத்தை இவ்விடம் நோக்குதல் பொருத்த முடையதாகும். "*ஒரு மொழி பிற மொழிகளுடன் கலந்து உறவாடுகின்ற போது பலவேறு சொற்களை இம்மொழிகள் ஒன்றிலிருந்து மற்றொன்று கடனாகப் பெறும்*"[2] என்று கூறுவதன் மூலம் கடனாக்கம் என்னும் சொல்லாக்க வகை எவ்வாறு ஆக்கம் பெறுகின்றன என்பதை உணர்ந்துகொள்ள முடிகின்றது.

காலந்தோறும் இந்த வகை ஆக்கங்கள் நிகழ்ந்து கொண்டு வந்துள்ளதை இலக்கியங்கள் வழியும் இலக்கணங்கள் வழியும் அறிந்துகொள்ள முடிகின்றது.

அந்த வகையில் சங்ககால மொழிச்சூழலை அறிந்துகொள்வதற்குச் சங்க இலக்கியமும் தொல்காப்பியமும் பயன்படுவதை நம்மால் மறுக்க முடியாது. சங்க இலக்கியங்களில் எட்டுத்தொகைப் பத்துப்பாட்டு இரண்டிலும் பிறமொழிச் சொற்களின் தாக்கம் குறைவாகவே காணப்படுவதை எஸ். வைத்தியநாதன், எஸ். வையாபுரிப்பிள்ளை, வி.கோ. சூரியநாராயண சாஸ்திரிகள், மா. இராசமாணிக்கனார், மறைமலையடிகள், பா. வீரப்பன் போன்றோர் ஆராய்ந்து கருத்துகளை வெளிப்படுத்தியுள்ளனர்.

இவர்களில் வி.கோ.சூரியநாராயண சாஸ்திரிகள் சங்க இலக்கியங்களில் பிறமொழிச் சொற்களின் செல்வாக்கு குறைவாக உள்ளன என்பதை,

> *'தொல்காப்பியம்' என்னும் இலக்கணத்தினுள்ளும், 'எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ் கணக்கு' என்னும் நூற்றொகை களுள்ளும் ஆங்காங்கு இரண்டொரு வடசொற்கள் காணப்பட லாமே யன்றி அதற்கு மேலில்லை*[3]

என்று கூறுவதன் மூலம் அறியலாம். தமிழ்மொழிக்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியரே வடசொற்களைப் பயன்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களில் பிறமொழிச் சொற்கள் இடம்பெற்றுள்ளன என்பதை,

> *தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு முதலிய சங்க நூல்களில் தமிழல்லாத பிறமொழிச் சொற்கள் சில இடம்பெற்றுள்ளன. அவை பெரும்பாலும் சமஸ்கிருதம் எனப்படும் வடமொழிச் சொற்களும் பிராகிருத மொழிச் சொற்களுமேயாகும்*[4]

என மா. இராசமாணிக்கனார் குறிப்பிட்டுள்ளார்.

அடுத்த நிலையில் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் தமிழ்ப் பேரகராதி உருவாக்கப் பணியில் ஈடுபட்டு, அந்த அனுபவத்தின் வாயிலாகத் தமிழ் மொழியில் பிறமொழிச் சொற்கள் கலந்துள்ளதைக் 'கலவைச் சொற்கள்' என்று குறிப்பிடுகின்றார். அவர் அவ்வாறு கூறுவது கடனாக்கம் என்ற வகையில் அடங்குவதைக் காணலாம். தமிழில் வடமொழிச் சொற்களே அன்றிப் பிறமொழிச் சொற்களும் இடம்பெற்றுள்ளன என்பதை,

> *வடமொழியே யன்றி, காலந்தோறும் ஏற்பட்டுள்ள பலவேறு தொடர்பாட்டினால் கன்னடச் சொற்களும், தெலுங்குச் சொற்களும், துருக்கிச் சொற்களும், அராபிச் சொற்களும், ஸ்பானிஷ் சொற்களும்,*

பிரெஞ்சுச் சொற்களும், போர்த்துகீசியச் சொற்களும், டச்சுச் சொற்களும், ஆங்கிலச் சொற்களும் தமிழிற் புகுந்து விட்டன[5]

என்று குறிப்பிடுகின்றார். இவ்விருவர் கருத்துகளும் பொருத்தமுடையதாகவே உள்ளன. பண்டைய இலக்கண, இலக்கியங்களில் வடமொழிக் கலப்பு உள்ளதை வி. கோ. சூரியநாராயண சாஸ்திரிகள் கூறுவதை வையாபுரிப்பிள்ளையும் ஏற்பதை 'வடமொழியே யன்றி' என்று கூறுவதன் மூலம் அறியமுடிகின்றது.

இவர்கள் இருவரும் சங்க இலக்கியங்களில் கலந்துள்ள பிறமொழிச் சொற்களை எண்ணிக்கை நிலையில் ஆராய்ந்து கூறாது பொதுநிலையில் மட்டும் குறிப்பிட்டுள்ளனர். ஆனால், எஸ். வைத்தியநாதன் அவர்கள் எட்டுத்தொகைப் பத்துப்பாட்டு இரண்டிலும் 191 பிறமொழிச் சொற்கள் பயன்படுத்தப்பட்டள்ளதைக் கணக்கிட்டுக் கூறியுள்ளார். இவர் சங்க இலக்கியம் முழுவதையும் ஆராய்ந்து கூறியுள்ளார். பத்துப்பாட்டை மட்டும் எடுத்துக்கொண்டு அவற்றில் இடம்பெற்றுள்ள பிறமொழிச் சொற்களை ஆராய்ந்து மா. இராசமாணிக்கனார் 71 எனவும் பா. வீரப்பன் 107 எனவும் கணக்கிட்டுக் கூறியுள்ளனர். எஸ். வைத்தியநாதன் அவர்கள் கூறியுள்ள எண்ணிக்கையில் பத்துப்பாட்டைப் பிரித்து நோக்கின் 102 பிறமொழிச் சொற்கள் உள்ளன.

அடுத்த நிலையில் பத்துப்பாட்டில் இரண்டு நூல்களுக்கு மட்டும் ஆராய்ச்சி உரை எழுதிய மறைமலையடிகள் முல்லைப்பாட்டில் 11 பிறமொழிச்சொற்களும் பட்டினப்பாலையில் 9 பிறமொழிச் சொற்களும் உள்ளன என்பதை ஆராய்ந்து கூறியுள்ளார். இவ்விரு நூல்களிலும் இடம்பெற்றுள்ள பிறமொழிச் சொற்களின் எண்ணிக்கையாக மா. இராசமாணிக்கனார் கூறியதைக் காட்டிலும் கூடுதலாக 7 பிறமொழிச் சொற்களை மறைமலை அடிகள் குறிப்பிட்டுள்ளார்.

பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள கடனாக்கம் பற்றி ஆய்வு நிகழ்த்திய அறிஞர்களிடம், பிறமொழிச் சொற்களின் எண்ணிக்கை நிலையில் அனைவருமே மாறுபாடு உடையவர்கள் என்பதை உணர்ந்து கொள்ள முடிகின்றது. இதில் எஸ். வைத்தியநாதன் அவர்கள் மத்திய இந்தோ-ஆரிய மொழிகள், சமஸ்கிருத மொழி என்ற இரு பிரிவுகளிலும்மா. இராசமாணிக்கனார் வடமொழி, பாலிமொழி, அர்த்தமாகதி மொழி என்ற மூன்று பகுப்புகளாகவும் மறைமலையடிகள் வடமொழி, திசைச் சொற்கள் என்னும் இரு வகைகளிலும் பா. வீரப்பன் அயல்மொழிச் சொற்கள் எனப் பொதுநிலையிலும் பிறமொழிச் சொற்களைப் பாகுபடுத்தி ஆராய்ந்து கருத்துகளை வெளியிட்டுள்ளனர்.

மேற்கண்ட அறிஞர்களின் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு பிறமொழிச் சொற்களைத் தொகுத்துக் கடனாக்கம் என்ற பிரிவில் சொல்லாக்கம் நிகழ்ந்துள்ள தன்மை ஆராயப்பட்டுள்ளன. அதற்கு முன்பு பிறமொழிச் சொற்களைத் தமிழ்மொழியில் ஏற்று வழங்குவதற்கு இலக்கண நிலையில் சில விதிமுறைகளும் வகுத்துக் கூறப்பட்டுள்ளது. அவற்றை இங்கு நோக்குதல் பொருத்தமுடையதாகும்.

வடமொழிச் சொற்கள் தமிழ் மொழியில் தேவை கருதி வழங்குவதற்குத் தொல்காப்பியமும் நன்னூலும் இலக்கணம் வகுத்துள்ளன. தொல்காப்பியம், வடசொற்கள் தமிழ்மொழியின் அமைப்பிற்கு ஏற்ப எழுத்து நிலையில் வடமொழி எழுத்துகளின் நீங்கி இரு மொழிகளுக்கும் பொதுவாகிய எழுத்துகளால் அமைதல் ஏற்புடையது என்று,

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே (தொல்.சொல்.401).

இந்நூற்பாவில் குறிப்பிடுகின்றது.

நன்னூல் வடசொல் இன்னது என்று விளக்கம் தந்துள்ளது. ஆரியத்திற்கும் தமிழிற்கும் பொதுவெழுத்தாலும் ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்து திரிந்த எழுத்தாலும் இவ்விரண்டெழுத்தினாலும் செந்தமிழ்ச் சொல்லை யொப்பவாகிய வடதிசையிலிருந்து செந்தமிழ் நிலத்து வந்து வழங்குவன வடசொல் என,

பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானு மியைவன வடசொல் (நன்.17).

இந்த நூற்பாவில் விளக்கம் கொடுத்துள்ளது. தொல்காப்பியம் கூறுவதைப் பின்பற்றியே நன்னூலும் வடசொல் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. மேலும் நன்னூல் எழுத்ததிகாரத்தில் ஆரியமொழி தமிழில் வடமொழியாதல் பற்றி,

இடையி னான்கு மீற்றி லிரண்டும்
அல்லா வச்சை வருக்கமுத லீறு
யவ்வாதி நான்மை ளவ்வாகு மையம்
பொதுவெழுத் தொழிந்தநா லேழுந் திரியும் (நன்.146)

இந்நூற்பாவில் விளக்கம் தந்துள்ளது. ஆரியத்திற்கும் தமிழுக்கும் பொதுவெழுத்துகள் பற்றியும் ஆரியத்திற்குச் சிறப்பெழுத்துகள் பற்றியும்

மேற்காணும் நூற்பாவில் குறிப்பிட்டுள்ளது. ஆரியத்திற்கும் தமிழிற்கும் பொதுவெழுத்தாலாகிய விகாரமின்றித் தமிழில் வந்து வழங்கும் வடமொழி 'தற்சமம்' என்றும் ஆரியத்திற்கே உரிய சிறப்பெழுத்தாலும் பொதுவும் சிறப்புமாகிய ஈரெழுத்தாலுமாகித் திரிதல் முதலிய விகாரம் பெற்றுத் தமிழில் வந்து வழங்கும் வடமொழி 'தற்பவம்' என்றும் சான்றுகளுடன் கான்டிகையுரை விளக்கம் தருகின்றது. மேலும் நன்னூலில் ***147, 148, 149, 150*** ஆகிய நூற்பாக்களிலும் ஆரியமொழி தமிழுக்கேற்ப மாற்றம் பெற்று வழங்கப்படுவது குறித்துப் பேசப்பட்டுள்ளது. இக்கருத்துகள் அனைத்தும் கடனாக்கத்திற்கு அடிப்படையாக அமைந்துள்ளது எனத் துணியமுடிகின்றது.

தமிழகத்தில் ஆரியர்களினுடைய செல்வாக்கு மிகுந்து காணப்பட்டதால் அவர்கள் பேசும் மொழியான வடமொழி தமிழில் கலந்து காணப்பட்டன. அதனைக் கண்ட இலக்கணிகள் ஆரியமொழி தமிழில் வழங்குவதற்குச் சில இலக்கண விதிமுறைகளை அமைத்துள்ளனர். ஆனால், ஆரியம் அல்லாத பிறமொழிகள் தமிழில் வழங்கப்படுவதற்கு எவ்வித விதியும் உள்ளதாக அறியமுடியவில்லை.

ஆரியர்களின் வருகைக்குப்பின் தமிழும் ஆரியமும் கலந்த நடையில் எழுதுபவர்களும் பேசுபவர்களும் சிறந்த புலமையாளர்கள் என்ற ஒருநிலை இருந்தது அனைவரும் அறிந்த ஒன்றாகும். அதற்குச் சான்றாக மணிப்பிரவாள நடையில் எழுதும் முறையைக் கூறலாம். வடமொழி போன்று தமிழில் அதிகமாகக் கலந்த வேறுமொழிகள் இல்லை எனலாம். தற்காலத்தில் வடமொழியைக் காட்டிலும் மிகுதியான செல்வாக்குப் பெற்று ஆங்கிலம் விளங்குவதை நம்மால் மறுத்துவிட முடியாது. தற்பொழுது தமிழும் ஆங்கிலமும் கலந்த இன்னொரு மணிப்பிரவாள நடை உருவாகிக் கொண்டிருக்கிறது என்பதையும் நாம் நினைவில் கொள்ளவேண்டும்.

இதுபோன்ற நிலையில் சங்க இலக்கியங்களில் வழங்கிவரும் பிறமொழிச் சொற்களில் வடமொழிச் சொற்களே அதிகமாகக் காணப்படுகின்றன. பிற பிறமொழிச் சொற்கள் குறைவாகவே உள்ளன. இதன் மூலம் ஆரியர்களின் செல்வாக்கை அறியமுடிகின்றது. சங்க இலக்கியங்களில் பத்துப்பாட்டு பிற்காலத்தது என்பது வரலாற்று ஆய்வாளர்கள் கருத்தாகும். இது நாம் அறிந்த செய்தியாகும். பத்துப்பாட்டின் காலத்தில் ஆரியர்களின் செல்வாக்கு வளர்ச்சிபெறத் தொடங்கிய நிலையாக இருந்திருக்கக் கூடும். பத்துப்பாட்டின்

காலத்திற்குப் பின்பு வடமொழியின் செல்வாக்கு மேலும் வளர்ச்சிபெற்றுக் காணப்பட்டதை இலக்கண, இலக்கியங்கள் வழி அறிந்துகொள்ள முடிகின்றது.

பத்துப்பாட்டு ஆராய்ச்சி என்னும் நூலை எழுதிய மா. இராச மாணிக்கனார் அந்நூலின் ஒரு பகுதியாகப் பத்துப்பாட்டில் பிறமொழிச் சொற்கள் இடம்பெற்றதற்கான காரணமாக,

*அந்தணர் சமயப் பிரசாரத்தால் வடமொழிச் சொற்கள் சங்க காலத் தமிழில் நுழைந்தன; பௌத்தர் சமயப் பிரசாரத்தால் பாலிமொழிச் சொற்கள் நுழைந்தன; சமணர் சமயப் பிரசாரத்தால் அர்த்தமாகதி மொழிச் சொற்கள் நுழைந்தன*[6]

என்று கூறுகின்றார். இதற்கு அடுத்த வரிகளில் வடமொழியே தமிழில் மிகுதியாகக் கலந்து காணப்படுவதற்கு, "வேதியர் மற்ற இரு திறத்தாரையும்விட நெடுங்காலம் தமிழகத்தில் இருந்தமையால் வடசொற்களே தமிழில் மிகுதியாய் நுழைந்தன எனலாம்"[7] எனக் கருத்துரைக்கின்றார்.

பத்துப்பாட்டில் பிறமொழிச் சொற்கள் குறித்து ஆராய்ந்த பா. வீரப்பன் தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரின் பின்வரும் கருத்தை எடுத்துக்காட்டியுள்ளார். "பத்துப்பாட்டுள் தமிழல்லாத சில பிறமொழிச் சொற்களும் உள்ளன. இவை பெரும்பாலும் வடமொழிச் சொற்களும் பிராகிருத மொழிச் சொற்களு மேயாகும்[10]"[8] இதன் மூலம் சங்க இலக்கிய காலத்தில் வடமொழி, பாலி, பிராகிருதம் ஆகிய மூன்று மொழிகளின் செல்வாக்கு இருந்துள்ளதை அறியமுடிகின்றது.

மேலும் பா. வீரப்பன் பத்துப்பாட்டில் 2 விழுகாட்டிற்கு மேல் பிறமொழிச் சொற்கள் இல்லை என்று கூறுவதும் அதற்குப் பொருத்த முடையதாகவும் தம் கருத்திற்கு வலுசேர்ப்பதாயும் உள்ள ந. சஞ்சீவியின் கருத்தை எடுத்துக்காட்டியுள்ளார். அதை இவண் நோக்குதல் பயன்தரும்.

சங்கத் தமிழ் தங்கத் தமிழ்; பத்தரை
மாற்றுப் பசுந்தமிழ், இப்பழந்தமிழ்
இயல்பை உணர்ந்து இன்புற ஆழ்ந்து
சங்கநூல் ஆராய்ச்சி இன்றியமையாதது
இவ்வாராய்ச்சியால் பெறலாகும்
பொதுத் தெளிவுகள் பல, அவற்றுள்
தலையாய ஒன்று, 'சங்கத்தமிழ் தனித்
தமிழ்; பிறமொழிச் சொல்வகைக்

குறைவாகப் பெற்றது' என்பது
இவ்வுண்மை சங்கத் தமிழில் இடைக்
காலப் பிற்காலத் தமிழினும் மிகக்
குறைந்த விழுக்காடே வடசொற்களும்
பிராகிருத பாலிச் சொற்களும்
கலந்துள்ளமையால் புலனாகும்
அவையும் தொல்காப்பிய நெறிப்படி,
'வடவெழுத்து ஒழித்துத் தமிழெழுத்
தோடு' தான் பயின்று வந்துள்ளன.
கடந்த முந்நூறு ஆண்டுகளிலேயே வட
மொழி ஒலிகளை அப்படியே பயன்படுத்தும்
வழக்கம் சமயம், சாதி காரணமாகப்
பெரிதும் நுழைந்தது. சங்கநூற்
பார்ப்பனப் புலவரும் மிகக்
குறைந்த வடசொற்களையே பயன்
படுத்தியமையும் பரிபாடல் போன்ற
நூல்களில் ஒருசில வடசொற்கள்
தமிழ்மொழி பெயர்ப்பும் பெற்றே
வழங்குவதும் ஈண்டு நினைவுறத் தக்கது
அடுத்த நிலையில் கருதத்தக்கது பழந்
தமிழ்ச் (சங்கத் தமிழ்) சொற்கள்
பலவும் ஓரசை ஈரசைச் சொற்களே
என்பதாகும்.[9]

இக்கருத்தை எடுத்துக்காட்டும் இவரே முன்னர்த் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் கருத்தையும் எடுத்துக்காட்டியுள்ளார். இருவரின் கருத்து நிலையிலும் வடமொழி, பிராகிருத மொழி ஆகிய இருமொழிச் சொற்கள் தமிழில் எடுத்தாளப்பட்டுள்ளதை மனதில் கொண்டு பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள பிறமொழிச் சொற்களை ஆராய்ந்துள்ளார்.

வடமொழி, பிராகிருத மொழிச் சொற்கள் பெரும்பான்மை இடம் பெற்றிருக்கின்றன என்ற கருத்துநிலையில் பத்துப்பாட்டில் சமயம் சார்ந்த சொற்களே பெரும்பான்மை காணப்படுகின்றன எனப் பா. வீரப்பன் கருதுகின்றார். இவ்வாறு கூறக் காரணம் வடமொழி சமயச் சார்புடைய மொழி என்பதை எண்ணிப்பார்க்க தோன்றுகின்றது.

ஆனால், பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள பிறமொழிச் சொற்கள் பல நிலைகளில் பகுத்து நோக்க இடம் தருவதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள பிறமொழிச் சொற்களைச் சமயம், இயற்கை, பயன்பாட்டு கருவிகள், ஆடைஆபரணங்கள், மனிதர்களுக்கு வழங்கும் பெயர்கள், பறவை விலங்குகள், உணவுப்பொருள், இடப்பெயர்கள், வாசனைப் பொருட்கள் மற்றும் மக்கள் பழக்க வழக்கங்களில் தேவை கருதிப் பயன் படுத்தும் சொற்கள் எனப் பகுத்து அறியமுடிகின்றது.

சமயம் சார்ந்த சொற்களாகப் பரிகாரம், தெய்வம், பூதம், புண்ணியம் என்பது போன்று 13க்கும் மேற்பட்ட சொற்கள் இடம்பெற்றுள்ளன. அவை அனைத்தும் சமய வழிபாட்டில் பயன்படும் பொருட்களின் பெயர்களாகவும் சடங்குமுறை சார்ந்த பெயர்களாகவும் காணப்படுகின்றன.

இயற்கையில் காணப்படக் கூடிய மரம், செடி, கொடி, ஆறு, மலை போன்றவற்றைக் குறிக்கும் சொற்களும் இயற்கை சூழலால் நிகழும் பொழுதுகள் பற்றிய சொற்களும் இடம்பெற்றுள்ளன. சான்றாகத் திலகம், சிந்துவாரம், நந்தி, கங்கை, பிண்டி, அரமியம், அந்தி, இமயம், யாமம் ஆகிய சொற்கள் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ளன எனச் சுட்டிக்காட்டலாம்.

மக்களின் அன்றாட வாழ்வில் பயன்படும் கருவிகள் பற்றிய சொற்களும் ஆடை ஆபரணங்கள் பற்றிய சொற்களும் பத்துப்பாட்டில் காணப்படுகின்றன. பயன்பாட்டு கருவிகள் சார்ந்து விலோதம், தூரியம், நேமி, சாபம், எந்திரம், சாவம் ஆகிய சொற்களும் ஆடை ஆபரணங்கள் சார்ந்து பருமம், கிண்கிணி, படம், கலாபம், தமனியம், பதாகை ஆகிய சொற்களும் பிறமொழிச் சொற்களில் இருந்து பத்துப்பாட்டுப் புலவர் பெருமக்களால் எடுத்தாளப் பட்டுள்ளன.

பறவைகள் மற்றும் விலங்குகளின் பெயர்கள் குறித்த சொற்கள் பத்துப்பாட்டில் இடபெற்றுள்ளன. சான்றாக நாகம், கின்னரம், ஆதி, கோபம் (பூச்சி) ஆகியவற்றைக் கூறலாம்.

உணவுப்பொருள் சார்ந்த சொற்களாக மோதகம், பண்டம், பண்ணியம், அமிழ்து, மது போன்றவற்றை எடுத்துக்காட்டலாம். வாசனைப் பொருட்கள் சார்ந்து தகரம், தாது போன்ற சொற்களைச் சுட்டலாம். இடம் சார்ந்த பெயர்களாக உலகம், தேஎம், நியமம் போன்ற சொற்களைக் கூறலாம்.

மனிதர்களின் தொழில்முறை சார்ந்தும் சாதி சார்ந்தும் சில சொற்கள் கடன் பெற்று வழங்கப்பட்டுள்ளது. அவற்றில் அமரர், முனிவர், மாகதர், சாவகர் போன்ற சொற்கள் தொழில்முறை சார்ந்தும் பார்ப்பான், கோவலர்,

சூதர், வைதாளிகர் போன்றவை சாதி சார்ந்தும் எடுத்தாளப்பட்டுள்ளன. மேலும் மிலேச்சர், யவனர் ஆகிய இரு சொற்களும் வேற்றுநாட்டவர்களைக் குறிப்பிடும் சொற்களாக இடம்பெற்றுள்ளன.

மேற்கூறப்பட்ட வகைப்பாடுகளில் அடங்காத சில சொற்களும் இடம்பெற்றுள்ளன. அவை பதம், சாலேகம், காமம், விசயம், நிதியம், குமரி, சலம், படிவம், கண்டம், போர், மண்டிலம் போன்றவையாகும். இவை மக்களின் வாழ்வில் சூழல் சார்ந்து பயன்படுத்தப்படும் சொற்களாகும்.

மொழி வளர்ச்சியில் காலமாற்றத்திற்கு ஏற்ப மொழிகளில் சில மாறுதல் ஏற்படும். அம்மாறுதல்களில் கடன் பெறுதல் என்ற ஒருநிலை உள்ளதை மனதில் கொள்ளவேண்டும். பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள பிறமொழிச் சொற்கள் அக்காலச் சூழலுக்கு ஏற்ப அமைந்த ஒரு மொழிச்செயல்பாடு என்பதை மறுத்துவிட முடியாது.

**கடன் சொற்களும் வடிவ மாற்றமும் (தமிழ்ப்படுத்தம்)**

சொல்லாக்க உத்திகளில் தமிழில் பரவலாகக் காணப்படும் ஓர் உத்தி தமிழ்ப்படுத்தமாகும். இது இனமாற்றம், வடிவமாற்றம் என இருவகைப்படும். இனமாற்றம் என்பது நேரடி எழுத்துப்பெயர்ப்பில் கிரந்த எழுத்துகளுக்கு ஒப்புடைய தமிழ் எழுத்துகளை அமைத்தலாகும். பிறமொழிச் சொற்களைக் கடனாகப் பெற்று மொழி முதல் இடை கடை ஆகிய இடங்களில் எழுத்துகளை மாற்றி அமைத்தல் வடிவமாற்றமாகும். அந்த அடிப்படையில் பத்துப்பாட்டில் உள்ள பிறமொழிச் சொற்களைத் தொகுத்து ஆராயலாம்.

பத்துப்பாட்டில் கடனாகப் பெற்று எடுத்தாளப்பட்டுள்ள பிறமொழிச் சொற்கள் அனைத்தும் தமிழ்மொழி அமைப்பிற்கு ஏற்ப வரிவடிவம் மற்றும் ஒலி வடிவ அமைப்புகளில் திரித்தும் மாற்றியும் கூறப்பட்டுள்ளது. இதில் மா. இராசமாணிக்கனார் பிறமொழிச் சொற்களைப் பகுத்துள்ள வகையில் ஆராயும் பொழுது பாலிமொழிச் சொற்களாகக் கருதப்படும் நியமம், பண்டம், பண்ணியம், உவமம், ஆணை, பளிங்கு ஆகிய சொற்கள் அமைப்பு நிலையில் திரிபு பெற்று தமிழில் வழங்கப்பட்டுள்ள. அவை,

| **பாலிமொழி வடிவம்** | **தமிழ்மொழி வடிவம்** |
|---|---|
| நிகமெ | நியமம் (மது. 365) |
| பாண்டம் | பண்டம் (பட். 131) |
| பண்யம் | பண்ணியம் (மது. 506) |

| | |
|---|---|
| ஒபமம் | உவமம் (மது. *516*) |
| ஆணா | ஆணை (பட். *170*) |
| பளிகொ | பளிங்கு (குறி. *57*) |

என்ற நிலையில் திரிபு பெற்று வடிவ மாற்றம் பெற்றுள்ளன. இதே போன்று அர்த்தமாகதி மொழியிலிருந்தும் சில சொற்கள் திரித்து தமிழ்மொழி அமைப்பிற்கு ஏற்ப வழங்கப்பட்டுள்ளன.

| **அர்த்தமாகதி மொழி வடிவம்** | **தமிழ்மொழி வடிவம்** |
|---|---|
| சந்தி | அந்தி (பொரு. *46*) |
| வர்ணம் | வண்ணம் (குறி. *31*) |
| க்ஷேமம் | ஏமம் (முல். *54*) |

ஆனால், வடமொழியிலிருந்து கடன் பெற்ற சொற்களை இருவகைகளாகப் பகுக்கலாம். முதலாவது இனமாற்றம், வடிவமாற்றம் பெறுதல். இரண்டாவது விகுதி சேர்ந்து தமிழ் சொல்லாதல். இதில் வடிவமாற்றம் பெறும் சொற்கள் குறைவாகவே காணப்படுகின்றன. அவை சிற்சில திரிபுகள் பெற்று இடம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. அவை,

| **வடமொழி வடிவம்** | **தமிழ்மொழி வடிவம்** |
|---|---|
| யந்திரம் | எந்திரம் |
| விஜயம் | விசயம் |
| ரோகிணி | உரோகிணி |

இச்சொற்களில் முதல் இரண்டு சொற்களும் முறையே மொழி முதல் திரிபு, மொழி இடை திரிபு ஆகிய நிலைகளில் தமிழ் வடிவங்களாகப் பயின்றுள்ளன. அடுத்து உள்ள 'ரோகிணி' என்ற சொல் 'உ'கரத்தை மொழி முதலில் பெற்றுத் தமிழில் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஏனெனில் தமிழ்மொழியில் ரகரம் மொழி முதலில் இடம்பெறாது என்ற விதியின் தன்மைக்கு ஏற்ப உகரம் சேர்த்துத் தமிழ்வடிவமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இந்த இருமொழிகளிலிருந்தும் கடன் பெற்ற சொற்களில் க்ஷேமம், விஜயம் ஆகிய இரண்டு மட்டும் இனமாற்றம் என்ற தன்மையில் தமிழ்ப்படுத்தப்பட்டுள்ளன. அதே போல் மற்ற கடன் சொற்கள் அனைத்தும் வடிவமாற்றம் என்னும் தன்மையில் தமிழ்ப்படுத்தம் செய்யப்பட்டுள்ளன. இந்த வகைச் சொல்லாக்கத்தைத் தமிழ்ப்படுத்தம் என்னும் வகையில் சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் அடக்குவர்.

வடமொழியிலிருந்து தமிழ்மொழிக்குக் கடனாகப் பெற்ற சொற்கள் பெரும்பான்மை விகுதிகள் சேர்ந்து தமிழ் வடிவ அமைப்பிற்குத் தக்கவாறு பயன்படுத்தப்பட்டுள்ளன. 'அம்', 'அர்', 'ஐ' என்பது போன்ற விகுதிகள் தமிழாக்கத்திற்கு உதவியாக உள்ளதைப் பின்வரும் சான்றுகள் தெளிவுபடுத்துகின்றன.

வேதா > வேதம் (மது. *468*) {அம் விகுதி}
மாகதா > மாகதர் (மது. *670*) {அர் விகுதி}
கங்கா > கங்கை (பெரு. *431*) {ஐ விகுதி}

இது மட்டும் அன்றி இவை போன்றவையும் வழங்கப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. காலச் சூழலுக்கு ஏற்ப மொழிவளம் கருதியும் தேவை காரணமாகவும் பிறமொழியாளர்களின் உறவினாலும் பிறமொழிச் சொற்கள் தமிழ் மொழியில் கடனாகப் பெற்றுத் தமிழ்மொழி அமைப்பிற்கு ஏற்ப வடிவமாற்றம் செய்து வழங்கப்பட்டுள்ள தன்மையைப் பத்துப்பாட்டில் காணமுடிகின்றது. இது சங்க இலக்கியம் மட்டுமன்றிச் சங்க மருவிய இலக்கியங்கள் தொடங்கி இன்றுவரை வெளிவந்துள்ள நூல்களையும் கடனாக்கம் என்ற பிரிவில் ஆராய்ந்து பார்ப்போமானால் தமிழ்மொழியில் பிறமொழிச் சொற்களின் பங்கு என்ன என்பதை அறிந்து கொள்ளமுடியும். அவை தமிழ்மொழி அமைப்பிற்கு எந்த வகையிலும் தீங்கு ஏற்படாத வண்ணம் செய்தல் நலம் பயக்கும். அவ்வாறே பத்துப்பாட்டில் கடனாகப் பெற்று வழங்கப்பட்டுள்ள சொற்கள் அமைந்துள்ளன என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

**கலப்பாக்கம்**

இரண்டோ இரண்டிற்கும் மேற்பட்ட மொழிச் சொற்களோ கூட்டுச்சொற்களாக வழங்கப்படுவது கலப்பாக்கமாகும். கலப்பாக்கத்தில் இடம்பெறும் சொற்களின் தன்மைக்கு ஏற்ப அது இரண்டு வகைப்படும். அவை இருசொல் கலப்பாக்கம், பலசொல் கலப்பாக்கம் என்பனவாம்.

இந்த வரையறையை அடிப்படையாகக் கொண்டு பத்துப்பாட்டில் உள்ள சொற்களைப் பகுத்து ஆராயும் பொழுது சில தெளிவான விளக்கங்களைக் காணமுடிகின்றது. மா. இராசமாணிக்கனார் கருத்துப்படி பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள பிறமொழிச் சொற்களை மூன்று பிரிவுகளில் வகைப் படுத்தலாம். வடமொழி, பாலிமொழி, அர்த்தமாகதி மொழி ஆகிய மூன்று மொழிச் சொற்களும் தமிழ்மொழியோடு சேர்ந்து கலப்பாக்கம் பெற்றுள்ளனவா? என்பது பின்வருமாறு பகுத்து ஆராயப்பட்டுள்ளது.

முதலாவதாக வடமொழிச் சொற்கள் தமிழ்மொழிச் சொற்களோடு சேர்ந்து கலப்பாக்கம் நிகழ்ந்துள்ளதைக் காணலாம். இதை வடமொழிச் சொற்களும் தமிழ்ச் சொற்களும் சேர்தல், தமிழ்ச் சொற்களும் வடமொழிச் சொற்களும் சேர்தல் என இருநிலைகளில் பகுத்து நோக்கப்பட்டுள்ளன.

**வடமொழி + தமிழ்மொழி**

பலி + புதவு > பலிப்புதவு (பட். *179*)
தவம் + பள்ளி > தவப்பள்ளி (பட். *53*)
தசம் + நான்கு > தசநான்கு (நெடு. *115*)

அடுத்துத் தமிழும் வடமொழியும் கலந்துள்ளதைக் காணமுடிகிறது.

**தமிழ்மொழி + வடமொழி**

நடை + பரிகாரம் > நடைபரிகாரம் (சிறு. *104*)
சில் + பலி > சில்பலி (திரு.*234*)
எழு + சமம் > எழுசமம் (சிறு. *112*)

இந்த இரு பிரிவுகளிலும் சொற்கள் கலப்பாக்கம் பெற்றுள்ளதைக் கூட்டாக்கம் என்ற தன்மையில் நோக்கின் இருபெயர்கள் இணைந்தும் பெயரடையும் பெயரும் இணைந்தும் வினையடியும் பெயரும் இணைந்தும் கலப்பாக்கம் நிகழ்ந்துள்ளன என அறியமுடிகின்றது.

அடுத்துத் தமிழ்மொழியும் பாலிமொழியும் சேர்ந்து கலப்பாக்கம் பெற்றுள்ளதை இரு பிரிவுகளில் காணமுடிகிறது.

**தமிழ்மொழி + பாலிமொழி**

தொல் +ஆணை > தொல்லாணை (பட். *170*)
பல் + பண்டம் > பல்பண்டம் (பட். *211*)
பல + பண்டம் > பலபண்டம் (பட். *131*)
மலி + பண்டம் > மலிபண்டம் (பட். *136*)
இரு + பெரு + நியமம் > இருபெருநியமம் (மது. *365*)

இந்த ஐந்து கலப்பாக்கமும் பெயரடையும் பெயரும் என்ற வாய்பாட்டு அடிப்படையில் நடைபெற்றுள்ளன. ‘இருபெருநியமம்’ என்பது மட்டும் இரண்டு பெயரடையும் ஒரு பெயரும் இணைந்து கலப்பாக்கம் பெற்றுள்ளது.

**பாலிமொழி + தமிழ்மொழி**

பண்ணியம் + கடை > பண்ணியக்கடை (மது. *661*)

இந்த ஒரு சொல் மட்டும் பாலிமொழியும் தமிழ்மொழியும் என்ற அமைப்பில் கலப்பாக்கம் பெற்றுள்ளது. இது இருபெயர்கள் இணைந்து கலப்பாக்கம் பெற்றுள்ளது.

பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள கலப்பாக்கங்களைத் தொகுத்து ஆராய்ந்தவிடத்து வடமொழியும் பாலிமொழியும் தமிழ்மொழியுடன் கலந்து சொல்லாக்கம் நடைபெற்றுள்ளதை அறிந்து கொள்ளமுடிகின்றது. ஆனால், அர்த்தமாகதி மொழிச் சொற்கள் தமிழ்மொழிச் சொற்களுடன் சேர்த்து பயன்படுத்தப்படவில்லை எனலாம். அர்த்தமாகதி மொழிச் சொற்கள் தனித்துக் கடனாக்கம் என்ற நிலையில் மட்டும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மேற்கண்டவாறு பத்துப்பாட்டில் கலப்பாக்கம் பெற்றுள்ள சொற்களைத் தொகுத்து ஆராய்ந்தவிடத்து இருமொழி கலப்பாக்கம் மட்டுமே நிகழ்ந்துள்ளது. பலமொழிச்சொற்கள் கலப்பாக்கம் நடைபெறவில்லை. இருப்பினும் 'இருபெருநியமம்' என்பது மட்டும் இரண்டு தமிழ்ச் சொற்களும் ஒரு பாலிமொழிச் சொல்லும் இணைந்து கலப்பாக்கம் பெற்றுள்ளது. ஆனால், பலமொழிச்சொல் கலப்பாக்கத்தில் இரண்டிற்கும் மேற்பட்ட மொழிச் சொற்கள் இணைவதால் நிகழ்வது என்பதை நினைவில் கொள்ளவேண்டும்.

இந்தக் கலப்பாக்கம் ஏன் நிகழ்கின்றது என்ற வினாவை முன்வைத்து விடை தேட முயன்ற பா. வீரப்பன் பின்வருமாறு கருதுகின்றார்.

> *சங்க காலத்திலேயே சமயத்தின் வரவு ஆரம்பமாகிறது என்று கொள்ளமுடிகின்றது. சமயத் தேவைக்காக உண்டாக்கப்படுகின்ற கூட்டுச் சொற்கள் வடமொழிச் சொற்களின் சேர்க்கையாலும் தமிழ்ச் சொற்களுடன் வடசொற்கள் சேருவதாலும் அமைகின்றன.*[10]

இக்கருத்தின் வழி நின்று உற்றுநோக்குகையில் பத்துப்பாட்டில் கலப்பாக்கம் நிகழ்ந்துள்ளது என்பதை மேலும் உறுதிசெய்ய முடிகின்றது.

கலப்பாக்கத்தில் எழுசமம் (சிறு. **112**), பல்பண்டம் (பட். **211**), தொல்லாணை (பட். **170**), இருபெருநியமம் (மது. **365**), பண்ணியக்கடை (மது. **661**) தசநான்கு (நெடு. **115**) ஆகிய சொற்கள் தவிர மற்ற சொற்கள் அனைத்தும் பா.வீரப்பன் கருதுவது போன்று சமயச் சார்புடைய சொற்கள் ஆகும். மேற்கூறப்பட்ட சொற்கள் இடம், பொருள், உணவு, பழைய கட்டளை என்கின்ற பொருளில் அமைந்துள்ளன என்பதை நினைவில் கொள்ளவேண்டும்.

இப்படிப் பலநிலைகளில் பிறமொழிச் சொற்களும் தமிழ்மொழிச் சொற்களும் இணைவதால் தமிழ்மொழியின் சொற்கோவை மேலும்

விரிவடையும் என்பதையும் நாம் மறுத்துவிட முடியாது. இந்தச் சொற்சேர்க்கை தமிழ்மொழி அமைப்பிற்கு ஏற்ப நிகழ வேண்டும் என்பதை நினைவில் கொண்டு சொல்லாக்கத்தில் ஈடுபடுவோர் செயல்பட்டால் சிறந்த பயன் கிட்டும் என்பதில் ஐயமில்லை.

## மொழிபெயர்ப்பாக்கம்

சொல்லாக்க உத்திகளில் மொழிபெயர்ப்பும் ஒன்றாக விளங்குகின்றது. இதை மொழிபெயர்ப்பாக்கம் என்று வழங்குவர். பிறமொழிச் சொற்களை எழுத்துப் பெயர்ப்பு செய்து வழங்க விரும்பாத இடத்தும் தூயமொழி உணர்வினாலும் பிறமொழிச் சொற்கள் மொழிபெயர்த்து வழங்கப்படுகின்றன. இது நேர்நிலை மொழிபெயர்ப்பு, கருத்துநிலை மொழிபெயர்ப்பு என இருவகைப்படும். இந்த வகை ஆக்கம் பெரும்பான்மை வழக்குநிலையில் உள்ளது என்பது நாம் அனைவரும் ,அறிந்த ஒன்றாகும். தற்காலத்தில் புதிய கண்டுபிடிப்புகளின் பெயர்களைத் தமிழ்மொழி அமைப்பிற்குத் தக்கவாறு மொழிபெயர்த்து வழங்கிவருவதை நாம் மறுத்துவிடமுடியாது.

இதுபோன்ற மொழிபெயர்ப்பு ஆக்கத்திற்கான அடிப்படை நமது சங்க இலக்கியங்களில் ஒன்றான பத்துப்பாட்டில் உள்ளதை எடுத்துக்காட்ட இடமுள்ளது. பத்துப்பாட்டு எழுதப்பட்ட காலத்தில் வடமொழிச் செல்வாக்கு காணப்பட்டதை மனதில் கொண்டு பத்துப்பாட்டில் உள்ள சொற்களைத் தொகுத்து நோக்குமிடத்து வடசொற்கள் கலந்திருப்பதை அறியமுடிகின்றது. அவ்வாறு கடன்பெற்ற சொற்களில் ஒரு சொல் மட்டும் மொழிபெயர்ப்புச் செய்யப்பட்டுள்ளது. வடமொழிச் சொற்களில் ஒன்றான 'துவிஜர்கள்' என்பதின் மொழிபெயர்ப்பாகப் பத்துப்பாட்டில் 'இருபிறப்பாளர்' என்ற சொல் இடம்பெற்றுள்ளது. திருமுருகாற்றுப்படையில் காணப்படும் இச்சொல் இரண்டு பிறப்பினையுடைய அந்தணர் என்னும் பொருளில் பயன்படுத் தப்பட்டுள்ளது.

இங்கு இரண்டு பிறப்பு என்பது நூலணிதற்கு முன்னர் ஒரு பிறப்பும் பின்னர் ஒரு பிறப்பும் எனப் பொருள்படும். இரண்டு பிறப்பினை உடைய அந்தணர் என்பதை நக்கீரர் தன் சொல்லாக்க உத்தியால் 'இருபிறப்பாளர்' என்று சொல்லாக்கம் செய்து பயன்படுத்தியுள்ளார்.

பத்துப்பாட்டின் காலத்தில் வடமொழிச் செல்வாக்கு உள்ளதால் வடசொல் மொழிபெயர்ப்புச் செய்யப்பட்டுள்ளது. மேலும் அந்தணர்களைக்

குறிக்கும் சொல் என்பதால் திருமுருகாற்றுப்படையில் பயன்படுத்தப் பட்டுள்ளது. ஏனெனில் திருமுருகாற்றுப்படை ஒரு சமயம் தழுவியதாகவும் பத்துப்பாட்டில் இறுதியாக எழுதப்பட்டதாகவும் கருதப்படுவதாகும். பிற்காலத்தது என்பதால் மொழிபெயர்ப்புச் சொல் இடம்பெற்றுள்ளது.

இது குறித்துப் பா. வீரப்பன் "*வைத்தியநாதன் அவர்கள் 102 சொற்களைத் தமிழல்லாதனவெனப் பத்துப்பாட்டிலிருந்து எடுத்துக் காட்டுகின்றார்*[5]. *இவற்றுள் 'இருபிறப்பாளர்' (முருகு. 182) என்னும் சொல் மட்டும் மொழி பெயர்ப்பாக அமைகிறது*"[11] என்று கூறுகின்றார். ஆனால், இச்சொல்லின் மூலவடிவம் பற்றி ஏதும் அவர் குறிப்பிடவில்லை.

தற்காலத்தில் ஆங்கிலம் போன்று பத்துப்பாட்டின் காலத்தில் வடமொழி வழக்கில் இருந்ததை நாம் நினைவில் கொள்ளவேண்டும். மேலும் நக்கீரர் ஒரு மொழிபெயர்ப்பு முன்னோடியாக உள்ளார் என்பதை உணர்ந்து கொள்ளமுடிகின்றது.

**மொழிமுதல் நீட்சியால் நிகழும் சொல்லாக்கம்**

இயல்பாக வழங்கும் ஒரு சொல்லின் தலைப்பெழுத்து நீண்டு ஒலிப்பதால் புதிய சொல் ஆக்கம் பெறுகின்றது. இவ்வாறு தலைப்பெழுத்து நீண்டு ஒலிப்பதால் அதனுடைய முன்னைய பொருள் மறைந்து புதிய பொருள் பெற்று விளங்குகின்றது. குறிப்பாக 'மக்கள்' என்ற சொல் 'மாக்கள்' என முதல் எழுத்து நீண்டு ஒலித்துள்ளதைப் பத்துப்பாட்டில் பதினொரு இடங்களில் காணமுடிகிறது. ஆனால், ஒவ்வொரு இடங்களிலும் பொருள் நிலையில் மாற்றம் பெற்றுக் காணப்படினும் மனிதஇனம் சார்ந்தே இச்சொல் வழங்கப்பட்டுள்ளது.

இந்த மாக்கள் என்ற சொல் பொருநராற்றுப்படையில் (பொரு. 91) தவம் செய்யும் முனிவர்களையும் முல்லைப்பாட்டில் (முல். 55) நாழிகை கணக்கர் என்ற பிரிவினரையும் நெடுநல்வாடையில் (நெடு. 32) கீழ்மக்கள் (மிலேச்சர்) என்ற பிரிவினரையும் குறிக்கின்றது. மக்கள் என்ற பொருளில் மலைபடுகடாமில் (மலை. 280) மட்டும் வந்துள்ளது. பட்டினப்பாலையில் இரண்டு இடங்களில் வந்துள்ளது.

*மாக்கள் (பட். 62) - போர்வீரர்(மறவர்)*
*மாக்கள் (பட். 121) - சுங்கம் கொள்பவர்*

ஆகிய பொருள்களிலும் மதுரைக்காஞ்சியில் மூன்று இடங்களில்

*மாக்கள் (மது. 461) - பிள்ளைகள்*

*மாக்கள் (மது. 499) - வேளாளராகிய அமைச்சர்*

*மாக்கள் (மது. 515) - விற்பனை செய்வோர்*

ஆகிய பொருள்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதே போல் பெரும்பாணாற்றுப்படையில் இரியன் மாக்கள் (பெரு.432) என்றவிடத்துக் கெடுதலையுடைய மக்கள் என்றும் முழுவலி மாக்கள் (பெரு.60) என்னுமிடத்து உடல்வலியினையுடைய மக்கள் என்றும் பொருள் பெற்று காணப்படுகின்றது.

மொழிமுதல் நீட்சியில் மேலும் பல சொற்கள் இருப்பினும் மாக்கள் என்ற சொல்லை மட்டும் எடுத்துக்கொண்டுள்ளீர் என்ற வினா மனதில் தோன்றக்கூடும். ஏனெனில் மற்ற சொற்கள் முற்றிலும் தொடர்பின்றிப் பொருள் மாற்றம் பெற்றுத் தனிச்சொல்லாகப் பரிணமிக்கின்றன. மாக்கள் என்ற சொல் மக்கள் என்ற பொருளோடு தொடர்புடைய ஆனால், வேறுபொருள் தரும் தன்மையில் ஆக்கம் பெற்றுள்ளது.

இச்சொல் மக்களின் தொழில், பண்புகளின் அடிப்படையில் வழங்கபடும் பிரிவினைகளைக் குறிக்கும் சொல்லாகப் பயன்படுத்தப் பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. இது போன்ற ஆக்கங்கள் மிக அருகிய ஒன்றாகவே பத்துப்பாட்டில் காணப்படுகின்றது.

**அளபெடைச் சொல்லாக்கம்**

அகராதி உருவாக்கத்தில் கலைச்சொல் பொருள் விளக்க அகராதி என்பதும் ஒன்றாக விளங்குகிறது. இந்தக் கலைச்சொல் பொருள் விளக்க அகராதி வகையில் எழுத்திலக்கணக் கலைச்சொல் - பொருள் விளக்க அகராதி ஒன்றைச் ச. பாலசுந்தரனார் உருவாக்கியுள்ளார். இவ்வகராதியில் சொல்லாக்க அளபெடை எனும் கலைச்சொல்லிற்குப் பொருள் விளக்கம் தருமிடத்துத் தேஎம், குரீஇ, ஆடூஉ ஆகிய அளபெடைச் சொற்களை எடுத்துக்காட்டி யுள்ளார். இதில் வரும் எ, இ, உ என்பன சொல்லாக்க அளபெடை எழுத்துகள் என்னும் நிலையில் பொருள் விளக்கம் தந்துள்ளார். இவையும் இவை போல்வனவும் சொல்லாக்க அளபெடை என்பார்.

அளபெடைகள் குறித்து ஆய்வுசெய்த செ.வை. சண்முகம் அவர்கள் 'அளபெடை' என்னும் தம் கட்டுரையில் சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ள அளபெடைகள் பற்றிக் கூறுமிடத்து,

*சங்க இலக்கியத்தில் எல்லா நெட்டெழுத்துக்களுமே அவற்றிற்கு இணையான அளபெடைகளோடு பொருள் வேறுபட்டு வேற்று நிலையில்*

*வழக்கில் வருவதால் அளபெடைகளைத் தனிஎழுத்துக்கள் என்று ஐயமின்றிக் கொள்ளலாம்*[12]

என்பார். இவர் கருத்தின் வழி அளபெடைகள் பொருள் மாற்றம் பெற்று வருகின்றன என்பதை உணர்ந்துகொள்ள முடிகின்றது. இதன் அடிப்படையில் ச. பாலசுந்தரனாரின் கருத்தை உற்றுநோக்கும் பொழுது இருவரும் ஒரே கருத்தை இருவேறு முறைகளில் வெளிப்படுத்தியுள்ளனர்.

மேற்கண்ட இருவரின் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள அளபெடைகள் தொகுத்து ஆராயப்பட்டுள்ளன.

பத்துப்பாட்டில் உள்ள அளபெடைச் சொற்களைத் தொகுத்து நோக்கும் பொழுது ஒரு உண்மை விளங்குகிறது. அளபெடைகளைப் பொருள் நிலையில் இருவகையாகப் பிரித்துப் பார்க்கமுடிகிறது. அவை பெயர்ப்பொருள் பற்றிய அளபெடை, வினைப்பொருள் பற்றிய அளபெடை என்பனவாம். சான்றாக,

சேஎய் (திரு. 271) - முருகன் (பெயர்ப்பொருள்)
கொளீஇ (நெடு. 42) - கொளுத்தி (வினைப்பொருள்)

இவையும் இவை போன்றவற்றைத் தொகுத்து ஆராயுமிடத்துப் பெயர்ப் பொருள் தன்மையில் வரும் அளபெடைகள் பொருள் மாற்றம் பெற்று அமைகின்றன. ஆனால், வினைப்பொருள் பற்றிய அளபெடைகள் பெரும் பான்மை பொருள் மாற்றம் இன்றியே அமைந்துள்ளன. எனவே வினைப் பொருள் உணர்த்தும் அளபெடைகளை நீக்கிப் பெயர்ப்பொருள் உணர்த்தும் அளபெடைகள் பின்வருமாறு நோக்கப்பட்டுள்ளன.

பத்துப்பாட்டில் அ, உ, எ ஆகியன சொல்லாக்க அளபெடைகளாக இடம்பெற்றுள்ளன என்பது பின்வரும் சான்றுகள் வழி அறியப்படுகிறது.

மராஅம் (திரு. 1) - செங்கடம்பு
மகாஅர் (மலை.217) - பிள்ளைகள்
வழாஅர் (மலை. 215) - வழுக்குகை
மாஅல் (முல். 3) - திருமால்

இவை அனைத்தும் அகரம் அளபெடுத்தல் தன்மையில் அமைந்துள்ளன. ஒவ்வொன்றும் முறையே 'மரு', 'மக', 'வழுவு-', 'மா' ஆகிய அடிச்சொற்களின் வழிப் பிறந்த அளபெடைகளாகும்.

மகடூஉ (சிறு. 192) - மகள்

எழூஉ (பெரு. 48) - கணையமரம்
குரூஉ (மலை. 169) - நிறம்

இவை உகரம் அளபெடுத்து அமைந்துள்ளவை ஆகும். இவை முறையே 'மகடு', 'எழு', 'குரு' ஆகிய அடிச்சொற்களின் அடிப்படையில் தோற்றம் பெற்றவை எனலாம். இதே போன்று,

சேஎய் (திரு. 61, 271, பெரு. 458, குறி. 51) - முருகன்
சேஎய் (மலை. 498) - முருகனை ஒத்த நன்னன்
தேஎம் (மது. 176) - நாடு
தேஎம் (மலை. 273) - திசை
பேஎம் (பட். 255) - அச்சம்

இவற்றில் 'சேஎய்' என்பது நான்கு இடங்களில் முருகன் என்ற பொருளிலும் மலைபடுகடாமில் ஓரிடத்தில் மட்டும் முருகனை ஒத்த நன்னன் என்ற பொருளிலும் செம்மை என்னும் சொல்லடியினை அடிப்படையாகக் கொண்டு ஆக்கம் பெற்றுள்ளது. 'தேஎம்' என்பது நாடு, திசை ஆகிய பொருளில் 'தே' எனும் உரியடியிலிருந்து உருவாக்கம் பெற்றதாகும். அதேபோல் 'பேஎம்' என்பது அச்சம் என்ற பொருளில் 'பே' என்னும் அடிச்சொல்லின் தன்மையில் அளபெடுத்துள்ளது.

தற்காலத்தில் இதுபோன்ற ஆக்கங்கள் இல்லை என்பதால் சொல்லாக்க சிந்தனையாளர்கள் இதை விடுத்துள்ளனர் எனத் தோன்றுகின்றது. ஏனெனில் அளபெடைச் சொற்கள் செய்யுள் ஆக்கத்திற்கு மட்டுமே பயன்படுவன எனலாம். பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள அளபெடைகளை எண்ணிக்கை அடிப்படையில் மட்டும் பா. வீரப்பன் ஆராய்ந்துள்ளார் என்பதை இவண் நினைவில் கொள்ளவேண்டும்.

இந்த அளபெடைச் சொல்லாக்கம் முற்றிலும் ச. பாலசுந்தரம், செ.வை. சண்முகம் ஆகியோரின் கருத்தை அடிப்படையாகக் கொண்டு ஆராயப்பட்டுள்ளது.

**முன்னொட்டாக்கம்**

முன்னொட்டு என்பதற்கு "வேருடன் மிகவும் நெருங்கிய தொடர்பு டையனவாகி அதன் முன் ஒட்டுபவை முன்னொட்டுகள் ஆகும்." எனச் சூ. இன்னாசி என்று குறிப்பிடுவார்.

தமிழ் மரபில் முன்னொட்டுகள் இல்லை. ஆனால், சமஸ்கிருத மொழியிலிருந்து கடன்பெற்ற சில சொற்களில் முன்னொட்டுகள் எதிர்மறைப்

பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளன. தமிழ்ச் சொற்களில் முன்னொட்டு இல்லை என்பது பெரும்பாலோர் கருத்தாகும். முன்னேற்பாடு, பின்தங்குதல், இடைவெளி போன்ற சொற்களை எடுத்துக்காட்டி, இவற்றில் வரும் முன், பின், இடை ஆகியவை முன்னொட்டுக்களாகச் செயல்பட்டாலும் அவை முன்னொட்டு என்பதில் ஐயம் உள்ளதாகச் ச. அகத்தியலிங்கம், இ. மறைமலை, ச.இராசேந்திரன் ஆகியோர் குறிப்பிடுகின்றனர்.

தமிழ்மொழி அமைப்பில் முன்னொட்டுகள் இல்லை எனப் பல அறிஞர்கள் கூறினும், ச. இராசேந்திரன் மற்றும் இ. மறைமலை ஆகிய இருவரும் நச்செள்ளை, நப்பின்னை ஆகிய சொற்களில் உள்ள 'ந' முன்னொட்டு எனத் திட்டவட்டமாகக் குறிப்பிட்டுள்ளார். இதேபோல் 'திரு' என்ற சொல்லையும் முன்னொட்டாகச் சுட்டியுள்ளனர். இந்தத் 'திரு' என்பது சிறப்புப் பொருளைக் குறிப்பதாகத் திருக்குறள், திருவாசகம், திருக்கோவை போன்றவற்றில் பயன்பாட்டில் உள்ளது என்பது இருவரின் கருத்தாகும்.

ச. இராசேந்திரன் மற்றும் இ. மறைமலை ஆகியோரின் கருத்தை அடிப்படையாகக் கொண்டு பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள முன்னொட்டு ஆக்கங்கள் தொகுத்துப் பின்வருமாறு ஆராயப்பட்டுள்ளன.

பத்துப்பாட்டில் 'திரு' என்ற முன்னொட்டு பதினான்கு இடங்களில் பயின்று வந்துள்ளது. அதாவது, நுதல், மணி, முகம், நகர், மழை ஆகிய சொற்களுக்கு முன்னொட்டாகச் செயல்பட்டுள்ளது.

| | |
|---|---|
| திருநுதல் (திரு. 24, பொரு. 25) | - அழகிய நெற்றி |
| திருமணி (திரு. 84, மது.273, 505, 511) | - அழகிய மணி |
| திருமணி (முல். 63) | - மாணிக்க மணி |
| திருமுகம் (சிறு. 73, 157, மது. 448) | - அழகிய முகம் |
| திருநகர் (மது. 216, நெடு. 90) | - அழகிய வீடு |
| திருநகர் (மலை. 548) | - அரண்மனை |
| திருமழை (மலை. 1) | - செல்வமுண்டாக்கும் மழை |

மேற்கண்ட சொற்களோடு பயின்றுவந்து பதினொரு இடங்களில் 'அழகிய' என்னும் பொருளில் பெயரடையாக அமைந்துள்ளது. முல்லைப்பாட்டில் ஓரிடத்தில் மட்டும் 'மாணிக்கம்' என்னும் சிறப்புப் பெயரடையாகப் பயன் படுத்தப்பட்டுள்ளது. மலைபடுகடாமில் ஓரிடத்தில் பிரித்துப் பார்க்க இயலா வண்ணம் 'அரண்மனை' (திருநகர்) என்பதாகவும் மற்றொரு இடத்தில் 'செல்வமுண்டாக்கும்' என்னும் பொருளில் மழை என்பதற்கு அடையாக

எடுத்தாளப்பட்டுள்ளது. இவ்வாறு பலநிலைகளில் 'திரு' என்னும் முன்னொட்டு பயன்படுத்தப்பட்டுள்ளது.

நெடுநல்வாடையில் மட்டும் 'ரோகிணி' என்ற வடசொல்லைத் தமிழ்ப்படுத்த 'உ' முன்னொட்டாகச் சேர்த்து 'உரோகிணி'(நெடு. 163) என வழங்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

தற்காலத்தில் 'அகம்' என்பதும் முன்னொட்டாகச் செயல்படுவதை 'அகம்பாவம்' என்பது போன்ற சொற்களை எடுத்துக்காட்டி ந. ஆனந்தி விளக்கியுள்ளார். ஆனால், பத்துப்பாட்டில் அகம் பின்னொட்டாகப் பயின்று வரவில்லை.

வெலரி ஆதம்சு தம் நூலில் உலகமொழிகள் பெரும்பாலானவற்றில் முன்னொட்டுக்கள் மிகக் குறைவாகவே பயன்படுத்தப்பட்டு வருகின்றன எனச் சபிர் குறிப்பிடுவதை எடுத்துக்காட்டியுள்ளார். இதைத் தம் ஆய்வில் இ.மறைமறை அவர்கள் எடுத்துக்காட்டியுள்ளார். பெரும்பாலான மொழிகளைப் போலவே தமிழிலும் முன்னொட்டாக்கம் என்னும் இவ்வகை அதிக விளைவாக்கம் பெறவில்லை என்பதை இதன் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது.

**எளிமையாக்கம்**

கடினமான மொழிக்கூறுகள் எளிமையாக மாற்றம் செய்யப்பெறுவது எளிமையாக்கம் ஆகும். மொழிகளில் பயன்படுத்தப்படும் கடின எழுத்துகளை எளிய எழுத்துகளாகவும் நீண்ட சொற்களைக் குறுகிய வடிவங்களாகவும் மாற்றி அமைப்பது எளிமையாக்கத்திற்குரிய சான்றுகளாகும். தமிழில் நடைபெறும் எளிமையாக்கத்தை எளிமையாக்கக் கூறுகளின் அடிப்படையில் மூன்று வகைகளாகப் பகுக்கமுடிகிறது. அவை எழுத்தெளிமை, வடிவ (சொல்) எளிமை, திரிபு எளிமை என்பனவாகும்.

இந்த மூன்றுவகை எளிமையாக்கத்தின் அடிப்படையில் பத்துப்பாட்டை அணுகும் பொழுது வடிவ எளிமை மட்டும் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. வடிவ எளிமை என்பது நீண்ட சொல் வடிவங்களில் சில சொற்கள் அல்லது பகுதிகளை விட்டுவிட்டுச் சொல்லைச் சுருக்கி வழங்குவதாகும். இவ்வகையில் பட்டினப்பாலையில் மூன்று சொற்கள் எளிமையாக்கம் பெற்றுள்ளன.

*அருவாளர் (பட். 275) - அருவாநாட்டரசர்*
*குடவர் (பட். 276) - குடநாட்டரசர்*

வடவர் (பட். 276) - வடநாட்டரசர்

இச்சொற்களை யாப்பு அமைப்பிற்காகவும் வடிவ எளிமை கருதியும் ஆக்கம் செய்து கடியலூர் உருத்திரங்கண்ணனார் வழங்கியுள்ளார்.

இதே போன்று 'வடவர்'(நெடு. 51) என்ற சொல் நெடுநல்வாடையில் வடநாட்டு மக்களைக் குறிப்பதாக நக்கீரர் எளிமையாக்கம் செய்து பயன்படுத்தியுள்ளார். இவ்விடம் பட்டினப்பாலையில் 'வடநாட்டரசர்' என்னும் பொருளில் இச்சொல் பயின்றுள்ளதை ஒப்புநோக்கிப் பார்த்தல் பொருத்தமுடையதாகும்.

பத்துப்பாட்டு முழுவதும் ஆராய்ந்த பொழுது எளிமையாக்க முறையில் சொற்களை ஆக்கும் முயற்சியில் ஈடுபட்டவர்கள் இருவர் மட்டும் என்பது குறிப்பிடத்தக்கது. அவர்கள் கடியலூர் உருத்திரங்கண்ணனார் மற்றும் நக்கீரர் ஆகியோராவர். மற்ற பத்துப்பாட்டுப் புலவர்கள் பிறசொல்லாக்க நெறிமுறைகளை ஆக்கி வழங்கினும் இந்த வகை ஆக்கத்தில் ஈடுபடவில்லை.

**ஒப்புமையாக்கம்**

மொழிகளில் சொற்கள் பல்வேறு இலக்கண விதிகளுக்கு உட்பட்டு ஆக்கம் பெறுகின்றன. ஆண் பெண், ஒருமை பன்மை வேறுபாடுகள் தமிழில் விகுதிகளை இணைப்பதன் மூலம் தோற்றம் பெறுகின்றன. இலக்கண விதிகளுக்கு உட்பட்டுப் படைக்கப்படும் சொற்கள் வழக்கில் வழங்கப் பெறினும் சில சொற்களில் ஏதேனும் ஒரு வடிவம் மட்டும் காணப்பெறும். மற்றொரு வடிவம் வழங்கப்பெறுவதில்லை.

இந்த வகை ஆக்கம் பெரும்பாலும் இலக்கண அடிப்படையில் நடைபெறுகின்றது. பத்துப்பாட்டில் ஒரே சொல் மட்டும் ஒப்புமையாக்கம் என்னும் நெறிமுறையில் ஆக்கப்பட்டுள்ளது.

மகன் (திரு. 257) > மகள் (திரு. 101)

இச்சொற்களை ஒப்புநோக்கியே ஒப்புமையாக்கம் என்னும் வகையில் ஆராயப்பட்டுள்ளது.

தற்காலத்தில் இந்த வகையில் பாலகன் > பாலகி, நண்பன் > நண்பி, மாணவன் > மாணவி என்பது போன்ற தன்மையில் சொற்கள் ஆக்கி வழங்கப்பட்டு வருவதைக் காணமுடிகிறது.

#### பதிலீட்டாக்கம்

இந்த வகைச் சொல்லாக்கத்தில் ஊர் மற்றும் மனிதர்களைக் குறிக்கும் பல சிறப்புப் பெயர்கள் சுருக்கமாகப் பயன்படுத்தப்படும். இதையே பதிலீட்டாக்கம் என்பர். இவ்வகையில் சுருக்கம் பெற்ற சொற்கள் மூலச் சொற்களுடன் தொடர்பு பெற்றும், தொடர்பு இல்லாமலும் காணப்பெறும்.

இந்த வகை ஆக்கம் பற்றிப் பத்துப்பாட்டில் ஆராயுமிடத்து இரு சொற்கள் மட்டும் முறையே பட்டினப்பாலையிலும் குறிஞ்சிப்பாட்டிலும் இடம்பெற்றுள்ளன.

> சோணாடு (பட். 28) - சோழநாடு
> எந்தை (குறி. 20) - என் தந்தை

இச்சொற்கள் முறையே சோழநாடு, என் தந்தை என்னும் பொருளில் வந்துள்ளன. இவை மூலச்சொல்லுடன் தொடர்பு பெற்றுப் பதிலீட்டாக்கம் பெற்றுள்ளன எனலாம். இந்தச் சொல்லாக்க முறையில் சோணாடு என்ற சொல்லைச் சங்க இலக்கியங்கள் முழுமையும் நோக்கும்பொழுது இரு இடங்களில் மட்டும் பயின்றுள்ளது குறிப்பிடத்தக்கது. ஒன்று பட்டினப்பாலையிலும் மற்றது (புறம். 337:1) புறநானூற்றிலும் ஆகும். எந்தை என்பது பரவலாக எட்டுத்தொகை நூல்களில் காணப்படினும் பத்துப்பாட்டில் குறிஞ்சிப்பாட்டில் மட்டும் இடம்பெறுள்ளது குறிப்பிடத்தக்கது.

இந்த வகைச் சொல்லாக்கம் தற்காலத்தைக் காட்டிலும் சங்க இலக்கிய காலத்தில் மிகக் குறைவாகவே காணப்பட்டுள்ளதை இதன் மூலம் அறிந்து கொள்ளமுடிகின்றது. எனினும் தற்காலத்தில் இம்முறை ஆக்கம் வழக்கில் உள்ளதற்கு அடிப்படை சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள ஒன்றிரண்டு பதிலீட்டாக்கங்கள் என்பதை மறுத்துவிடமுடியாது.

### தொகுப்புரை

- தற்காலத்தில் நிகழும் சொல்லாக்க உத்திகளைப் பத்துப்பாட்டில் ஒப்புநோக்கி ஆராயும் பொழுது பலவகையான சொல்லாக்கங்கள் நிகழ்ந்துள்ளதைக் காணமுடிகின்றன.
- கூட்டுச் சொல்லாக்கம், விகுதிவழிச் சொலாக்கம் தவிர பிற சொல்லாக்க வகைகள் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.
- பதினொரு வகை சொல்லாக்கங்கள் இவ்வியலில் ஆய்ந்து விளக்கப்பட்டுள்ளன.

- இலக்கண மரபு அடிப்படையான சொல்லாக்கமாக இரட்டிப்பாக்கம் என்னும் வகை காணப்படுகின்றது.
- இரட்டிப்பாக்கதில் இரட்டைக்கிளவி, அடுக்குத்தொடர் ஆகிய இரண்டும் சொல்லாக்க உத்தியாக இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.
- கடனாக்கம் என்ற வகை பிறமொழிச் சொற்களின் கலப்பால் நிகழ்ந்துள்ளது.
- பத்துப்பாட்டில் பிறமொழிச் சொற்கள் குறித்து மா. இராசமாணிக்கனார், பா. வீரப்பன், எஸ். வைத்தியநாதன் போன்றோர் ஆராய்ந்துள்ளனர்.
- கலப்பாக்கம் என்ற தன்மையில் வடமொழி, பாலி மொழி, ஆகியமொழிச் சொற்கள் தமிழ்மொழிச் சொற்களுடன் இணைந்து சொல்லாக்கம் நடைபெற்றுள்ளது.
- மொழிபெயர்ப்பாக்கம் என்னும் நிலையில் 'இருபிறப்பாளர் (திரு.182)' என்ற சொல் ஆக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.
- பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள சொல்லாக்க உத்திகளின் வளர்ச்சி தற்காலம் வரை உள்ளதை, இரட்டிப்பாக்கம் முதலாகப் பதிலீட்டாக்கம் ஈறாக உள்ள வகைப்பாடுகளின் வழி அறியமுடிகின்றது.
- சொல்லாக்க உத்திகளில் ஒன்றாக அளபெடைகளும் உள்ளதைப் பத்துப் பாட்டில் காணமுடிகின்றது.
- முன்னொட்டாக்கத்தில் அதிக அளவில் 'திரு' என்ற அடை இடம்பெற் -றுள்ளது குறிப்பிடத்தக்கது.
- பதிலீட்டாக்கம் என்ற வகையில் சோணாடு, எந்தை ஆகிய இரண்டு சொற்கள் மட்டும் ஆக்கம் பெற்றுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. எச். சித்திரபுத்திரன், சொல்லும் பொருளும், பக்.203.
2. ச. அகத்தியலிங்கம், மொழியியல், சொல்லியல், வினையியல், ப.16.
3. வி.கோ. சூரியநாராயண சாஸ்திரிகள், தமிழ் மொழியின் வரலாறு, ப.9.
4. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.713.
5. எஸ். வையாபுரிப்பிள்ளை, தமிழின் மறுமலர்ச்சி, தொகுதி 2, ப.221.
6. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.718-19.
7. மேலது, ப.719.
8. பா. வீரப்பன், சங்க இலக்கிய நடை, ப.105.
9. மேலது, ப.106.
10. மேலது, ப.109.
11. மேலது, ப.106.
12. செ.வை. சண்முகம், அளபெடை, ப.598.

பழந்தமிழ் இலக்கியங்களில் ஒரு பகுதியான பத்துப்பாட்டைத் தெரிவுசெய்து, சமகாலத்தில் பயன்பாட்டில் உள்ள சொல்லாக்க வகைப்பாடுகளை ஒப்புநோக்கி ஆய்வு நிகழ்த்தியதில் சில கருத்துகள் வெளிப்பட்டன. அவை முடிவுரையாகத் தொகுத்து வழங்கப்பட்டுள்ளன.

பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள சொல்லாக்கங்களை ஆராய்வதற்குத் துணைநின்ற சொல்லாக்க வகைப்பாடுகள் குறித்த செய்திகளைத் தொகுத்து நோக்கும் பொழுது முதல் நிலையில் இலக்கண நூல்களில் காணப்படும் தொகை வகைகள், விகுதிகள், வடசொற்கிளவிகள் பற்றி இடம்பெற்றுள்ள கருத்துகள் (தொல்காப்பியம், நன்னூல் ஆகிய இரண்டையும் முன்வைத்து) சொல்லாக்கத்திற்கு அடிப்படைத் தூண்டுகோலாக அமைந்துள்ளன.

சொல்லாக்கம் நிகழ்வது குறித்துப் பல்வேறு அறிஞர்கள் தங்கள் கருத்துகளை ஆராய்ந்து வழங்கியுள்ளனர். அவற்றை ஆய்வின் பயன்கருதித் தொகுத்து நோக்கும் பொழுது கூட்டுச்சொல்லாக்கம், விகுதிவழிச் சொல்லாக்கம் (பின்னொட்டாக்கம்), பிறமொழிச் சொற்களால் நிகழும் சொல்லாக்கம் மற்றும் இவற்றுடன் மேலும் சில சொல்லாக்கங்கள் உள்ளன என்பதை அறியமுடிகிறது. மொழியியல் அறிஞர்களான பொற்கோ, சூ. இன்னாசி, ச. அகத்தியலிங்கம், பாவாணர் போன்றோரும் சொல்லாக்கம் பற்றிச் சிந்தித்துள்ளனர்.

சொல்லாக்கம் பற்றி முழுநிலையில் ஆய்வை நிகழ்த்திக் கருத்துகளை வழங்கியவர்கள் இ. மறைமலை, ச. இராசேந்திரன், பழ. முத்துவீரப்பன், சுரதா, சு. சக்திவேல், எச். சித்திரபுத்திரன் மற்றும் பலர் உள்ளனர். இவர்களில் எச். சித்திரபுத்திரன் பதினெட்டு வகைப்பாடுகளில் சொல்லாக்கத்தை வகைப்படுத்தியது குறிப்பிடத்தக்கது. பெரும்பாலோர் ஆறு முதல் பத்து வரை வகைப்படுத்திக் கூறுகின்றனர். சொல்லாக்கம் செய்பவர்கள் கவனத்தில் கொள்ள வேண்டிய விதிமுறைகளாகச் சிலவற்றை தா.ஏ. ஞானமூர்த்தியும் எச். சித்திரபுத்திரனும் குறிப்பிட்டுள்ளனர். இரா. வசுமதி சொல்லாக்கத்தின் முதன்மைப் பங்கு எனச் சில கருத்துகளைத் தம் ஆய்வில் குறிப்பிட்டுள்ளார்.

பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள சொல்லாக்கச் சொற்களைத் தொகுத்து, பகுத்து ஆராய்ந்த பொழுது மூன்று நிலைகளில் பிரித்துப் பார்க்க முடிகிறது. அதாவது கூட்டுச் சொல்லாக்கச் சொற்கள், விகுதிவழிச் சொல்லாக்கச் சொற்கள், பிறசொல்லாக்க வகையில் ஆக்கம் பெற்ற சொற்கள் என்ற தன்மையில் இயல்நிலையில் பிரித்து ஆராயப்பட்டன. முதல் இரண்டு பிரிவுகளில் பத்துப்பாட்டில் மிகுதியாகச் சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதால் தனித்தனி இயலாகப் பிரித்து ஆராயப்பட்டன. இந்த இருபிரிவுகள் தவிர மற்ற சொல்லாக்க வகைகளில் ஆக்கம் பெற்ற சொற்கள் பிற சொல்லாக்கங்கள் என்ற பிரிவில் ஆராயப்பட்டுள்ளன.

கூட்டுச் சொல்லாக்கம் நிகழும் தன்மையை ஆராய்ந்து பார்க்கும் பொழுது இவற்றுக்கான வரையறைகளாக மரபிலக்கணங்களில் உள்ள தொகை வகைகள் அமைகின்றன. கூட்டுச் சொல்லாக்கத்தில் பெயர், வினை பகுப்பில் இருசொல் கூட்டாக்கம், பலசொல் கூட்டாக்கம் என்னும் இரு பிரிவுகள் உள்ளன. இதில் இருசொல் கூட்டாக்கத்திற்கு மரபிலக்கணங்கள் கூறும் தொகை வகைகள் பொருந்தும். பலசொல் கூட்டாக்கத்திற்குத் தொல்காப்பிய உரையாசிரியர்களில் நச்சினார்க்கினியரும் தெய்வச்சிலையாரும் தொல்காப்பியர் கையாண்ட ‘உயர்சொற்கிளவி’ போன்ற சொற்களை எடுத்துக்காட்டி இலக்கணம் வகுத்துள்ளனர்.

பத்துப்பாட்டில் ஆக்கம் பெற்றுள்ள கூட்டுச்சொற்கள் பற்றிப் பா. வீரப்பன், அ. லெட்சுமணன், தே. ஆண்டியப்பன் ஆகியோர் தம் ஆய்வின் ஒரு பகுதியாக ஆராய்ந்துள்ளனர். பத்துப்பாட்டில் இருசொல் கூட்டுச்சொற்கள் மிகுதியாகவும் பலசொல் கூட்டுச்சொற்கள் குறைவாகவும் ஆக்கம்பெற்றுள்ளன. இவை பெயர், வினை இரண்டிற்கும் பொருந்தும். கூட்டுச் சொல்லாக்கத்தில் பெயர், வினை, பெயரடை, வினையடை, இடைச்சொல், உரிச்சொல் ஆகியவை ஒன்றுடன் ஒன்று இரண்டு முதலாக நான்கு சொற்கள் வரை இணைந்து சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. இவற்றில் உரிச்சொல் பெயராக்கத்திலும் இடைச்சொல் வினையாக்கத்திலும் பயின்றுள்ளது குறிப்பிடத்தக்கது. தொல்காப்பியர் கூறுவது போன்ற இடையும் உரியும் பெயர், வினையைச் சார்ந்தே பயின்றுள்ளன.

பத்துப்பாட்டில் இருசொல் கூட்டாக்கம் மிகுதியாக நிகழ்ந்துள்ள போதிலும் வாய்ப்பாடு அமைப்புகள் குறைவாகவும் பலசொல் கூட்டாக்கம் குறைவாக நிகழ்ந்துள்ள போதிலும் வாய்ப்பாடு அமைப்புகள் மிகுதியாகவும்

இடம்பெற்றுள்ளன. பத்துப்பாட்டில் கூட்டுப் பெயரடையும் கூட்டு வினையடையும் நிகழ்ந்துள்ளதாக அறியமுடியவில்லை.

விகுதிகளின் துணைகொண்டு சொற்கள் ஆக்கப்படுகின்றன. இதைச் சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் பின்னொட்டாக்கம் என்று வழங்குவர். பயன்பாட்டுத் தன்மையில் இலக்கணப் பொருள் தரும் விகுதிகள், ஆக்கப்பொருள் தரும் விகுதிகள் என்ற இருநிலைகளில் பிரித்துப் பார்க்கலாம்.

சொல்லாக்க விகுதிகளின் வகைப்பாடு நிலையில் பல்வேறு எண்ணிக்கை நிலை உள்ளன. ஆனால், அகம், அம், இ, மை, இயல், கை, அல், அன் போன்று சில விகுதிகள் மட்டும் அனைவராலும் குறிப்பிடப்பட்டுள்ளன. விகுதிகளின் பயன்பாட்டு அடிப்படையில் பொருள் மாற்றம் கொண்ட விகுதிகள், பொருள் மாற்றம் இல்லா விகுதிகள் என்ற இரு நிலைகள் பத்துப்பாட்டில் உள்ளன.

பத்துப்பாட்டில் உள்ள சொற்களைப் பகுத்து ஆராயும் பொழுது 29 வகை ஆக்க விகுதிகள் பயன்பட்டுள்ளன. அவற்றில் அகம், அம், அர் ஆகிய மூன்று விகுதிகள் பத்து நெடும்பாட்டுகளிலும் இடம்பெற்றுள்ளன. அம், அர், அல், ஞர், நர் ஆகிய விகுதிகள் அதிக விளைவாக்கம் கொண்ட விகுதிகளாகப் பத்துப்பாட்டில் பயின்றுள்ளன. ஆர், ச்சி, மை, வை போன்று சில விகுதிகள் ஒன்றிரண்டு பாட்டுகளில் மட்டும் இடம்பெற்றுள்ளன. இவ்விகுதிகளில் 'அம்' விகுதி பொருள் மாற்றம் இன்றி, கானம், வானம் என்பது போன்ற சொற்களில் பயின்றுள்ளது. பொருள் மாற்றம் பெற்றும் பத்துப்பாட்டில் இடம் பெற்றுள்ளது. வினையாக்க விகுதியாக 'இ' ஒன்று மட்டும் பத்துப்பாட்டில் செயல்பட்டுள்ளதைக் 'கவினி', 'இயலி' ஆகிய சொற்களில் மூலம் அறியமுடிகிறது. சில விகுதிகள் யாப்பியல் தேவையை நிறைவு செய்யும் பொருட்டு பயன்படுத்தப்பட்டுள்ளன. ந, வ ஆகிய இரண்டும் 'பொருந', 'தலைவ' போன்ற சொற்களில் விளிப்பெயர் விகுதிகளாகப் பயின்றுள்ளன. இவை போன்ற விகுதிகள் தற்காலத்தில் வழக்கில் இருப்பதாக அறியமுடிய வில்லை. இக்கருத்தைக் கொண்டு விகுதிகளின் வளர்ச்சி நிலையை வரலாற்று நிலையில் எண்ணிப்பார்க்கையில் காலமாற்றத்திற்கு ஏற்ப சில விகுதிகள் வழக்கிறந்தும் சில விகுதிகள் புதியனவாகத் தோற்றம் பெற்று வழக்கில் பயன்படுவதையும் காணமுடிகிறது.

விகுதிகளின் பயன்பாட்டால் பத்துப்பாட்டில் மிகுதியாகப் பெயராக்கங்களே நிகழ்ந்துள்ளன. வினையாக்கம் குறிப்பிடும்படி நிகழவில்லை. பத்துப்பாட்டில்

பயன்படுத்தப்பட்ட விகுதிகளில் இருபது வகை விகுதிகள் பெரும்பாணாற்றுப்படையில் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

பத்துப்பாட்டில் அதிக அளவில் சொற்கள் ஆக்கம் பெற்ற தன்மையால் கூட்டுச் சொல்லாக்கமும் விகுதிவழிச் சொல்லாக்கமும் தனித்தனி இயல்களில் ஆராயப்பட்டன. இவை இரண்டும் தவிரவும் பல சொல்லாக்கங்கள் பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ளன. அவை பிறசொல்லாக்கங்கள் என்னும் தன்மையில் இறுதி இயலில் தொகுத்து ஆராயப்பட்டன. குறிப்பாக இரட்டிப்பாக்கம், கடனாக்கம், தமிழ்ப்படுத்தம், கலப்பாக்கம், மொழிபெயர்ப்பாக்கம், மொழிமுதல் நீட்சி, அளபெடைச் சொல்லாக்கம், முன்னொட்டாக்கம், எளிமையாக்கம், ஒப்புமையாக்கம், பதிலீட்டாக்கம் ஆகிய பதினொரு வகைச் சொல்லாக்கங்கள் குறைந்த அளவில் பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ளன.

பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள சொல்லாக்கங்களில் இங்கு இரட்டிப்பாக்கம் என்பது மரபிலக்கணங்களில் உள்ள அடுக்குத்தொடர், இரட்டைக்கிளவி ஆகிய இரண்டின் வடிவ அமைப்பில் காணப்படுகின்றன. இரட்டிப்பாக்கத்தில் அடுக்குத்தொடர் மட்டுமே பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ளது. பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்திய முறைமையில் வடமொழி, பாலி மொழி, அர்த்தமாகதி மொழி, பிராகிருத மொழி ஆகிய மொழிச்சொற்கள் 'கடனாக்கம்' என்ற உத்தியால் பத்துப்பாட்டில் எடுத்தாளப்பட்டுள்ளன. திசைச்சொற்களும் சில பத்துப்பாட்டில் கையாண்டுள்ளதை மறைமலை அடிகள் முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை ஆராய்ச்சி உரையில் சுட்டியுள்ளார். பத்துப்பாட்டில் பிறமொழிச் சொற்கள் குறித்து மா. இராசமாணிக்கனார், எஸ். வைத்தியநாதன், பா. வீரப்பன் போன்றோர் தம் ஆய்வின் ஒரு பகுதியாக ஆராய்ந்துள்ளது குறிப்பிடத்தகத்து.

பத்துப்பாட்டில் கலப்பாக்கம் என்ற வகையில் வடமொழி, பாலிமொழி, பிராகிருத மொழி ஆகிய மொழிச்சொற்களுடன் தமிழ்மொழிச் சொற்கள் இணைந்து புதிய சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. மொழிபெயர்ப்பாக்கம் என்னும் தன்மையில் 'இருபிறப்பாளர்' என்ற சொல் ஆக்கம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். பிறமொழிச் சொற்களைத் தமிழ்மொழி அமைப்பிற்கு ஏற்ப மாற்றி வழங்கும் பொழுது 'தமிழ்ப்படுத்தம்' என்ற சொல்லாக்க வகை பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ளது.

பத்துப்பாட்டில் மொழி முதல் நீட்சி ஆக்கத்தை 'மாக்கள்' என்பது போன்ற சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதன் மூலம் அறியலாம். அளபெடைகள்

துணைக்கொண்டும் பத்துப்பாட்டில் சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளதைத் தேஎம், மகடூஉ, மாஅல் போன்ற சொற்களால் அறியலாம். முன்னொட்டுகளாகப் பத்துப்பாட்டில் திரு, உ, அகம் ஆகியவை செயல்பட்டுள்ளன. அருவாளர்(அருவாநாட்டரசர்), குடவர்(குடநாட்டரசர்) என்பது போன்ற சொற்களின் மூலம் எளிமையாக்கமும் 'மகன் - மகள்' என்ற சொற்களின் மூலம் ஒப்புமையாக்கமும் சோணாடு, எந்தை ஆகிய சொற்களின் வழி பதிலீட்டாக்கமும் பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ளதை அறியமுடிகின்றது.

பத்துப்பாட்டில் நிகழ்ந்துள்ள சொல்லாக்கங்கள் முழுவதையும் உற்றுநோக்கும் பொழுது பத்து நெடும்பாட்டின் புலவர் பெருமக்கள் அனைவரும் சொல்லாக்கச் சிந்தனையாளர்கள் எனத் துணியமுடிகிறது. மேலும் பத்துப்பாட்டில் உள்ள சொல்லாக்க உத்திகள் தற்கால சொல்லாக்க உத்திகளுக்கு அடிப்படையாக அமைந்துள்ளன என்பதையும் உணர்ந்துகொள்ள முடிகிறது. அவ்வாய்வின் தொடர்ச்சியாகக் காலமுறைப்படி ஒவ்வொரு இலக்கியத்தையும் தற்காலத்தில் உள்ள சொல்லாக்க வகைப்பாடுகளை ஒப்பீடு செய்து ஆராயலாம். அவ்வாறு ஆராய்ந்தால் சொற்களின் வளர்ச்சி வரலாற்றை அறியமுடியும். மொழி வளர்ச்சியின் போக்குகளை உணர்ந்துகொள்ள முடியும்

## முதன்மை நூல்கள்


சாமிநாதையரவர்கள், வே.(ப.ஆ.) பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும் தமிழ்ப் பல்கலைக்கழகம் தஞ்சாவூர் 1986

சோமசுந்தரனார், பொ.வே.(உ.ஆ.) பத்துப்பாட்டு மூலமும் உரையும் (முதற் பகுதி) சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை 1971

,, பத்துப்பாட்டு மூலமும் உரையும் (இரண்டாம் பகுதி) சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை 1977


## துணைமை நூல்கள்


அகத்தியலிங்கம், ச. மொழியியல்-சொல்லியல்-வினையியல் அனைத்திந்தியத் தமிழ்மொழியியற் கழகம் அண்ணாமலை நகர் 1929

,, மொழியியல்-சொல்லியல்-பெயரியல் அனைத்திந்தியத் தமிழ்மொழியியற் கழகம் அண்ணாமலை நகர் 1984

,, சங்கத் தமிழ் (வினையியல்) அனைத்திந்தியத் தமிழ்மொழியியற் கழகம் அண்ணாமலை நகர் 1983

,, துணைவினைகள் மெய்யப்பன் பதிப்பகம் சிதம்பரம் 2006

அகத்தியலிங்கம், ச. சண்முகம், செவை. புதுச்சொற்படைப்பு (கட்டுரை)
கலைக்கதிர், மலர் 26, இதழ் 8
பீளைமேடு, கோவை
1974

அன்பழகன், க. சங்க இலக்கிய ஒருபொருட் பல
சொல்லாக்கத்தில் விகுதிகள் (கட்டுரை)
தொல்காப்பியர் சங்கத்தமிழ் ஒரு புதிய பார்வை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
சிதம்பரம்
2006

ஆனந்தி, ந. தமிழில் புதிய சொற்களின் வரவும்
நிலைபேறும் (முனைவர்பட்ட ஆய்வேடு)
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை
2008

இரத்தினம், இ. கலைச்சொல்லாக்கம்
கலைக்கதிர், மலர் 26, இதழ் 9
பீளைமேடு, கோவை
1974

இராசமாணிக்கனார், மா. பத்துப்பாட்டு ஆராய்ச்சி
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை
2011

இராசேந்திரன், ச. தமிழில் சொல்லாக்கம்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
2004

இராதா செல்லப்பன் கலைச்சொல்லாக்கம்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
1985

இலக்குவனார், சி. தொல்காப்பிய ஆராய்ச்சி
வள்ளுவர் பதிப்பகம்
புதுக்கோட்டை
1961

இளங்குமரன், இரா. தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை
1985

இன்னாசி, சூ. சொல்லியல்
தமிழரசன் பதிப்பகம்
பாளையங்கோட்டை
1976

கணபதிப்பிள்ளை, மு. மொழிபெயர்ப்பும் சொல்லாக்கமும்
அருள் நிலையம்
சென்னை
1967

கணேசன், இரா. அறிவியல் தமிழாக்க முறைகள்
அறிவுத் தமிழ்ப் பணிமன்றம்
சென்னை
1972

காமாட்சி, அ. பால்காட்டும் பெயராக்க உருபுகள் (கட்டுரை)
தமிழியல் ஆய்வு இன்றைய போக்குகள்
செண்பகம் சுப்பையா நினைவு
அறக்கட்டளை, தஞ்சாவூர்
2002

சக்திவேல், சு., இராசேந்திரன், ச. சொற்கள் (வாழ்வும் வரலாறும்)
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
1994

சண்முகம், செ.வை. அளபெடை (கட்டுரை)
ஆய்வுக்கோவை தொகுதி 2
இந்தியப் பல்கலைகழகத் தமிழாசிரியர் மன்றம்
மைசூர் இந்திய மொழிகள் மைய நிறுவனம்
மைசூர்
1976

சண்முகம், இராம. காலந்தோறும் தமிழ்மொழி
சர்வோதய இலக்கியப் பண்ணை
மதுரை
1981

| | |
|---|---|
| சரவணமுத்துப்பிள்ளை, த. | தமிழ்ப் பாஷை - ஓர் உபந்நியாசம்<br>ஸ்ரீ நிலையம் அச்சுக்கூடம்<br>சென்னை<br>*1892* |
| சித்திரபுத்திரன், எச். | சொல்லும் பொருளும்<br>அன்னம் வெளியீடு<br>தஞ்சாவூர்<br>*2004* |
| சிதம்பரநாதன், ஆ. | புதுச்சொற்கள்<br>கலைக்கதிர், மலர் 9, இதழ் 5<br>பீளைமேடு, கோவை<br>(ஆண்டு இல்லை) |
| சீதாலட்சுமி, வே. | நன்னூலாரின் இலக்கணக் கலைச்சொல்லாட்சி<br>சத்யா பதிப்பகம்<br>சென்னை<br>*1993* |
| சீதாலட்சுமி | சிங்கப்பூரில் மக்கள் தொடர்புச் சாதனங்கள்<br>தமிழ்மொழி, இலக்கிய வளர்ச்சிக்கு ஆற்றிய<br>பங்களிப்பு (முனைவர்பட்ட ஆய்வேடு)<br>தேசிய கல்வியியல் நிறுவனம்<br>சிங்கப்பூர்<br>*2001* |
| சுந்தரமூர்த்தி, இ. | குறளில் அளபெடைகள்<br>வள்ளுவர் வழி<br>சென்னை<br>*1985* |
| சுரதா | தமிழ்ச் சொல்லாக்கம்<br>சேகர் பதிப்பகம்<br>சென்னை<br>*2003* |
| சூரியநாராயண சாஸ்திரிகள், வி.கோ. | தமிழ் மொழியின் வரலாறு<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>சென்னை<br>*2010* |

| | |
|---|---|
| சோமசுந்தர பாரதியார், ச. | நற்றமிழ்<br>மலர் நிலையம்<br>சென்னை<br>*1955* |
| ஞானமூர்த்தி, தா.ஏ. | அறிவியல் தமிழாக்கம்<br>அறிவுக்கதிர்<br>தமிழ்மன்ற வெளியீடு<br>கோவை<br>*1982* |
| திருமலை, மா.சு. | மொழியியல்<br>பாரி நிலையம்<br>சென்னை<br>*1970* |
| தெய்வசுந்தரம், ந. | தமிழில் இலக்கண ஒட்டுகள் (கட்டுரை)<br>புதிய பனுவல் இதழ் 6<br>சென்னை, 2010 (ஏப்ரல்) |
| தேவநேயப் பாவாணர், ஞா. | வேர்ச்சொற் கட்டுரைகள் 2<br>கீழையியல் ஆய்வு நிறுவனக் கல்வி<br>அறக்கட்டளை, சென்னை<br>*2000* |
| ,, | சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்<br>சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்<br>சென்னை<br>*1971* |
| தொல்காப்பியர் | தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்<br>இளம்பூரணர் உரை<br>தமிழ்மண் பதிப்பகம்<br>சென்னை<br>*2003* |
| ,, | தொல்காப்பியம் - சொல்லதிகாரம்<br>நச்சினார்க்கினியர் உரை<br>தமிழ்மண் பதிப்பகம்<br>சென்னை<br>*2003* |

,, தொல்காப்பியம் - சொல்லதிகாரம்
இளம்பூரணர் உரை
தமிழ்மண் பதிப்பகம்
சென்னை
*2003*

,, தொல்காப்பியம் - சொல்லதிகாரம்
சேனாவரையர் உரை
தமிழ்மண் பதிப்பகம்
சென்னை
*2003*

,, தொல்காப்பியம் - சொல்லதிகாரம்
தெய்வச்சிலையார் உரை
தமிழ்மண் பதிப்பகம்
சென்னை
*2003*

,, தொல்காப்பியம் - சொல்லதிகாரம்
கல்லாடர் உரை
தமிழ்மண் பதிப்பகம்
சென்னை
*2003*

பதிப்பு - ஆசிரியர்குழு பாட்டும் தொகையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
சென்னை
*1981*

பவணந்தி முனிவர் நன்னூல்
காண்டிகையுரை
முல்லை நிலையம்
சென்னை
*2006*

பாலசுந்தரம், ச. எழுத்திலக்கணக் கலைச்சொல் - பொருள்
விளக்க அகராதி
தாமரை வெளியீட்டகம்
தஞ்சாவூர்
*1998*

பாலசுப்பிரமணியன், க. பழந்தமிழில் சொல்லாக்க நெறிகள் (கட்டுரை)
12 வது கருத்தரங்க ஆய்வுக்கோவை 2
இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற வெளியீடு, அண்ணாமலை நகர்
1980

பொற்கோ இலக்கண உலகில் புதிய பார்வை தொகுதி 1,2
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
சென்னை
2000

மறைமலை, இ. சொல்லாக்கம்
தமிழ்மதி பதிப்பகம்
தஞ்சாவூர்
2001

மறைமலை அடிகள் முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரை
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
2007

,, பட்டினப்பாலை ஆராய்ச்சி உரை
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
2001

மீனாட்சி சுந்தரனார், தெ.பொ. தமிழ் மொழி வரலாறு
முல்லை நிலையம்
சென்னை
2007

முத்துவீரப்பன், பழ. வ.சுப. மாணிக்கனாரின் சொல்லாக்கம்
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
1988

லெட்சுமணன், அ. சங்க இலக்கியக் கூட்டுச் சொற்கள் (கட்டுரை)
பேராசிரியர் எச். சித்திரபுத்திரன் மணிவிழா மலர்
2011

வசுமதி, இரா. — திருவள்ளுவரின் சொல்லாக்க முறைகள்
(ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு)
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை
*1986*

வீரப்பன், பா. — சங்க இலக்கிய நடை
பூவழகி பதிப்பகம்
சென்னை
*1989*

வேங்கடராஜூலு, வே. — தமிழ்ச் சொல்லமைவு
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம்
*2002*

வேலுப்பிள்ளை, ஆ. — தமிழ் வரலாற்று இலக்கணம்
பாரி புத்தகப் பண்ணை
சென்னை
*1979*

வையாபுரிப்பிள்ளை, எஸ். — தமிழின் மறுமலர்ச்சி நூற்களஞ்சியம்
தொகுதி *2*
நூற்றாண்டு நினைவு வெளியீடு *2*
வையாபுரிப்பிள்ளை நினைவு மன்றம்
சென்னை
*1989*


**அகராதிகள்**


- — தமிழ்ப்பேரகராதி
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை
*1982*

- — க்ரியாவின் தற்காலத் தமிழகராதி
க்ரியா வெளியீடு
சென்னை
*2008*

ஆங்கில நூல்கள்


LAWRENCE HAFFER — WORDS
IVU PUBLICHING HOUSE
2000

THOMAS LEHMANN and THOMAS MALTEN — A WORD INDEX FOR CANKAM LITERATURE(tamil)
INSTITUTE OF ASIAN STUDIES
CHENNAI
2007

VAIDYANATHAN, S. — INDO - ARYAN LOAN WORDS IN OLD TAMIL
RAJAN PUBLISHERS, MADRAS
1971

## இருசொல் கூட்டுபெயர்பெயர்கள்

அடுபோர்(மது.201)
அணிமுகம்(குறி.171)
அந்திவானம்(பெரு.413)
அரவுரி(பொரு.83)
அரிக்கணம்(திரு.76)
அரிப்பணி(நெடு.164)
அரிபறை(மது.262)
அரிமா(பட்.298)
அருள்நெறி(மலை.38)
அரைநாள்(பெரு.111, நெடு.75, மது.649)
அல்லங்காடி(மது.544)
அவிழ்ப்பதம்(பொரு.112)
அறநெறி(மது.191)
ஆடல்மகளிர்(நெடு.67)
ஆடவர்(மது.642)
ஆடுகளம்(திரு.245, குறி.175)
ஆடுகளம்(பெரு.55)
ஆடுமகள்(குறி.193)
ஆடுமழை(பெரு.413)
ஆணணி(சிறு.211)
ஆமான்(சிறு.177)
ஆய்மகள்(பெரு.162, முல்.13)
ஆவினன்குடி(திரு.176)
ஆன்கணம்(குறி.217)
இடைப்புலம்(மது.688)
இமிழிசை(திரு.240)
இயலணி(குறி.125)
இருபிறப்பாளர்(திரு.182)
இழையணி(பொரு.85)
இளங்கதிர்(சிறு.243, மலை.464)
இளங்கள்(சிறு.45)
இளநீர்(திரு.308)
இளமுலை(திரு.35, மது.416)
இளவெயில்(மது.703)
இன்குரல்( திரு.212, குறி.49, நெடு.68)
இன்சீர்(பெரு.493)
இன்சேறு(சிறு.28)
இன்சோறு(மது.535)
இன்துயில்( பெரு.440, குறி.242)
இன்முகம்(சிறு.208)
இன்மொழி(பொரு.27)
இன்னரம்பு(திரு.142)
இன்னிசை(குறி.51, நெடு.99, மது.80, மலை.296)
இன்னியம்( திரு.240, சிறு.229, குறி.193, பெரு.56)
இன்னீர்(மது.400)
இன்னுயிர்(மது.403)
உடையணி(மது.722)
உண்துறை(குறி.237)
உயர்கோட்டம்(பட்.36)
உயர்மாடம்(பட்.145)
உய்விடம்(குறி.166)
ஊர்காப்பாளர்(மது.647)
ஊன்குறை(மது.141)
எ ழுநாள்(மது.427)
ஏட்டிலை(பெரு.59)
ஐம்பால்(சிறு.60, மலை.30)
ஐவனம்(மது.288, மலை.115)
கடவுட்கடன்(பொரு.52)
கடவுட்பள்ளி(மது.467)
கடற்கோள்(பொரு.236)
கடிகைநூல்(நெடு.142)
கணைக்கால்(திரு.14)
கணைக்கோல்(மலை.380)
கருங்காக்கை(பொரு.184)
கழிமுடை(திரு.53)
களிற்றினம்(மது.242)
கற்சிறை(மது.725)
காட்டுமா(பெரு.43)
கார்கோள்(திரு.7)
காரேறு(பெரு.210)

கானக்கோழி(பொரு.222, மலை.510)
கான்பொழில்(மது.337)
கான்யாறு(சிறு.3, மலை.214, பட்.161, முல்.24)
கானவர்(திரு.194, பெரு.116, பொரு.220, மலை.17)
கிணைமகள்(சிறு.136)
கிளையிதழ்(குறி.101)
குடிப்பாக்கம்(பொரு.210, மது.137)
குப்பைவேளை(சிறு.137)
குலைவாழை(பொரு.208, பட்.16)
குளவிப்பள்ளி(சிறு.46)
குறமகள்(திரு.242, மலை.183)
குறிஞ்சிக்கோமான்(சிறு.267)
குறுந்தொடி(மது.218)
கூட்டுணவு(பெரு.137)
கைபொருள்(பெரு.40)
கொடைக்கடன்(பெரு.446)
கொடைக்கடன்(மலை.89, 543)
கொண்டிமகளிர்( மது.583, பட்.246)
கொல்லேறு(மது.732)
கோதைமகளிர்(மலை.349)
சாலிநெல்(பொரு.246)
சிற்றினம்(சிறு.207)
சிறுகண்(மலை.504)
சிறுகண்(முல்.31)
சிறுகுடி( மலை.156, மது.122)
சிறுகுடி(திரு.176)
சிறுதலை(மது.275)
சிறுதினை(மது.271)
சிறுதேர்(பட்.25)
சிறுபறை(திரு.197)
சீறடி( திரு.13, பொரு.42, சிறு.32, மலை.43)
சீறியாழ்(சிறு.35, நெடு.70, பொரு.109, மது.559)
சீறுரல்(பெரு.54)
சீறூர்(பெரு.191)
சுடுமண்(பெரு.405)
சூழ்மகள்(பெரு.136)
செங்கண்( மலை.406, பட்.280)
செங்காந்தள்(குறி.62, மலை.145)
செங்கால்(திரு.21)
செங்குரலி(குறி.82)
செங்கேழ்(நெடு.58)
செங்கோல்( பொரு.230, பெரு.36)
செஞ்சுவர்(மது.485)
செஞ்சுளை(பொரு.192)
செஞ்சோறு(பொரு.183)
செஞ்ஞாயிறு(மது.7)
செந்தினை(திரு.242)
செந்தீ(சிறு.156, பெரு.498, மது.700)
செந்நிலம்( பொரு.43, பெரு.127, மலை.507, முல்.97)
செந்நீர்(மது.410)
செந்நூல்(திரு.231)
செந்நெருப்பு(நெடு.66)
செந்நெல்( பெரு.230, பட்.13)
செந்நெறி(மலை.258)
செம்பொறி(திரு.105, குறி.123)
செம்பொன்(சிறு.75)
செம்மருது(பொரு.189)
செம்முகம்(நெடு.153)
செவ்வரி(நெடு.17)
செவ்வரை(திரு.206, பெரு.103)
செவ்வாய்(பெரு.412)
செவ்விரல்(நெடு.144)
செவ்வீ(மலை.434)
செவ்வேள்(பட்.154)
சேவடி(திரு.62, பட்.146)
ஞெமன்கோல்(மது.491)
ஞெலிகோல்(பெரு.178)
தலைக்கோல்(மலை.370)
தலைக்கோள்(பொரு.142)
தலைநாள்(சிறு.147, மலை.305, 565)
தலைபெயல்(திரு.9)
தவப்பள்ளி(பட்.53)
தாதணி(மது.462)
திருநகர்( மது.216, நெடு.90, மலை.548)
திருநுதல்(திரு.24, பொரு.25)

திருமணி(திரு.84)
திருமணி(மது.273, மலை.516, முல்.63)
திருமழை(மலை.1)
திருமுகம்(சிறு.73, மது.448)
தீங்கரும்பு(பொரு.216)
தீங்கழை(மலை.119)
தீங்கனி(சிறு.101, குறி.188)
தீங்குழல்(குறி.222, மலை.8)
தீஞ்சாறு(பெரு.262)
தீஞ்சேறு(மது.400)
தீந்தயிர்(பெரு.158)
தீந்தொடை(நெடு.68)
தீநீர்(பெரு.357)
தீம்பழம்(மலை.337)
தீம்பால்(மலை.409)
துகிலணி(சிறு.262)
துணிநீர்(மது.283)
தூநிறம்(நெடு.132)
தூமடி(நெடு.135)
தூமலர்(மலை.57)
தெய்வத்தாமரை(சிறு.73)
தெவ்வுப்புலம்(சிறு.246)
தேனெய்(பொரு.214)
தொடுதோல்(பெரு.169, மது.636,
பட்.265)
தொல்கதி(பொரு.121)
தொல்குடி(திரு.178)
தொல்பசி(பெரு.253)
தொல்பதி(மலை.567)
தொல்லிசை(பட்.12)
நடுகல்(பட்.79)
நடுநாள்(முல்.50)
நந்தாவிளக்கு(பட்.247)
நல்யாழ்(மது.584)
நல்லாசிரியர்(மது.761)
நல்லான்(பெரு.165)
நல்லிசை(சிறு.82, மது.209, மலை.388)
நல்லில்(பட்.263)
நல்லிறைவன்(பட்.120)
நல்லூழி(மது.21)
நல்லேறு(மலை.335)
நல்லோர்(மது.173)
நல்வழி(மலை.387)
நல்வேள்வி(மது.760)
நள்ளிருள்(பொரு.72, பெரு.155,
மலை.195)
நறுஞ்சாந்து(மது.226)
நன்கலன்(மது.322)
நன்கொடி(மது.371)
நன்பகல்(திரு.130, பொரு.46, மது.546)
நன்மாந்தர்(மது.20)
நன்மான்(பொரு.138)
நன்மொழி(திரு.268, பொரு.24, குறி.234,
சிறு.93, முல்.17)
நன்னகர்(திரு.160, பெரு.298)
நன்னாடு( பொரு.137, சிறு.109, மது.331)
நன்னாள்(மது.592)
நாடகமகளிர்(பெரு.55)
நாண்மீன்(பட்.68)
நாவாய்(மது321)
நாளங்காடி(மது.430)
நான்மலர்(சிறு.23)
நான்மறையோர்(பட்.202)
நான்மோர்(பெரு.160)
நிலநாடு(மலை.192)
நிலவுரல்(பெரு.96)
நுனைமகள்(சிறு.158)
நூல்நெறி(சிறு.230)
நூல்வழி(மது.646)
நெடுவேள்(குறி.174)
பகைப்புலம்(மது.689)
பகைமுனை(மது.402)
பசும்பொன்(மது.410)
பட்டுடை(பொரு.155)
பண்ணியக்கடை(மது.661)
பழங்குடி(மலை.479)
பழுமரம்( திரு.45, பெரு.20, பட்.92,
மது.629, முல்.4)
பனித்துறை(மது.586)
பனிநீர்(சிறு.153)

பனிவரை(சிறு.240)
பனைமீன்(மது.375)
பாடுதுறை(சிறு.228)
பாண்மகள்(பெரு.284)
பாண்மகன்(சிறு.37)
பால்மதி(சிறு.219)
பால்முலை(சிறு.131)
பிடிக்கணம்(சிறு.124, முல்.69)
பிணிமுகம்(திரு.247)
புத்தேளுலகம்(மது.698)
புதுப்பெயல்(நெடு.2)
புதுமலர்(மது.564)
புரைத்தோல்(மலை.88)
புலவுக்கயல்(சிறு.181)
புலிக்குரல்(பெரு.156)
புலிப்பொறி(நெடு.126, பட்.40)
புள்ளணி(திரு.151)
புள்ளினம்(குறி.228, மலை.55)
புளிங்கூழ்(மலை.435)
பூஞ்சுமடு(பெரு.159)
பூத்திரள்(மது.341)
பூந்தலை(மது.396)
பூந்துகில்(நெடு.145)
பெருங்கடல்(மது.540)
பெருங்கல்(திரு.314)
பெருந்தகை(குறி.179)
பெருந்திறல்(மது.234)
பெருந்துறை(பெரு.389)
பெருந்தொழுவர்(மது.122)
பெருநாள்(பெரு.296)
பெருநீர்(பெரு.432, மது.321)
பெருமகன்(சிறு.86, பெரு.101)
பெருமுலை(திரு.50)
பெருவரை(மது.374)
பெருவழி(பெரு.81, முல்.97)
பெருவிரல்(குறி.199)
பெருவிறல்(பெரு.178)
பேய்மகள்(திரு.51, சிறு.197, பட்.260)
பேய்மகளிர்(மது.25)
பேரஞர்(பொரு.88)
பேரிசை(சிறு.125, மது.618, மலை.82)
பேரியாழ்(பொரு.168, பெரு.462, மலை.37)
பேரியாறு(696)
பேருதவி(மது.60)
பேருலகம்(மது.133)
பேரூர்( பொரு.1, பெரு.254)
பொருதுகளம்(பெரு.415)
பொற்கலம்(சிறு.244)
பொற்சிலம்பு(மது.444)
பொன்னுரை(திரு.145)
போர்க்களம்(மது.28)
மகிழ்ப்பதம்(பொரு.111)
மடக்கண்(மது.412)
மடமகள்(திரு.101)
மடமங்கையர்(மது.159)
மடமான்(முல்.99)
மடமொழி(மது.418)
மணநிறம்(குறி.112)
மணிச்சிகை(குறி.64)
மணைநொச்சி(பொரு.185)
மதலைப்பள்ளி(நெடு.48)
மலைமகள்(திரு.257)
மறமைந்தர்(மது.53)
மறைகாப்பாளர்(பெரு.301)
மனைக்கோழி(பொரு.223)
மாக்கண்(மது.733)
மாசுணம்(மலை.261)
மாநிலம்(சிறு.1)
மாநிழல்(மலை.271)
மாமலர்(பெரு.5, 216)
மாமலை(பொரு.235, குறி.227, மது.301, மலை.157, 361, பட்.95)
மாமழை(திரு.7)
மாமுகம்(திரு.303)
மால்வரை(திரு.12)
மாவிசும்பு(மது.495)
மான்கணம்(குறி.217)
மான்குறை(பொரு.217)
மீன்குறை(மது.320)

மீனெய்(பொரு.215)
முக்கோல்(முல்.38)
முடக்காஞ்சி(பொரு.189)
முதுபொழில்(மது.190)
முதுவாய்இரவலன்(திரு.284)
முருகியல்(திரு.243)
முலைக்கோள்(பொரு.141)
முழந்தாள்(பெரு.53, மலை.127)
முழவுதோள்(மது.99)
மூதூர்(சிறு.201, குறி.236, நெடு.29, பட்.215, மலை.93, முல்.7)
மூவெயில்(திரு.154)
மெய்ப்பை(முல்.60)
மென்மொழி(திரு.142)
மென்னூல்(மது.554)
மேல்புலம்(மது.303)
யாழ்வண்டு(பொரு.211)
யானைக்கோடு(மலை.154)
வஞ்சினம்(குறி.210)
வண்டினம்(மது.574)
வரைமந்தி(பொரு.224)
வழிநாள்(பொரு.2, சிறு.9)
வளர்பிறை(பெரு.472)
வன்கை(பெரு.170, மது.319)
வன்சோல்(மது.311)
வன்புலம்(பெரு.205)
வன்றொடர்(மது.382)
வாட்குடி(பெரு.137)
வாடூன்(பெரு.100)
வாய்ப்புள்(முல்.18)
வாய்மொழி(மது.19, பட்.208)
வாயுரை(நெடு.140)
வார்கோலை(குறி.169)
வாலரிசி(பட்.165)
வாள்மதி(திரு.87)
வான்கலம்(பெரு.477)
வான்கோடு(திரு.305, மது.407)
வான்பூ(நெடு.13)
வான்பொய்கை(பட்.38)
வான்மதி(சிறு.251)
வானரமகளிர்(மலை.294)
வானவமகளிர்(மது.582)
வானூல்(நெடு.59)
விரவுமொழி(மலை.327)
விழவுக்களம்(குறி.192)
விறல்வேல்( திரு.38, சிறு.173, 247, மது.344)
விறல்வேள்(மலை.164)
விறற்களம்(திரு.55)
வெஞ்சினம்(குறி.254)
வெஞ்சோறு(சிறு.175)
வெண்குடை(சிறு.64, நெடு.184)
வெண்கை(பெரு.71, மலை.28)
வெண்கோயில்(பட்.50)
வெண்சோறு(மலை.465)
வெண்ணெல்(பெரு.255, மது.288, மலை.123, 471)
வெண்திங்கள்(மது.8)
வெண்பல்( பொரு.28, பெரு.94)
வெண்பொரி(திரு.231)
வெண்மணல்(நெடு.16, பட்.161)
வெண்மழை(நெடு.19, முல்.100)
வெண்மீன்(பட்.1)
வெம்பரல்(சிறு.9)
வெம்முலை(சிறு.26)
வெள்ளரிசி(திரு.233)
வெள்ளருவி(குறி.55, மது.299)
வெள்ளரை(மலை.562)
வெள்ளுப்பு(மது.318)
வெள்ளேறு(திரு.151)
வெறிக்களம்(மது.284, மலை.150)
வெண்கோடு(பெரு.263)
வேண்டுபுலம்(மது.150, முல்.90)
வேலூர்(சிறு.173)
வேனிற்பள்ளி(நெடு.61)

## பலசொல் கூட்டுப்பெயராக்கச் சொற்கள்

அடிபுதையரணம்(பெரு.69)
அவிர்சடைமுனிவர்(பட்.54)
அழுகுரற்கூகை(பட்.258)
அறம்கூறவையம்(மது.492)
ஆலமர்செல்வன்(சிறு.97)
ஆறலைக்கள்வர்(பொரு.21)
இருங்கோவேள்(பட்.282)
இளம்பல்கோசர்(மது.773)
உயர்நிலைஇதணம்(மலை.204)
உயர்நிலைஉலகம்(மது.179, 471)
எழுநிலைமாடம்(முல்.86)
கரிகால்வளவன்(பொரு.148)
குழவித்தீநீர்(பெரு.35)
குறுநிலமன்னர்(மது.776)
குறுநீர்க்கன்னல்(முல்.58)
செங்கட்சேவல்(சிறு.184)
செங்கால்லன்னம்(மது.386)
செங்காற்சேவல்(பெரு.439, நெடு.45)
செங்கேழ்வட்டம்(நெடு.58)
செம்பொன்மாலை(பெரு.241)
செவ்வரிகயல்(பெரு.270)
செவ்வேற்சேஎய்(திரு.61)
தன்பரங்குன்று(மது.263)
திணைகுறுமகளிர்(மலை.342)
திருகிளர்செல்வன்(திரு.159)
திருமாவளவன்(பட்.299)
தொடுதோல்அடியர்(பட்.265)
தொல்முதுகடவுள்(மது.41)
தொல்லாணை நல்லாசிரியர்(பட்.170)
தொன்மாஇலங்கை(சிறு.119)
தொன்முதுபெண்டிர்(மது.409)
நல்லியக்கோடன்(சிறு.126)
நன்மாஇலங்கை(சிறு.120)
நான்முகஒருவன்(பெரு.403)
நூலறிபுலவர்(நெடு.76)
நெய்மிதிகவளம்(பெரு.394)
பல்காற்பறவை(பெரு.183)
பல்சாலைமுதுகுடிமி(மது.759)
பல்லியக்கோடியர்(சிறு.125)
பல்வரிகொடுஞ்சிறை(திரு.150)
பழஞ்சோற்றமலை(பெரு.224)
பழமுதிர்சோலை(திரு.317)
பாம்பணைப்பள்ளி(பெரு.373)
புலம்பெயர்மாக்கள்(பட்.217)
பூந்தலைகுந்தம்(முல்.41)
பூந்தொடிமகளிர்(குறி.224)
பெருமுதுபெண்டிர்(முல்.11)
பேரிளம்பெண்டிர்(மது.405)
பேருன்சோறு(மது.533)
பொறிமயிர்வாரணம்(மது.673)
பொன்துஞ்சுவியன்நகர்(பெரு.440)
மயிர்குறைகருவி(பொரு.29)
மலரணிவாயில்(பட்.160)
மான்தோற்பள்ளி(பெரு.89)
முதுநீர்ப்பொய்கை(பெரு.294)
முதுவாய்க்கோடியர்(பட்.253)
முதுவெள்ளிலை(மது.119)
முந்நீர்வண்ணன்(பெரு.30)
மூன்றுபுரிநுண்ஞாண்(திரு.183)
வடபெருங்கல்(மது.70)
வாள்தோள்கோத்தகாளை(நெடு.182)
வெண்டிரைப்பரப்பு(பெரு.457)
வெறியாடுமகளிர்(பட்.165)

## கூட்டு வினையாக்கச் சொற்கள்

*ஆற்றுப்படுப்ப(சிறு.39)*
*ஆற்றெதிர்ப்படுதலும்(பொரு.59)*
*ஊர்தர(மது.172)*
*ஓடியாடவும்(பட்.295)*
*கடலாடி(பட்.99)*
*கடையடைத்து(சிறு.138)*
*கண்கூடு(பெரு.8)*
*கண்விடுத்த(சிறு.205)*
*களம்படுத்த(நெடு.171)*
*கள்ளடு(பெரு.331)*
*கறிகலந்து(பெரு.307)*
*காத்திருக்கும்(பெரு.273)*
*குடியகற்றி(மது.766)*
*கைதொழுது(குறி.209)*
*கைபுணர்ந்து(பெரு.334)*
*கைபுனை(பெரு.234)*
*கையெறிந்து(மது.419)*
*கொள்ளைசாற்றி(பெரு.64)*
*தலைபெயரும்(மது.686)*
*தளையவிழ்(சிறு.161)*
*நூழிலாட்டி(மலை.87)*
*நெஞ்சாற்றுப்படுத்த(முல்.81)*
*பண்ணமைத்து(மலை.2)*
*பதனறிந்து(பொரு.102)*
*பார்த்திருக்கும்(பெரு.110)*
*புடைசூழ்(பெரு.364)*
*புடைநெறித்து(சிறு.5)*
*புலம்பெயர்(மலை.392)*
*புனலாடு(பெரு.312)*
*வளம்பெருக்கி(பட்.284)*

## விகுதிவழிச் சொல்லாக்கச் சொற்கள்

**அகம் விகுதி**

*அவையகம்(மது.508)*
*உள்ளகம்(பொரு.6, குறி.61)*
*கதுப்பகம்(பொரு.485)*
*கல்லகம்(மது.290)*
*காழகம்(திரு.184, மது.598, சிறு.6, பட்.191)*
*குன்றகம்(திரு.195, மலை.344)*
*சிலம்பகம்(திரு.40, மது.299)*
*நீரகம்(மலை.81)*
*பிணியகம்(பட்.222)*
*பூணகம்(சிறு.26)*
*வயிற்றகம்(சிறு.58)*
*வரைப்பகம்(பொரு.240)*
*விடரகம்(மது.308, குறி.261, மலை.366)*
*வியலகம்(சிறு.114)*
*வையகம்(சிறு.92, முல்.57, நெடு.1)*

**அம் விகுதி**

*உலகம்(திரு.1, 124, 161,293, பொரு.176, பெரு.321, 410, 416, முல்.1, மது.23, 199, 237, குறி.24, மலை.70, 541)*
*கானம்(திரு.9, சிறு.225, பொரு.23, 176, முல்.97, மது.148, நெடு.129, குறி.160, 227, பட்.300, மலை.54,69, 242, 385, 405, 517)*
*நெஞ்சம்(திரு.65, 100, மலை.285)*
*அடுக்கம்(திரு.42, மலை.141, 239, 289, 359)*
*முரசம்(திரு.121, மது.80, 232, 349, 733, பட்.236)*
*குன்றம்(திரு.266, பெரு.19, 49, மது.313, 547, மலை.275)*
*உளியம்(திரு.313, குறி.252)*
*நோக்கம்(பொரு.124, குறி.25, மலை.240)*
*வேட்டம்(பொரு.142, நெடு.129, பட்.92)*
*வானம்(பொரு.236, பெரு.24, 190, 292, 302, 346, 409, 413, 480, 483, நெடு.2, குறி.48, 227, பட்.283, முல்.98, மது.267, 479, 681)*
*முத்தம்(சிறு.57, மது.315, 505, 681)*
*உள்ளம்(சிறு.145, பொரு.45, 446, மது.205, மலை.588, 560)*
*அரவம்(சிறு.103, குறி.255)*
*கதவம்(சிறு.80, மது.667, நெடு.63, 81)*
*சுற்றம்(பெரு.21, 234, 441, மது.227, குறி.151)*
*அவலம்(பெரு.38, மலை.283)*
*எஃகம்(பெரு.119, முல்.68, மது.739, நெடு.176, மலை.129, 490)*
*மன்றம்(பெரு.143, 423, பட்.69, 255)*
*வட்டம்(பெரு.378, நெடு.58)*
*ஆலயம்(பெரு.311)*
*துறக்கம்(பெரு.388)*
*தோற்றம்(முல்.60, பட்.139)*
*விளக்கம்(முல்.63, மது.556, 580, 719, நெடு.144)*
*ஆக்கம்(மது.496)*
*அமுதம்(மது.மது.601)*
*தட்டம்(நெடு.126)*
*நறவம்(குறி.91)*
*நாகம்(குறி.157)*
*முற்றம்(பட்.51)*
*செப்பம்(மலை.160, 197)*
*இயக்கம்(மலை.374)*
*வருத்தம்(மலை.437, 575)*

**அர் விகுதி**

*அகவர்(பொரு.220)*
*ஆடவர்(மது.746, நெடு.107, 171)*
*இருவர்(திரு.178)*
*உடுக்கையர்(திரு.126)*
*உழவர்(சிறு.190, பெரு.197, 355, பட்.205, மலை.60)*
*உழையர்(முல்.66)*
*உளியர்(மது.641)*
*எழுவர்(சிறு.113)*
*கண்ணர்(மது.644)*
*காட்சியர்(திரு.135)*
*காதலர்(மது.663, நெடு.71)*
*காவலர்(சிறு.47, 63, 77, பெரு.51, குறி.240)*
*குடவர்(பட்.276)*
*கூளியர்(திரு.282)*
*கொம்பர்(சிறு.179)*
*கொள்கையர்(மது.644)*
*செவிலியர்(நெடு.158)*
*தலைமையர்(திரு.134)*
*தலைவர்(திரு.162, முல்.20)*
*திமிலர்(மது.319)*
*திறையர்(முல்.19)*
*தெவ்வர்(பொரு.120, 133, பெரு.118, 419, 491, முல்.18, மது.139, 189, 196, பட்.299, மலை.86, 386, 397, 488)*
*தொழுவர்(நெடு.49)*
*நன்னர்(முல்.17)*
*பகைவர்(பெரு.450, முல்.77, மது.176, 201)*
*பரிசிலர்(திரு.273, சிறு.218, மலை.43)*
*மங்கையர்(முல்.47, மலை.58)*
*முடுக்கர்(மலை.213)*
*மேனியர்(திரு.144)*
*யாக்கையர்(திரு.130)*
*வடவர்(நெடு.51, பட்.276)*
*வயவர்(பட்.276)*
*விறலியர்(பொரு.110, சிறு.30, பெரு.486, மது.218, மலை.46, 201, 358,536, 569)*

**அல் விகுதி**

*அசையல்(குறி.180)*
*அஞ்சல்(திரு.291, குறி.181)*
*அடுக்கல்(மலை.19)*
*அரியல்(பொரு.281)*
*ஆடல்(நெடு.67)*
*ஆற்றல்(மலை.73)*
*இயங்கல்(மலை.277)*
*சாயல்(மலை.61)*
*செப்பல்(குறி.12)*
*தூற்றல்(மலை.363)*
*தெரியல்(பொரு.144, சிறு.161, மது.437, 718)*
*தேறல்(சிறு.237, மலை.171)*
*தொடையல்(பொரு.18, குறி.115)*
*நோக்கல்(மலை.240)*
*பிணையல்(திரு.30, மலை.349)*
*மன்றல்(குறி.21)*

**அன் விகுதி**

*ஆடையன்(திரு.206)*
*இடையன்(பெரு.175)*
*கச்சினன்(திரு.207)*
*கண்ணியன்(திரு.192, 207)*
*கழலினன்(திரு.207)*
*காதினன்(திரு.207)*
*கொடியன்(திரு.211)*
*கோட்டன்(திரு.209)*
*சிறுவன்(பொரு.130)*
*தலைவன்(மது.772, மலை.569)*
*திரையன்(பெரு.37)*
*நன்னன்(மது.618)*
*நாடன்(சிறு.87, 107, பெரு.103, மது.524, குறி.199)*
*நெடியன்(திரு.211)*
*மஞ்ஞையன்(திரு.210)*
*வேலன்(திரு.222)*

**ஆர் விகுதி**

*சிறாஅர்(பொரு.223, 248)*

**ஆளர் விகுதி**
*அருவாளர்(பட்.275)*
*இருபிறப்பாளர்(திரு.182)*
*காப்பாளர்(பெரு.301, மது.647)*
*பெருமூதாளர்(முல்.54)*

**இ விகுதி**
*அலரி(முல்.10, குறி.149, 197, மலை.195)*
*இயலி(மது.666)*
*உருளி(பெரு.47)*
*ஊழி(பட்.227)*
*எழிலி(முல்.5)*
*கவினி(மது.326, 503, 530, 698)*
*குமிழி(மலை.213, 474)*
*கோளி(பெரு.407)*
*சிமிலி(மது.483)*
*தோன்றி(முல்.96)*
*நாறி(குறி.94)*
*நெகிழி(மலை.446)*
*வாழி(குறி.94)*
*வானி(குறி.69)*
*விறலி(பொரு.110, சிறு.30, மது.218)*

**இசில் விகுதி**
*அடிசில்(பெரு.476)*

**இயம் விகுதி**
*மண்ணியம்(மது.422, 506)*

**இயர் விகுதி**
*பாட்டியர்(மது.749)*

**இயல் விகுதி**
*அரசியல்(மது.191)*
*துளங்கியல்(சிறு.262, மலை.43)*
*மெல்லியல்(நெடு.98, 151)***இர் விகுதி**
*பெண்டிர்(பெரு.251, மது.166, மலை.320)*
*மகளிர்(திரு.147, 205, பொரு. 85, 241, பெரு. 312, 339, 387, மது.97, 555, 579, 603, 623, 650, 779, நெடு.39, 67, 120, 151, குறி .175, 195, பட் .22, 91, 109, 11ட, 296, மலை.1909, 329)*

**இல் விகுதி**
*தூண்டில்(பெரு.285, பட்.80, மலை.456)*
*பரிசில்(திரு.273, 295, சிறு.218, 261, மலை.187, 492)*
*மன்றில்(மலை.492)*
*வாயில்(மலை.491)*

**ஐ விகுதி**
*கோடை(பெரு.272)*
*தட்டை(குறி.43, மலை.9)*
*வேளை(மலை.94)*

**ஓர் விகுதி**
*நூலோர்(பெரு.487)*
*மேலோர்(மது.381)*

**ஞர் விகுதி**
*அறிஞர்(குறி.18, மலை.287)*
*இளைஞர்(பொரு.100, முல்.36, மது.311, குறி.129)*
*களைஞர்(பெரு.213)*
*வலைஞர்(பெரு.274, மது.256, பட்.197)*
*விலைஞர்(பட்.198)*
*வினைஞர்(சிறு.257, பெரு.211, 223, 231, மது.262, 518, 539)*

**க்கை/கை விகுதி**
*ஈகை(மலை.72)*
*வாழ்க்கை(பெரு.40, 136, பட்.204)*

**ச்சி விகுதி**
*சூழ்ச்சி(மலை.62)*

**தி விகுதி**
*கெடுதி(குறி.144)*

**ந விகுதி**

பொருந(திரு.276, பொரு.3, மது.138)

**நர் விகுதி**

அரிநர்(மலை.471)
அறியுநர்(குறி.4)
இகழுநர்(மலை.73, 482)
இயங்குநர்(மலை.78)
உடற்றுநர்(மலை.426)
உண்ணுநர்(மலை.138, 445)
உறுநர்(திரு.4)
ஓச்சுநர்(மது.321)
ஓம்புநர்(மலை.426)
கடைநர்(மது.511)
கழியுநர்(பெரு.66)
காணுநர்(மது.597, மலை.476)
கொழுநர்(மலை.302)
செறுநர்(திரு.5, மது.152)
தாங்குநர்(பெரு.18)
நசையுநர்(திரு.270, பொரு.66)
பகர்நர்(மது.117, 506, 513)
புகழுநர்(மலை.73)
புரையுநர்(திரு.280, மலை.328)
புனைநர்(மது.512)
பொருநர்(திரு.69, சிறு.203, மது.99)
முடிநர்(மது.514)
வதியுநர்(முல்.80, மலை.492)
வருநர்(குறி.202)
வழங்குநர்(பெரு.400)
வேண்டுநர்(திரு.248, பெரு.443)

**ப்பு/பு விகுதி**

கண்பு(பெரு.220)
காண்பு(மலை.315)
பணிபு(பட்.274)
வரைப்பு(பெரு.18)

**மர் விகுதி**

காண்மர்(மது.513)

**மை விகுதி**

ஆண்மை(மலை.423)
தலைமை (திரு. 134)

**வ விகுதி**

கிழவ(பொரு.63)
சிறுவ(திரு.258)
தலைவ(திரு.260, பொரு.57)

**வி விகுதி**

கருவி(பெரு.24, பொரு.29, 236)
கேள்வி(சிறு.228)
புரவி(பெரு.320, மது.660)

**வை விகுதி**

சிதர்வை(பெரு.468)
நடவை(மலை.432)
மிதவை(மலை.417)

## கடனாக்கச் சொற்கள்

அங்கி(பட்.54)
அங்குசம்(திரு.110)
அஞ்சனம்(முல்.93)
அண்ணம்(பெரு.221)
அத்தம்(பெரு.39)
அதிகன்(சிறு.103)
அந்தரம்(திரு.119)
அந்தி(மது.427,460, பொரு.46, பெரு.413, குறி.325)
அமயம்(குறி.45, நெடு.75, மலை.375, மது.477)
அமர்(பெரு.416)
அமரர்(பட்.184, குறி.25, சிறு.97, திரு.255, மது.39, முல்.67)
அமிழ்து(சிறு.101, மது.197)
அமையம்(மது.373)
அரசு(பொரு.55)
அரமியம்(மது.451)
அரவம்(சிறு.103)
அரி(பெரு.490, பட்.298)
அவுணர்(திரு.59)
அவை(பொரு.55)
அறன்(பட்.79)
அன்னம்(மது.386)
ஆசிரியர்(பட்.170)
ஆணை(பட்.170)
ஆதி(மது.390)
ஆயிரம்(பொரு.247)
ஆரம்(சிறு.2, குறி.93, திரு.104, நெடு.46, பட்.188)
ஆலை(பட்.52)
ஆவணம்(பட்.158)
ஆவுதி(மது.494, பட்.55, 200)
இமயம்(சிறு.48)
இருபிறப்பாளர்(திரு.182)
உமை(திரு.153)
உருவம்(பொரு.130, திரு.241, மது.625, 632)
உரோகிணி(நெடு.163)
உலகம்(பெரு.32, குறி.24, திரு.293, பொரு.176, மது.23, முல்.1, மலை.70)
உல்கு(பெரு.81)
உவமம்(மது.516)
ஊசி(பொரு.100)
எந்திரம்(பெரு.260, மது.258)
ஏணி(பெரு.245)
ஏம்(முல்.27)
ஏமம்(குறி.32, பெரு.66, 421, மது.652, முல்.54)
ஒட்டகம்(சிறு.164)
ஓணம்(மது.591)
கங்கை(பெரு.431, மது.696, பட்.190)
கச்சம்(மது.436)
கச்சு(முல்.47)
கச்சை(சிறு.239)
கண்டம்(முல்.44)
கணம்(முல்.69, குறி.217, சிறு.124, திரு.76, பட்.259, பெரு.234, மது.590, மலை.44)
கலாபம்(சிறு.15, 264)
களன்(மது.48)
காசு(திரு.16)
காமம்(திரு.134, பட்.39)
காலை(பொரு.89)
கிண்கிணி(திரு.13)
கின்னரம்(பெரு.494)
குடம்(பெரு.382)
குமரி(பெரு.247, மது.70)
கோபம்(சிறு.168, திரு.15)
கோவலர்(பெரு.116, முல்.15)
சகடம்(பெரு.50)
சதுக்கம்(திரு.225)
சந்தி(திரு.225)
சமம்(சிறு.112, குறி.229, மது.593, பட்.238, திரு.99)
சலம்(மது.112)
சாகவர்(மது.478)
சாடி(பெரு.280)
சாபம்(பெரு.121)
சாலி(பொரு.246)
சாலேகம்(நெடு.125)
சாலை(பட்.52)
சாவகர்(மது.476)
சாவம்(சிறு.98)

சிதை(பெரு.208)
சிந்தித்து(முல்.74)
சிந்துவாரம்(குறி.89)
சிமையம்(பெரு.429)
சூதர்(மது.670)
சேமம்(குறி.156)
தகரம்(குறி.108)
தச்சர்(பெரு.248)
தசநான்கு(நெடு.115)
தமனியம்(சிறு.147, பெரு.332, மது.704)
தவம்(பொரு.91)
தாது(திரு.36,குறி.106, பட்.152, மது.338, மலை.531)
தாயம்(பொரு.132)
தானை(பொரு.54)
திசை(பட்.2)
திரு(பொரு.25)
திலகம்(குறி.74, திரு.24, மலை.520)
தூண்(பட்.250)
தூணி(முல்.39)
தூரியம்(மது.460)
தெய்வம்(சிறு.73, திரு.160, நெடு.77, பட்.159)
தேஎம்(பொரு.134)
நந்தி(குறி.91, 192)
நாகம்(சிறு.96, பெரு.55, பொரு.209, குறி.94, நெடு.117, மலை.520)
நாவாய்(பெரு.321)
நிதி(மது.203)
நிதியம்(சிறு.249)
நியமம்(மது.365, மலை.480)
நீலம்(மது.279)
நுகம்(பெரு.62)
நூபுரம்(சிறு.184)
நேமி(சிறு.253, மலை.238, 525)
படம்(பெரு.69, முல்.66)
படிவம்(முல்.37)
பண்டம்(மது.81, 503,537 பட்.131, 136, 211)
பண்ணியம்(மது.405, 422, 506, பட்.203)
பதம்(சிறு.9, நெடு.41, பட்.203, பெரு.105, பொரு.111, மலை.108)
பதாகை(பட்.182, மது.373)
பரிகாரம்(சிறு.104)
பருதி(பெரு.2)
பருமம்(திரு.146, நெடு.179)
பருவம்(சிறு.250)
பலாசம்(குறி.88)
பலி(பொரு.183, திரு.234, பெரு.233, மது.459, பட்.165)
பளிங்கு(குறி.57, மலை.516)
பனியம்(பட்.164)
பார்ப்பான்(முல்.37)
பிடகை(மது.397)
பிண்டி(மது.701, குறி.88, திரு.31)
புண்ணியம்(பட்.204)
புருவம்(பொரு.26)
பூதம்(பெரு.235, பட்.57)
மகம்(பட்.35)
மகரம்(திரு.25)
மட்டு(பட்.108)
மண்டிலம்(பெரு.442, குறி.216, நெடு.73, மது.190)
மணி(பொரு.)
மது(பொரு.217, பட்.108)
மதுரை(மது.699)
மாகதர்(மது.670)
மிலேச்சர்(முல்.66)
முகம்(சிறு.73)
முத்து(பொரு.162)
முனிவர்(திரு.137, பட்.54, பெரு.498)
மோதகம்(மது.626)
யவனர்(முல்.61, நெடு.101, பெரு.316)
யாமம்(மது.658, நெடு.186)
யூபம்(மது.27)
வட்டம்(திரு.111, பெரு.378)
வண்ணம்(பொரு.203, குறி.114)
வரம்(திரு.94)
வலி(முல்.61)
விசயம்(முல்.91, பெரு.261, மது.625)
விடை(பெரு.143)
விலோதம்(மது.449)
வேதம்(மது.468, 656)
வைதாளிகர்(மது.671)

## இரட்டிப்பாக்கச் சொற்கள்

அரணம் அரணம்(முல்.42)
அவை அவை(மலை.267, பொரு.107)
இடை இடை(குறி.100)
ஊழின் ஊழின்(பொரு.106)
ஒருமுகம் ஒருமுகம்(திரு.92)

ஒருவிர் ஒருவிர்(மலை.218)
ஓதி ஓதி(சிறு.22)
காட்டவும் காட்டவும்(முல்.22)
குரல் குரல்(சிறு.229)
கொளக்கொள(மது.426)
தரத்தர(மது.426, பொரு.127)
துறை துறை(மது.340)
பிற பிற(பட்.181)
பிறர் பிறர்(பொரு.174)
மகமுறை மகமுறை(பெரு.478)
மயில் மயில்(சிறு.16)
மனை மனை(மது.423)
மா மா(பொரு.180)
முறை முறை(நெடு.177)
வண்ண வண்ண(குறி.114)
வயின் வயின்(சிறு.163, பொரு.180)
வழி வழி(மது.194, 324)
வேண்டுப வேண்டுப(பெரு.444)
வேறு வேறு(பட்.214, மது.617)
வைகல் வைகல்(பொரு.158)

## பதிலீட்டாக்கச் சொற்கள்

எந்தை(குறி.20)
சோணாடு(பட்.28)

## தமிழ்ப்படுத்தம் செய்த சொற்கள்

அந்தி(பொரு.46)
ஆணை(பட்.170)
உவமம்(மது.516)
ஏமம்(குறி.54)
நியமம்(மது.365)
பண்டம்(பட்.131)
பண்ணியம்(மது.506)
பளிங்கு(குறி.57)
வண்ணம்(குறி.31)

## கலப்பாக்கச் சொற்கள்

இருபெருநியமம்(மது.365)
எழுசமம்(சிறு.112)
சில்பலி(திரு.234)
தசநான்கு(நெடு.115)
தவப்பள்ளி(பட்.53)
தொல்லாணை(பட்.170)
நடைபரிகாரம்(சிறு.104)
பண்ணியக்கடை(மது.661)
பலபண்டம்(பட்.131)
பல்பண்டம்(பட்.211)
பலிப்புதவு(பட்.179)
மலிபண்டம்(பட்.136)

## முன்னொட்டாக்கச் சொற்கள்

உரோகிணி(நெடு.163)
திருநகர்(மது.216, நெடு.90, மலை.548)
திருநுதல்(திரு.24, பொரு.25)
திருமணி(திரு.84, மது.273, 505, 511, முல்.63)
திருமழை(மலை.1)
திருமுகம்(சிறு.73, 157, மது.448)

## எளிமையாக்கச் சொற்கள்

அருவாளர்(பட்.275)
குடவர்(பட்.276)
வடவர்(பட்.276)

## பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள விகுதிகள்

| விகுதிகள் | திரு | பொரு | சிறு | பெரு | முல் | மது | நெடு | குறி | பட் | மலை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அகம் | √ | √ | √ | √ | √ | √ | √ | √ | √ | √ | 10 |
| அம் | √ | √ | √ | √ | √ | √ | √ | √ | √ | √ | 10 |
| அர் | √ | √ | √ | √ | √ | √ | √ | √ | √ | √ | 10 |
| அல் | √ | √ | √ | √ | | √ | √ | √ | | √ | 08 |
| அன் | √ | √ | √ | √ | | √ | | √ | | √ | 07 |
| ஆர் | | | | √ | | | | | | | 01 |
| ஆளர் | √ | | | √ | √ | √ | | | √ | | 04 |
| இ | | √ | √ | √ | √ | √ | | √ | √ | √ | 08 |
| இசில் | | | √ | √ | | | | √ | | | 03 |
| இயம் | | | | | | √ | | | | | |
| இயர் | | | | | | √ | | | | | 01 |
| இயல் | | | √ | | | √ | √ | | | √ | 04 |
| இர் | √ | √ | √ | √ | | √ | √ | √ | √ | √ | 09 |
| இல் | √ | | √ | √ | | | | | √ | √ | 05 |
| ஐ | | | | √ | | | | √ | | √ | 03 |
| ஓர் | √ | | | √ | | √ | | | | | 03 |
| க்கை | | | | √ | | | | | √ | √ | 03 |
| கை | | | | | | | | | | √ | 01 |
| ச்சி | | | | | | | | | | √ | 01 |
| ஞர் | | √ | √ | √ | √ | √ | | √ | √ | √ | 08 |
| தி | | | | | | | | √ | | | 01 |
| ந | √ | √ | | | | √ | | | | | 03 |
| நர் | √ | √ | √ | √ | √ | √ | | √ | | √ | 08 |
| ப்பு | | | | √ | | | | | | | 01 |
| பு | | | | √ | | | | | √ | √ | 03 |
| மர் | | | | | | √ | | | | | 01 |
| மை | √ | | | | | | | | | √ | 02 |
| வ | √ | √ | | | | | | | | | 02 |
| வி | | √ | √ | √ | | √ | | | | | 04 |
| வை | | | | √ | | | | | | √ | 02 |